# ஆராய்ச்சி

# AARAAICHI

## காலாண்டு ஆய்வு இதழ்



நா. வானமாமலை
ஆசிரியர்



மலர் 5 17 இதழ் 1

**Statement about ownership and other particulars about the journal**

**AARAAICHI**

| | | |
|---|---|---|
| 1 | Place of pubiication | Palayamkottai. |
| 2 | Periodicitv of publication | Quartearly |
| 3 | Printer's Name | N. Vanamamrlai, Araaichi Press. |
| | Nationality | Indian. |
| | Address | 258, Tiruchendur Road, Palayamkottai Tirunslveli – 627002. |
| 4 | Publisher's Name | N. Vanamamalai |
| | Nationality, | Indian |
| | Address | 258, Tiruchendur Road Palayamkottai 627002 |
| 5 | Editor's Name | N. Vanamamalai |
| | Nationality | Indian |
| | Address | 285, Tiruchendur Road Palayamkottai 627002 |
| 6 | Names and addreses of individuals who own the newspaper and partners or share holders holding more than one percent of the total capital | N. Vanamamalai 258, Tiruchendur Road Palayamkottai 627002 Tirunelveli |

I, N. Vanamamalai hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief:

Dated 28.2.75

(Sd) N. Vanamamalai
Signature of Publisher

---


ஆராய்ச்சி

காலாண்டு ஆயவிதழ்.

மலர் 5 18 இதழ் 2


ஐந்தாம் ஆண்டில் இரண்டாம் முறையாக வெளிவரும் முழுமையான ஆய்வுக் கட்டுரைகளும், ஆய்வுச் செய்திகளும் கொண்ட சர்வதேசத் தரம் வாய்ந்த இவ்விதழின் 18ம் இதழ் ஜுன் மாதம் வெளியாகும்.

## கட்டுரைகள்

**இலக்கியம், நாட்டுப் பாடல்கள், வரலாறு, மானிடவியல், அறிவியல் முதலிய துறைகளில் கட்டுரைகள் வெளிவரும்.**

*ஆண்டுச் சந்தா — ரு 12*

558, திருச்செந்தூர் ரோடு
பாளையங்கோட்டை

நா. வானமாமலை.
ஆசிரியர்.

முத்தமிழ்ப்பண்ணை
21.4.75
15-6

# ஆராய்ச்சி

ஆய்விதழ்

## உள்ளே...

# CONTRIBUTORS

N. VANAMAMALAI, Editor. Aarraichi.

A.V. SUBRAMANIA AIYAR. Scholar well known to the readers of Aarraichi by his frequent contributions to this journal.

P. L. SWAMY. Secretary. Legislative Assembly, Pondichery. His Seientific articles have appeared tn the previous issues of the journal. His methoelology is interdisciplinary and comparative.

V. MEENAKSHI SUNDARAM. Works in the Department of Tamil, V. O. C. College, Tuticorin, His erudite scholarship of 'Peria puranam' and his scientific evaluation of the valves of, life of 'SEKKiZHAR' take the form of comparison of earlier and contemporary values of the cultural history of Tamil Nadu.

S. SIVASAMY. Leeturer in History, Jaffna College, Ceylon. He has contributed Scientific artices on epigraphy and histriography.

Nadana Kasinathan, Department of Archeology, Tamil Nadu. He works in Tanjore as registration officer of Inscriptions and ancient artifacts.

ஆராய்ச்சி

மலர்: 5 | மார்ச்சு 1975 | இதழ் 1



சென்ற இதழுக்குப் பின் 5 மாதங்கள் கழித்து இவ்விதழ் வெளி வருகிறது. அச்சகத்தின் தவிர்க்க முடியாத பிரச்சினைகளால் இவ்விதழை காலந் தாழ்த்தி வெளியிடுகிறோம். இதனை விரைவில் வெளிக் கொண்டு வர காலத்தால் செய்த உதவிக்கு C. M. S. அச்சகத்தின் நிர்வாகிகளுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். தமிழக அரசு 'ஆராய்ச்சி' போன்ற பத்திரிகைகளுக்கு நூலக ஆணைக்குழுவைச் சேர்ந்த நூலகங்கள் சந்தா கட்டக் கூடாதென்ற ஆணை பிறப்பித்த பின் அந்நூலகங்களுக்கு அனுப்பி வைக்கப்பட்ட 300 இதழ்கள் குறைவாக அச்சிட வேண்டி வந்தது. இதனோடு இலங்கை பண மாற்றுச் சிக்கல்களால் இலங்கைக்கு அனுப்பி வந்த 100 பிரதிகள் அனுப்ப முடியாமல் போயிற்று. இதன் விளைவாக இலவசமாக அனுப்பப்படும் பிரதிகளைத் தவிர, 550 பிரதிகளே விலை போயின. மத்திய அரசின் பத்திரிகை பதிவாளருக்கு உண்மையான கணக்குகளையே நாம் அனுப்பி வருவதால் 1974-ம் ஆண்டுக் கணக்கில் பிரதிகள் விற்பனையை 550- எனக் காட்டினோம். உண்மையைச் சொன்ன குற்றத்திற்காக, பத்திரிகை விற்பனை குறைந்து விட்டதென்ற காரணத்தைக் காட்டி மத்திய சர்க்காரின் விளம்பர நிறுவனமான DAVP- அனுப்பி வந்த மத்திய அரசின் விளம்பரங்களை, அந் நிறுவனத்தின் அதிகாரிகள் நிறுத்தி விட்டார்கள். பத்திரிகை விற்பனை அதிகமானால் மீண்டும் விண்ணப்பித்துச் கொள்ளுமாறு எழுதிவிட்டார்கள். இப்பொழுது இலங்கை பணமாற்றுச் சிக்கல் தீர்க்கப்பட்டு 100 பிரதிகள் அனுப்பப்பட இருக்கின்றன. சந்தாக்கள் தமிழ் நாட்டிலேயும் புதுப்பிக்கப்பட்டு ஏறக்குறைய ஆயிரத்தை எட்டும் நிலையில் உள்ளது எனவே சற்று தாமதித்து வந்தாலும் ஆராய்ச்சி தொடர்ந்து அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தாங்கி வந்து கொண்டிருக்கும் என்று ஆராய்ச்சி நண்பர்களுக்கு தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

x x x

லண்டனில் இந்திய நூலகம் என்று ஒரு நூலகம் இருப்பது இந்திய வரலாற்றில் ஆர்வம் உள்ள அனைவருக்கும் தெரிந்திருக்கும். நம்மை ஆங்கிலேயர் ஆண்ட காலத்தில் பல இந்தியத் தொல் பொருள்களையும், பல வரலாற்று ஆவணங்களையும் இந்தியாவிலிருந்து கொண்டு சென்றூர்கள். தொல் பொருள்களை பிரிட்டிஷ் மியூசியத்திற்கும், நூல்களையும் ஆவணங்களையும் இந்திய நூலகத்திற்கும் அளித்தார்கள். உலகத்திலேயே இந்திய வரலாற்றிற்குரிய சான்றுகளை அதிகமாகக் கொண்ட நூலகங்களில் அதுவே முதன்மையானது 1934-வரை இந்த நூலகத்திற்கு ஆன செலவையெல்லாம் இந்திய அரசே கொடுத்து வந்தது. அதற்கு பிறகு பிரிட்டிஷ் அரசே, அது தன்னுடைய சொத்து என்று கூறிக் கொண்டது. இந்தியாவும் பாகிஸ்தானும் பிரிந்து விடுதலை பெற்ற பின்னர், இந்திய நூலகத்திலுள்ள ஆவணங்களையும், நூல்களையும் தங்களுக்குப் பிரித்துக் கொடுக்கும்படி இந்திய அரசும் கேட்டன. ஆனால் எப்படிப் பிரிப்பது என்ற ஒருமுகமான கருத்து இரு அரசுகளுக்குமே யில்லை. இதனால் இந்திய நூலகத்தை பிரிட்டிஷ் அரசினரே வைத்திருந்தார்கள். 1959-ல் இவ்விரு அரசுகளும் சேர்ந்து இந்திய நூலகத்திலுள்ள தமது பொருட்களை தந்து விடும்படி கேட்டார்கள். குரங்கு பூனைகளுக்கு ரொட்டி பிரித்துக் கொடுத்த கதையாக மீண்டும் இந்த நூலகத்தை தங்கள் கையிலேயே வைத்துக் கொண்டார்கள்.

பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்த இந்தியா இப்பொழுது மூன்று அரசுகளாகப் பிரிந்துள்ளது. மூன்று அரசுகளும் எப்படி நூலகத்திலுள்ள பொருள்களை பிரிப்பது என்ற முறையில் ஒற்று

மையான கருத்து தெரிவிக்கவில்லை. இதனால் இங்கிலாந்தில் உள்ள உயர்தர அப்பீல் நீதி மன்றமான பிரிவி கவுன்சிலின் தீர்ப்புக்கு இப் பிரச்சினை விடப்பட்டுள்ளது. இதற்கு இந்திய அரசு சம்மதித்துள்ளது. ஒரு சொத்தை அப கரித்து வைத்திருப்பவனிடமே வாதிகள் நீதி வழங்குமாறு விடப்பட்டது போலிருக்கிறது இது. இவ்வரசுகள் தங்களுக்குள் பேசி முடி வுக்கு வர முடியாதென்றால் தாங்கள் வாதி களாகவும், பிரிட்டிஷ் அரசு பிரதிவாதி யாகவும் நின்று கொண்டு சர்வதேச நீதி மன்றத்தில் இதை பிரித்துத் தரும்படி ஏன் கேட்கக் கூடாது?

x x x

நெல்லையில் கடந்த ஆறுண்டுகளாக ஆராய்ச்சி பத்திரிகைக்கு அடிப்படையாக ஆய்வுக் குழு ஒன்று பணிபுரிந்து வருவது ஆராய்ச்சி அன்பர்களுக்கு தெரிந்த சேதியே இதன் பணிகளில் ஆர்வம் கொண்ட இளைஞர் கள் இந்த ஆய்வரங்கு கட்டுரைகளையும், விவாதங்களையும் கேட்க ஏராளமாக வந்த னர். அவர்களனைவரும் தாங்களே தனியாக ஒரு ஆய்வுப் பயிற்சி மன்றத்தை தொடங்கி, தாங்கள் படைத்த இலக்கியங்களையும், வேறு பண்பாட்டு பிரச்சினைகளையும் விவாதிக்க முன் வந்துள்ளனர். அதன் முதல் முயற்சியே 16-3-75ல் நடைபெற்ற இக்குழுவின் துவக்க விழா. இக்குழு துவங்கும் பொழுதே வேறு சில குழுக்களும் தோன்றின. இளைஞர் இசைக் குழு, நாட்டுப் பாடல், வரலாற்றுச் சான்று சேகரிப்புக் குழு இம் மூன்றும் தோற்றுவிக்கப் பட்டன. இம் முயற்சி தமிழகம் முழுவதற் குமே முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இது போன்ற பயிற்சிக் குழுக்கள் தமிழகம் முழு வதும் அமைக்கப்பட்டால் இளைஞர்கள் முற் போக்கான கலை, இலக்கிய இயக்கங்களைத் தோற்றுவிப்பார்கள்.

## நன்றியோடு பெற்றுக்கொள்ளுகிறேன்.

N.C.B.H லிருந்து:

| | | | |
|---|---|---|---|
| 1 | கலை இலக்கியம் பற்றி லெனின் (மொழி பெயர்ப்பு) | பக்கம் 396 | விலை 6 00 |
| 2 | மதத்தைப் பற்றி லெனின் (மொழி பெயர்ப்பு) | ,, 152 | ,, 2 00 |
| 3 | பொதுவுடமை விளக்கம். ம. சிங்கார வேலு | ,, 180 | ,, 2 00 |
| 4 | கொங்கு நாட்டு வரலாறு மயிலை. சீனி. வேங்கடசாமி | ,, 255 | ,, 12 00 |

மலர் பதிப்பகம் இலங்கை மட்டகளப்பு.

| | | |
|---|---|---|
| ஒளி நமக்கு வேண்டும். குறு நாவல்கள். செ, யோகநாதன். | ,, 76 | ,, 3 00 |

தமிழ்நாடு தொல் பொருள் துறை சென்னை.

| | | | |
|---|---|---|---|
| 1 | Seminar on Hero Stone Editor Nagasamy | ,, 310 | ,, |
| 2 | Kamba Kereswara Temple at Tripuvanam. H. Sarkar with plates. | ,, 78 | ,, 12 00 |
| 3 | Palitical Geography of the chola country with maps and Appentices. | ,, 109 | ,, 10 00 |
| 4 | கன்னியாகுமரி மாவட்டக் கல் வெட்டுகள் தொகுதி .1, 2, 3. | | |

**From Peoples Publishing House Delhi.**

| | | | |
|---|---|---|---|
| 1 | The Geography of the Puranas By S.M. Ali. | ,, 234 | ,, 30 00 |
| 2 | The Educational Situation A. R. Kamat. | ,, 347 | ,, 30 00 |
| 4 | Imperialism in the Modern phase vol I. Editor Baudhayan Chattopodyaya. | ,, 24 | ,, 20 00 |
| 5 | The Swadeshi Movement in Bengal 1903 to 1908 Surmith Sarkar. | ,, 552 | ,, 50 00 |
| 6 | Parties and politics at the Mughal court 707-740 Satisa By Chandra. | ,, 32 | ,, 40 00 |

குறிப்பு:— இனி வரும் ஆராய்ச்சி இதழ்களில், நூல்களின் சுருக்கமான உள்ளடக்கமும், விவரங்களும் கொடுக்க முயலுவோம். சில நூல்களை ஆய்வு செய்யவும் முயலுவோம் முக்கிய ஆய்வு நூல்கள், படைப்பிலக்கியங்கள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

நா. வானமாமலை. ஆசிரியர்.

# மெய்க்கீர்த்தி (அ) வரை விலக்கணம்:

## பகுதி-II

V. சிவசாமி,
யாழ்ப்பாணக் கல்லூரி.

மெய்க்கீர்த்தி:

எனில், உண்மையான புகழ்எனப் பொருள் படும். தமிழ் 'மெய்' என்றபதமும், புகழ்என்று பொருள்படும். கீர்த்தி என்ற வட சொல்லும் சேர்த்து உருவாக்கப்பட்ட சொற்றொடராகும். மெய்க்கீர்த்தி யென்பது புகழாகிய உடம்பு (மெய்) என இராகவையங்கார் கருதினர் 30அ தமிழிலுள்ள இலக்கிய வடிவம் ஒன்றாக, இடைக் காலத்திலே தமிழ்ச் சாசனவியலிலே, சோழப் பெருமன்னனான முதலாம் ராஜராஜன் (கி. பி. 985-1018) காலம் தொட்டு, கி. பி. பதினாறும் நூற்றாண்டு வரை நிலவி வந்துள்ளது.

மெய்க்கீர்த்தி, மெய்க்கீர்த்திமாலை

என்பன இலக்கிய வடிவங்களாக நன்குநிலவின. இதனால், இடைக்காலத்தமிழ் யாப்பு இலக்கண ஆசிரியர்கள் சிலர் இவற்றிற்கு வரைவிலக் கணங்கள் அளித்துள்ளனர். எடுத்துக்காட்டாக,

"சீர்நான்காதி இரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப்புகள் எல்லாம் சொல்லியும்
அந்தத்தவன் வரலாறு சொல்லியும்
அவளுடன்வாழ்கெனச் சொல்லியும்மற்றவன்
இயற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்
திறப்பெடஉரைப்பது சீர்மெய்க்கீர்த்தி" எனப் பன்னிருபாட்டியல் (112) கூறும். 31 இதே நூலில், இதனையடுத்து மேற்கோள் சூத்திர மாகக் கூறப்பட்டிருக்கும்,

"நிலை பெறு சீர் மெய்க் கீர்த்தியின் அந்தம் உரையாய் முடியும் என உரைத்த னரே "என்ற கோவூர் கிழாரின் குறிப்பும் கவனித்தற்பாலது.

மேலும்,
"தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சீர் சீர்அடியால் எழிலரசர் செய்தி இசைப்பர் என வச்சணந்திமாலையும்(வெண்பாப்பாட்டியலும்- 34) அதேநூலின் உரையில் வரும்,

"ஆசிரியம் விரவிய சொற் சீரடிகளால் மன்னரது உண்மைக் கீர்த்தியைத் தொகுத் துப் பாடுவது மெய்க்கீர்த் தியாம்", என்பதும் குறிப்பிடற் பாலன. 32

இவற்றைவிட, இலக்கண விளக்கப் பாட்டியல் (105)

"சொற்சீரடியால் தொழிற்படுகீர்த்தியைப்
பொற்புறமொழிதல் மெய்க்கீர்த்தி மாலை"
எனவும், அதன் உரையில்,

"சொற்சீரடிஎன்னும்கட்டுரைச்செய்யுளாற்
குலமுறையிற் செய்த கீர்த்தியை
அழகுற மொழிதல் மெய்க்கீர்த்திமாலையாம்"
எனவருவதும் கவனித்தற்பாலன. 33

இந்நூல்கள் யாவும் இன்று கிடைத்துள்ள காலத்தால் முந்திய மெய்க் கீர்த்திகளுக்கு (கி. பி. பத்தாம் நூற்றாண்டு முடிவுக்குப்) பிற் பட்டவை. இலக்கியம் கண்டதற்கே, இலக்கண மாகையால், மெய்க்கீர்த்தி பெருவழக்கிலேற் பட்டபின்னரே இந்நூல்கள் தோன்றின. ஆனால், முதலாம் ராஜராஜனுக்கு முன்பே மெய்க்கீர்த் திகள் ஏதோ வகையில் இருந்திருக்கலாம் என்று கொள்ள இடமுண்டு. ஏனெனில், அவன் காலத் திய மெய்க்கீர்த்திகள் ஓரளவு முழுமையாகக் காணப்படுகின்றன. இது பற்றிப் பின்னர் கூறப்படும்.

மேற்குறிப்பிட்ட வரை விலக்கணங்களைத் தொகுத்து நோக்கும் போது, பொதுவாகச் செய்யுள் வடிவிலே, மன்னரைப் பற்றிய சிறப்புவகையான புகழ்மாலையாகவே மெய்க்கீர்த்தி விளங்குகின்றது. ஆகவே, இதற்கு முன்னோடியான நிலைகளையும், இதன் தோற்றம், வளர்ச்சி பற்றியும் அடுத்ததாகக் கவனித்தல் அவசியமாகின்றது.

## மெய்க்கீர்த்தியின் முன்னோடிகளும் தோற்றமும்;

மனித நாகரிகம் ஏற்பட்ட காலம் தொட்டு, மக்கள் தம்மைப்பற்றித் தாமோ அல்லது குறிப்பாகப் பிறரோ புகழ்தலை விரும்பி வந்துள்ளனர். பொருளாதாரம், அரசியல், சமூகம், கலாச்சாரம் முதலியனவற்றில் உயர்ந்த நிலையிலுள்ள வர்க்கத்தினர்—குறிப்பாக, மன்னர் புகழ்மாலைகளைப் பெரிதும் விரும்பினர். தமது அவைக்களத்தில் இதற்காகப் பல புலவர்களையும், ஆஸ்தான கவிஞர்களையும் அமர்த்தி வந்துள்ளனர். இது மட்டுமன்றிப் பிற நாட்டுப் புலவர்களும் வந்து தம்மைப் பாடிப் பரிசில் பெற இடமளித்தனர்.

இத்தகைய போக்கு, தமிழக வரலாற்றிலே நீண்டகாலமாக— சங்க காலம் தொட்டு நிலவியதற்கு இலக்கியமும், சாசனவியலும் தக்க சான்று பகருவன, காலத்தால் முந்திய தமிழ் நூல் களான, சங்க நூல்களை நோக்கும் போது, மன்னரையோ, குறுநிலத் தலைவரையோ, வள்ளலையோ தெய்வத்தையோ புகழ்ந்து பாடும் மரபு நிலவியதை அவதானிக்கக் கூடியதாக உள்ளது. குறிப்பாகப் புறம் பற்றிய பாடல்கள் முக்கியமானவை. இவற்றிலே, புகழ்மாலைக்குரிய அம்சங்களை வெவ்வேறு அளவுகளிலே காணலாம். அகம் பற்றிய பாடல்களிலே சிறிய அளவிலாவது புகழ்ச்சியுண்டு. காலத்தால் முந்திய தமிழிலக்கண நூலான தொல்காப்பியத்திலே கூறப்படும் பாடாண்திணை மரபு குறிப்பிடற்பாலது. இப்பாடாண் திணையின் வகை களிரு சூத்திரங்களிலே கூறப்பட்டுள்ளன. 34அவற்றுள், முன்னையதிலே வரும்.

"கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தலும்
அடுத்தூர்ந்தேத்தியஇயல் மொழிவாழ்த்தும்"

என்பதும், பின்னையதிலேவரும்,

"தாவில் நல்லிசை கருதியகிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயில் எடை நிலையும்
சிறந்த சீர்த்தி மண்ணுமங்கலமும்
பரிசில் கடைய கடைக்கூட்டுநிலையும் பெற்ற
பின்னரும் பெரு வளன் ஏத்தி"

என்பனவும் பிறவும் குறிப்பிடத் தக்கவை. இவற்றை நோக்கும் போது பாடாண்திணை மரபை யொட்டியும் மெய்க்கீர்த்தி தோன்றியிருக்கலாம் எனக்கருத இடமுண்டு.

புறநானூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, பத்துப் பாட்டு வரிசையிலே குறிப்பாக, மதுரைக் காஞ்சி, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, முதலியன வற்றிலே புகழைப்பற்றி, குறிப்பாக, உயர்ந்தோரின் புகழ் பற்றிய குறிப்புகள் உள்ளன. வீரர்கள் இவ்வுலக வாழ்வில் மட்டுமன்றி மறுவுலக வாழ்விலும் புகழையே விரும்பினர். இத்தகைய இலட்சியம் வீரயுகத்திற்கான பொதுவான சிறப்பியல்பு என இது பற்றி விரிவாக ஆராய்ந்துள்ள கலாநிதி க. கைலாசபதி அவர்கள் குறிப்பிட்டுள்ளார். 35

அக்கால சமுதாயத்திலே பலர் புகழை விரும்பினர். இப்புகழ், வீரம், கொடை முதலியனவற்ருல் ஏற்படும். சோழன் நலங்கிள்ளியைக் கோவூர் கிழார் " நல்லிசை நாட்டம் வேண்டி வெல்போர்ப், பாசறையல்லது நீயொல்லாயே" எனப்பாடுகிருர். 36 இப்புகழ் அழியா திருக்க விழைந்தனர். இதனை வெறுமையாகக் கூருது, மாயாப்புகழ், கேடில்விழுப்புகழ், வீயாவிழுப்புகழ் வான்புகழ், வண்புகழ், பெருர்புகழ், பெரும்புகழ் எனப்பல அடைமொழிகள் மூலம் வருணித்துள்ளனர்; 37 இதனை ஓர் விழுமிய இலட்ச்சியமாகக் கொண்டுள்ளனர்.

சீர்த்தி, உரை, இசை, பெரும் பெயர், முதலிய சொற்கள் அடைமொழியுடனே, இல்லாமலோ 'புகழ்' என்ற கருத்திலே சங்க நூல்களில் வருகின்றன, சமுகத்திலே, மற்றவர்களிலும் பார்க்கத்தாம் மேலவராக, கௌரவம், மரியாதை உள்ளவராக, புகழ்படைத்தவராக விளங்கவே கதாநாயகர் விரும்பினர். 38 நம்பி நெடுஞ்செழியன் 'புகழ்நெய்யோன்' எனப்படுகிருன். 39 புகழிற்காக உயிரை விடவும் பின்னின்றிலர்.

"புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்" ,40

"மன்னுவுலகத்து மன்னுதுதல் குறித்தோர் தம்புகழ்நிறித்தாம்மாய்ந்தனரே'41எனவருபவை புகழினை எந்த அளவிற்கு அவர்கள் சீரிய இலட்சியமாகக் கொண்டிருந்தனர் என்பதைத் தெளிவாக்குவன. இப்புகழ் அழியாது நிலைக்க வேண்டுமென்பது 'கெடாது நிலையாநின் சேண் விளங்குபுகழ்' 42 என மாங்குடி மருதனார் நெடுஞ்செழியனுக்குக் கூறுவதாலும், பிறவற்ருலும் அறியப்படும்.

இப்புகழ் புலவர் நாவில் வரும் பொய்யுரையாக அன்றி, மெய்யுரையாக மிளிர வேண்டும். சங்கப்புலவர் பலர் வாய்மையினை விழுமையாகப் போற்றினர் என்பது,

"பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யாதாகிக் கிளர்த்தல்
எய்யாதாகின்று எஞ்சிறு நாவே"43

'பொய்யாநாவிற் கபிலன்' போன்றவற்ருலே தெளிவாகும். 44

பிற்கால மெய்க்கீர்த்தி வளர்ச்சிக்கு முன்னேடியாக விளங்குவதிலே பதிற்றுப்பத்துப் பெரிதும் கவனித்தற் குரியது. அதிலே வரும் பதிகங்கள் பிற்காலத்தவையாயினும் குறிப்பிடற்பாலன. நாலாவதுபத்திலே களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் கண்ணனார் பாடும் பகுதி (37) ஒன்றினைக் கூர்ந்து கவனிக்கலாம். அதாவது,

"வாழ்க நின்வளனே நின்னுடைய வாழ்க்கை
வாய்மொழிவாயர் நின்புகழேத்தம்
பகைவராய்ப் பழங்கணருளி
நகைவரார நன்கலஞ்சிதறி
ஆன்றவிந்தடங்கிய செயிர் தீர் செம்மால்
வான்ருேய் நல்லிசையுலகமொடுயிர்ப்பத்
துளங்கு குடிதிருத்திய வலம் படுவென்றியும்
மாயிரும்புடையன் மாக்கழல் புனைந்து
மன்னெயிலெறிந்து மறவர்த்தரீத்
தொன்னிலைச் சிறப்பிளின்னிழல் வாழ்
நர்க்குக் கோடறவைத்த கோடாக்
கொள்கையும்
நன்று பெரிதுடையை யானியே
வெந்திறல் வேந்தேயிவ் வுலகத்தோர்க்கே",

என்பதாம். உண்மையான புகழைக் கூறுதல் இங்கு வற்புறுத்தப் படுகின்றது.

புகழினை நிலை நாட்டுதற்குப் பலவழிகள் கையாளப்படும். குறிப்பாகப் புலவரின் புகழ்மாலையினைப்பலர் விரும்பினர்.புலவரின் பொய்யாமொழி மாலை பெருதல் ஓர் உயரிய இலக்காகும். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வெஞ்சினம் கூறும் போது,

"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவனுக
உலகமொடு நிலைய பலர் புகழ் சிறப்பிற்
புலவர் படாது வரைக என நிலவரை"

எனக் குறிப்பிடுகிருன்.45

'புலவரின் புகழ்மாலை பெற்ருேர் சிலரே; அவர்களே இவ்வுலகில் மட்டுமன்றி மறுவுலகிலும் நன்மையடைவர்; பெரும் பெயர் உலகமான வீர சுவர்க்கம் அடைவர்; அமரத்துவம் அடைவர்; ஏனையோர் பலர் வீணுகவே வாழ்ந்து மடிந்து போவர்' என்ற கருத்துக்கள் நிலவின. நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணனார் பாடும் போது,

"சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ்
நாற்றிதழலரினிரை கண்டன்ன வேற்றுமை
யில்லா விழுத்திணை பிறந்து வீற்றிருந்தோரை
யெண்ணும் காலை உரையும் பாட்குமுடை
யோர் சிலரே மரையிலை போல மாய்ந்தி
சினேர் பலரே புலவர்பாடும் புகழுடை
யோர் விசும்பின் வலவனேவா வானவூர்தி
எய்துப என்பதம் செய்வினை முடித்தே"

எனக்குறிப்பிட்டுள்ளார். 46

புகழினை நிலைநாட்டுதற்கு வேறுவழிவகையும் கையாளப் பட்டது. குறிப்பாக, வீரர் விழுப்புண் பட்டு வீழ்ந்த இடத்தில் அல்லது அவர்களை அடக்கம் செய்த இடத்திலே கல் நட்டு, மரியாதை, வழிபாடு செய்யும் வழக்கம் தமிழகத்திலே நெடுங்காலமாக நிலவியதற்குச் சங்கநூல்கள். தொல்காப்பியம், சிலப்பதிகாரம், தொல்பொருளியற் சின்னங்கள் முதலியன சான்று பகருவன. குறிப்பாக நடுகற்களே இன்றும் நிலைத்துச் சான்று பகருவன.47 இவ்வழக்கத்தின் தோற்றம் குறித்துப் பேராசிரியர் நா. வானமாமலை அவர்கள் அண்மையிலே நன்கு விளக்கியுள்ளார். 48 நடுகல் பற்றிய சடங்கினைத் தொல்காப்பியம்

'காட்சி கால் கோள் நீர்ப்படை நடுகல்
தகு சிறப்பிற்பெரும் படை வாழ்த்துதல்'

எனக்குறிப்பிடும். 49 இறுதியிலே கூறப்படும் வாழ்த்திலே, மாண்டவரின்புகழும்இடம்பெறும். பிற்பாலப் புறப்பொருள் வெண்பாமாலை யுமிது பற்றி

'அவர்பெயர்கன்மிசைப்பொறித்துக்
கவின் பெறக்கன்னட்டின்று...—.........
அடும்புகழ் பாடி.........,............எனக்

குறிப்பிடும். 50 சங்கநூல்கள் சிலவற்றிலுமிது பற்றிய குறிப்புகள் வருகின்றன. எடுத்துக் காட்டாக,

"கெடுவினல்லிசை சூடி
நடு கலாகயினன் புரவலன்",

"அணிமயிற்பீலி சூட்டிப் பெயர் பொறித்
தினி நட்டனரே கல்லும்" எனப்

புறநானூறும் (221, 260)

"பெயரும் பீடு மெழுதியதர் தொறும்
பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்"

என அகநானூறும் (131)

"செல்லா நல்லிசைப் பெயரோடு நட்ட" என மலைபடுகடாமும் (388) குறிப்பிடுவன. இத்தகைய நடுகற்களிலே வீரரின் புகழ் கூறப் பட்டிருப்பது குறிப்பிடற்பாலது. தமிழகத்திலே நடுகற்கள் இன்றும் கண்டுபிடிக்கப்படுகின்றன. வீரனொருவனின் புகழினைக் குறிப்பிடும் நடுகல் சாசன மொன்றினைச் சுட்டிக்காட்டலாம். எடுத்துக்காட்டாக;

"வாய்ந்த புகழ் மங்கலத்து
வந்தெதிர்ந்த மாற்றலரைச்
சாய்த்த மகன் வென்ற சயம் பெருக-
சிர்த்த புகழ்
நிக்குவணம் கற்பொறிக்கப் பட்டான்
கரையகுலச்
சொக்கலேந்தலே வுலகில்தான்" என

வருவது கவனித்தற் குறியது. 51

இவ்வாறு இலக்கிய நூல்களிலோ, நடுகற்களிலோ, பிறவற்றிலோ, வீரர், மன்னர் முதலியோர் புகழ்ந்து கூறப்படும் போது, அவர்களின் வீரம், ஆண்மை, கொடைவளம், குணதிசயங்கள் முதலியன மட்டுமன்றி அவர்களின் முன்னோர் பெயரும், சாதனைகளும் குறிப்பிடப் படுவன. வீரப்பாடல்களிலே வமிசாவளியும் முக்கிய இடம் ஒன்று பெற்றிருந்தது. ஏற்கனவே குறிப்பிட்ட வடமொழிப்பிரசஸ்தியிலிது வோரிடம் பெற்றிருந்தமை தெரியப்பட்டதே. ஒருவரின புகழைவருணிக்கும் போது அவர் சிறந்தமரபினர் எனக்குறிப்பிடுவதால் அன்னாரின் பெயருக்கே பெரிய மாட்சிமை ஏற்படுகின்றது மரபுவழியாக வும் அவருக்கு ஊக்கமும் உற்சாகமும் பிறக்கின்றன. சங்கநூல்களிலே முன்னோர் புகழ் மிகச்சுருக்கமாகப் பொதுப் படவே கூறப்படுகின்றது. கிள்ளிவளவனை மாறோக் கத்து நப்பசலையார் பாடியுள்ளமை 52 அல்லது கபிலர் புலிகடியால் என்றவேளிர் அரசனைப்பாடியுள்ளமை53 யினைக் குறிப்பிடலாம். பதிற்றுப் பத்திலே வரும் சேர அரசமரபு கவனித்தற்குரியது. கிரேக்க வீரயுகப் பாடல்களிலும் வமிசாவளி மூன்று அல்லது நான்கு தலைமுறைகளுக்கு அப்பாற் கூறப்படவில்லையாம்.54

தமிழ் நாட்டிலுள்ள மிகப் பழைய பிராமிச் சாசனங்களிலே மூன்று தலைமுறைக்கு அப்பால் மன்னர் மரபு கூறப்படவில்லை. 55 பழைய பாரசீகப் பேரரசிலாட்சி செய்த அக்கிமீனியப் பெருமன்னரின் சாசனங்கள் சிலவற்றிலே அவர்களின் வமிசாவளி ஐந்துக்கு மேற்பட்ட தலைமுறைகளுக்குச் செல்லுகின்றன. அரசரின் புகழும் சாதனைகளும் தன்மையிலே நேரடியாகக் கூறப் படுகின்றன. 56 நீண்டவமிசாவளி வடமொழிப் பிரசஸ்தியிலுள்ளது.

மேலும், மேற்குறிப்பிட்ட உலகியல் சார்பான புகழ் கூறும் மரபு, சிலப்பதிகாரம், பாண்டிக் கோவை, குறிப்பாக நந்திக் கலம்பகம், முதலிய நூல்களிலே விரவிவருதலைக் காணலாம். சமயச்சார்பான நூல்களும் குறிப்பிடற் பாலன. சங்க நூல்களிலொன்றாக ஒரு சாராரால் கொள்ளப்பட்டு வரும் திரு முருகாற்றுப்படையிலே முருகக்கடவுள் வீரயுகத் தெய்வமாகவே மிளிர்கின்றார். இந்நூலிலே,

"மாமுதல்தடிந்த மறுவில்கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ்வேற் சேய்"
எனவும், (60—61)

"பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே
அரும் பெறன் மரபிற் பெருபெயர் முருக
நசையுநர்க் கார்த்தும் இசை பேராள"

268—270 எனவும், இவைபோன்றனவுமான பிற பகுதிகளு மிந்நூல் சங்ககால வீர இலக்கிய மரபைப் பிரதிபலிப்பதனை எடுத்துக்காட்டுவன. சமய இலக்கியரீதியிலே இவ்வகை இயல்பு தொடர்ந்து, பரிபாடல், நாயன்மார், ஆழ்வார் களின் பத்திபாடல்களிலே ஓரளவு காணப் படுகின்றன. மனிதவீரனொருவன் புகழப்பட்டவாறு, கடவுள் ஒருவர் மேற்தறிப்பிட்ட நூல்களிலே புகழ்ந்து உரைக்கப் படுகின்ருர்.

தமிழகத்திலே, பல்லவர், பாண்டியரின் பேரரசுக்காலத்திலே வடமொழியும், தமிழும் ஒரே விதமாகப் போற்றப் பட்டன. இப்போக்கினைச் சாசனவியலும் காணலாமென்பதும், இக்காலத்திலே (கி. பி. 7—10ம் நூ'வரை) வடமொழிப் பிரசஸ்தி ஒரு வரையறையுள்ள இலக்கிய வடிவமாகச் சாசனவியலில் இடம் பெற்று விட்டது என்பதும் ஏற்கனவே குறிப்பிடப் பட்டுள்ளன. தமிழகத்திலாட்சி செய்த பல்லவ, பாண்டிய மன்னரும் வடமொழிப் பிரசஸ்தியினை வெளியிட்டனர்; தமிழிலுமிவ்வகையான இலக்கிய வடிவத்தைப் பாண்டியமன்னர் சிலர் கையாண்டனர். இதுபற்றி ஏற்கனவே குறிப்பிடப் பட்டுள்ளது. வடமொழிப் பிரசஸ்தியினைப் பின்பற்றித்தான தமிழ்ப் பிரசஸ்தி தோன்றியமை அதன் பொருளடக்கம், அமைப்பு முதலியனவற்ருலே புலப்படும். அதே வேளையிலே, தமிழ்ப்பிரசஸ்தி பழைய தமிழிலக்கிய மரபையொட்டியும் வந்துள்ளமை அதன் யாப்பு, நடை முதலியனற்ருலேதெரியப்படும். ஏற்கனவே, குறிப்பிட்டுள்ள வேள்விக்குடிச் செப்பேடுகள், திருநெல்வேலிச் செப்பேடுகள் சிறந்த எடுத்துக் காட்டுகளாம்.

பாண்டிய மன்னர் தமிழ்ப் பற்று மிக்கவர்கள். இடைக்காலப் பாண்டியரின் தமிழ்ப் பற்றிற்குப் பாண்டிக்கோவை போன்ற நூலும், மேற்குறிப்பிட்ட தமிழ்ப் பிரசஸ்திகளும் தக்க எடுத்துக் காட்டுகளாம். ஏறக்குறையச் சமகாலப் பல்லவ வேந்தனுன மூன்ரும் நந்திவர்மனும் தமிழ்ப் பற்று மிக்கவன் என்பது நந்திக் கலம்பகத்தாற் புலப்படும். இத்தகைய சூழ்நிலையிலே பழைய தமிழ் இலக்கிய மரபுகள் நன்கு பேணப் பட்டன; புத்துணர்வு ஊட்டுவனவாகவும் அவை குறிப்பாகப் பாண்டியருக்கு விளங்கின எனலாம். அவர்களின் பண்டைய-சங்ககாலப்புகழை நினைவூட்டின. தமிழகத்திற்கு, வடக்கேயிருந்து பரவிய வடமொழிப் பிரசஸ்தி மரபும், பண்டைய தமிழிலக்கிய மரபும் சங்கமித்தே தமிழ்ப் பிரசஸ்தி தோன்றியதெனலாம். ஆனுல் பல்லவர், பாண்டியருக்குப்பின் தமிழகத்திலே, பண்டைய பிற தமிழ் வேந்தர் குலங்களான சேரர், பாண்டியர், ஆகியோரின் அரசுகளை முன்னொருமில்லாத வகையிலே ஒன்றுபடுத்தித் தனித் தமிழ்ப் பேரரசு ஏற்படுத்தி, அயலில் உள்ள இந்தியப் பகுதிகள் சிலவற்றிலும், பிறநாடுகள் சிலவற்றிலும் தமது ஆதிக்கத்தை ஏற்படுத்திய சோழப் பெருமன்னுன முதலாம் ராஜராஜன் தனது வெற்றிகள், சாதனைகளைப் பற்றிய புகழ்மாலையினைப் தமிழ்ப்பிரசஸ்தி வடிவிலன்றி தமிழ்மெய்க்கீர்த்தி வடிவிலே முதன்முதலாகத் தனது ஆட்சியின் எட்டாவது ஆண்டிலே கி. பி. 993 லே வெளிப்படுத்தொடங்கினுன். இவ்வரசனுக்கு முன்னர் மெய்க்கீர்த்தி வடிவம் இருந்திருக்கலாம். ஆனுல் தக்கசான்றுகள் கிடைக்கும் வரை இஃது ஊகமேயாம். இதற்கு முன்னேடியாகத் தமிழ்ப் பிரசஸ்தி விளங்கியது. ஆனுல் சிலவகையிலே மெய்க்கீர்த்தி தனி இயல்புகளும் கொண்டது. எனவே, இவ் இருவகை இலக்கிய வடிவங்களுக்கு மிடையில் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் குறிப்பிடலாம்.

பிரசஸ்தி, மெய்க்கீர்த்தி ஒற்றுமை வேற்றுமைகள்; இவற்றினைத் தெளிவாக எடுத்துக் காட்டுதற்கு நெடுஞ்சடையனின் வேள்விக்குடிச் செப்பேடுகளையும், முதலாம் ராஜராஜனின் மெய்க்கீர்த்தி 58 யினையும் எடுத்துக் கொள்ளலாம். இவற்றினை ஒப்பிட்டு நோக்கும் போது இரண்டும் மன்னரின் புகழைச் சிறப்பித்துக் கூறுவன. ஆனால் பிரசஸ்தியிலே ஆளும் அரசன் மட்டுமன்றி அவனின் முன்னோர் சாதனைகளும் புகழும் கூறப்படும். மெய்க்கீர்த்தியிலே சமகால மன்னரின் வெற்றிகளும் புகழுமே கூறப்படும். சமகாலமன்னரின் வெற்றிகள் பொதுவாக இரண்டிலும், கால முறைப்படியே எடுத்துரைகப் படுவன. மெய்க்கீர்த்தி தனிமன்னரின் புகழினை விவரிக்க, பிரசஸ்தி பெரும்பாலும் வமிசப்புகழினையும் விவரிக்கும்.

இரண்டின் தொடக்கமும் குறிப்பிடற் பாலது. பிரசஸ்தி கடவுள் வணக்கம், மங்கள கரமான சொல், அல்லது சின்னம் ஆகியவற்றுடன் தொடங்கும், மெய்க்கீர்த்தி, ஒவ்வோர் அரசருக்கும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மங்கலச் சொற்றொடருடன் ஆரம்பமாகும். எடுத்துக் காட்டாக ராஜராஜனின் மெய்க்கீர்த்திகள் "திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்" எனத்தொடங்குவன. இத்தகையமுறையினாலே குறிப்பிட்ட மெய்க்கீர்த்தி எந்த மன்னருடையது என்பது தெற்றென விளங்கும். இச் சொற்றொடர் ஒரு வகையான முத்திரைச் சொற்றொடர் போலக்குறிப்பிட்ட மன்னருக்குரியதாகும். இசை இலக்கியத்திலிவ் வகையான முறையிருக்கிறது. 59 திருஞானசம்பந்த சுவாமிகளின் தேவாரப் பதிக முடிவிலே வரும் முத்திரைச் செய்யுள் குறிப்பிடற்பாலது. ஆனால் மெய்க்கீர்த்தியிலே தொடக்கத்தில் வரும் சொற்றொடர் மங்கலமாக மட்டுமன்றி முத்திரையாகவும் மிளிர்கின்றது.

தமிழ்ப்பிரசஸ்தி பெரும்பாலும் கலிமுதலியவற்றின் ஓசையும், வடசொற்கலப்பு அதிகமாகவும், சொற்சீரடிகளும் உடையனவாகவும் விளங்குவன. ஆனால், மெய்க்கீர்த்தி பெரும் பாலும் அகவலோசையும், சிறுபான்மை கலியோசையும் கொண்டு சொற் சீரடியால் அமைவதாம்.

பிரசஸ்தியின் ஆசிரியர் பெயர் முடிவிலே கூறப்படும். எடுத்துக்காட்டாக வேள்விக்குடிச் செப்பேடுகளின் ஆசிரியர் பெயர் ஏனாதிச் சாத்தன் சாத்தர் எனக் கூறப் பட்டியிருக்கிறது. ஆனால் மெய்க்கீர்த்தி ஆசிரியர் பெயர் கூறப்படுவதில்லை. இதனாலே வடமொழியிலும், தமிழிலுமுள்ள பல சாசனப் பிரசஸ்தி ஆசிரியர்கள்—புலவர்களின் பெயர்கள் அறியப் படுகின்றன. மெய்க்கீர்த்திக்கு முன்வரும் "ஸ்வஸ்திஸ்ரீ" எனும் வடமொழிச் சாசனவியல் மரபை வலியுறுத்தும். மேலும், ஆளும் அரசனின் ஆண்டு செல்லச் செல்ல, அவனுடைய வெற்றிகள் அதிகரித்துக் கொண்டு போக, மெய்க்கீர்த்தியும் நீண்டு செல்லும். எடுத்துக் காட்டாக, முதலாம் ராஜேந்திரனின் தொடக்க கால மெய்க்கீர்த்திகளையும், பிற்கால மெய்க்கீர்த்திகளையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். இவ்வாறு சில ஒற்றுமை வேற்றுமைகளைக் குறிப்பிடலாம். 60

சோழப் பெருமன்னர் காலத்திலே மன்னருடைய புகழ்மாலை வடமொழியிலே பிரசஸ்தியாகவும் தமிழிலே மெய்க்கீர்த்தி யாகவும் வெளிவந்தன. அடித்தப்படியாக மெய்க்கீர்த்தியின் வளர்ச்சி பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடலாம்.

## மெய்க்கீர்த்தி வளர்ச்சி

முதலாம் ராஜராஜன்காலத்தியமெய்க்கீர்த்தி ஒன்றினை முதலிலே குறிப்பிடலாம். அதாவது,

> ''திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்
> தனக்கேயுரிமை பூண்டமைமனக்கொளக்
> காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளி
> வேங்கை நாடுங் கங்க பாடியுந்
> தடிகை பாடியும் நுளம்ப பாடியுங்
> குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
> முரட்டொழிற் சிங்களர்ழமண்டலமும்
> இரட்டப்பாடி யேழரை யிலக்கமும்
> முந்நீர்ப்பழந்தீவு பன்னிராயிரமும்
> திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்-
> டதன்
> னெழில் வளருழியுளெல்லாயாண்டுந்
> -தொழுதக விளங்கும் யாண்டே செழி-
> யரைத்
> தேசுகொள் கோராசகேசரி வர்மரான
> உடையார் ஸ்ரீராச ராச தேவர்க்கு-
> யாண்டு''

என்பதாம். 61 மெய்க்கீர்தி பற்றித் தமிழிலக்கணநூல்கள் சில கூறியிருக்கும் இயல்புக்ள் ஓரளவு மேற்தறிப்பிட்டதிலே காணப்படுகின்றன.

இம்மெய்க்கீர்த்திக்கு முன்னேடியாகப் பாண்டியரின் தமிழ்ப் பிரசஸ்திகள் இருந்திருப்பன என்பது ஏற்கனவே கூறப்பட்டுள்ளது. மெய்க்கீர்த்தியின்தோற்றம். பற்றிஆராய்ந்தகாலஞ்சென்ற முதுபெரும் கல்வெட்டாய்வாளர் திரு. ரி. வி. சதாசிவபண்டாரத்தார், அவன் (ராஜராஜன்) முன்னேர்கள், தம்பெயர்களுக்கு முன்னர்க் கல் வெட்டுக்களில் பொறித்து வந்த வீரச் செயல்களைக்கூறும் அடைமொழிகளும் அவன் தன் ஆட்சியின் தொடக்கத்தில் வென்றடிப்படுத்திய சேரநாட்டிற் கிடைத்த பதிற்றுப்பத்து என்னும் நூலில் ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் காணப்படும் பண்டைச் சேர மன்னர்களின் மெய்க்கீர்த்திகளாகிய பதிகங்களும் இத்தகைய மெய்க்கீர்த்தி யொன்று அமைக்கும் எண்ணத்தை அவன் உள்ளத்தில் தோன்றுவித்தனவாதல் வேண்டும். அவ்வெண்ணமும் கி. பி. 993 ஆம் ஆண்டில் நிறைவேறியது. அவ்வாண்டிலேயே அவ்வரசர் பெருமான் கல் வெட்டுகளில் ''திருமகள் போலப் பெருநிலச் செல்வியும் தனக்கேயுரிமை பூண்டமைமனக் கொள'' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியும் தோன்றுவதாயிற்று'' எனக்குறிப்பிட்டுள்ளார். 62 இக்கருத்திலே உண்மையிருப்பினும் வேறு சில காரணிகளுமிதற்குத் துணைபுரிந்திருப்பன. இசை இலக்கியத்திலே நினைவாற்றலைப் பேணுதற்காகக் கையாளப்படும் வாய்ப்பாடுகள் போன்றவையும் குறிப்பிடற்பாலன. இத்தகைய வாய்ப்பாடுகள் இசைக்கு மட்டுமன்றிக் கணிதம், ஜோதிஸம் போன்ற பிற அறிவியல் துறைகளிலும், அச்சுயந்திரமில்லாத அக்காலத்திலே பயன்படுத்தப் பட்டன என்பதைப் பேராசிரியர் பி. சாம்பமூர்த்தியவர்கள் எடுத்துக்காட்டியுள்ளார். 63 மேலும், குறிப்பாக மன்னர் தமது ஆட்சிக்காலச் சம்பவங்களை முறைப்படி தொகுத்துக்கூறும் போது, அவற்றை மற்றையோரின் ஆட்சிக் காலங்ளிலிருந்து எளிதில் பிரித்து அறியப் படுத்தற்காவும் இத்தகைய வழிவகையினைக் கையாண்டிருப்பர்.

ராஜராஜனுக்குப் பின், அவன் மகனை முதலாம் ராஜேந்திரன் காலத்திலே மெய்க்கீர்த்தி மேலும் வளர்ச்சியுற்றுச் செல்வத்தைக் காணலாம். அவனுடைய ஆரம்பகால மெய்க்கீர்த்தியொன்றினையும், பிந்திய கால மெய்க்கீர்த்தியொன்றினையும் ஒப்பிட்டு நோக்கின் உண்மை தெளிவாகும். 64 முன்னையதிலும், பார்க்கப் பின்னையது மேலும் அதிக விபரங்களுடன் நீண்டு விளங்குகிறது. இவ்வரசரின் மெய்க்கீர்த்தி 'திருமன்னிவளர்' எனத் தொடங்கும். சோழ ஆதிக்க விஸ்தரிப்புராஜேந்திரன் ஆட்சிக்காலத்

தில் உச்சநிலையடைவதை அவனது மெய்க்கீர்த்தி மூலம் முறைப்படி அறியலாம். ராஜேந்திரனுப் பின்வந்த முதலாம் ராஜாதிராஜசோழன் சாசனங்களிலே ''திங்களேர்பெறவளர்'' என ஒரு மெய்க்கீர்த்தியும், 'திங்களேர்தரு' என மற்ஹென்றும், 'திருக்கொடியொடு தியாகக்கொடி' எனப்பிறிதொன்றும் தொடங்குவன. இவற்றுள் திங்களேர் தரு 65 எனத்தொடங்குபவையே இவன் ஆட்சிக் காலச் சம்பவங்களை ஏனையவற்றிலும் பார்க்க விரித்துக் கூறுவன. இவனுக்குப் பின் அரசனான இவன் சகோதரன் இரண்டாம் ராஜேந்திரனுக்கும் மூன்று மெய்க்கீர்த்திகள் உள்ளன. அவற்றுள் 'திருமாதுபுவியெனும் பெருமாதர்' 66 எனத்தொடங்குபவையே நீண்டனவாக, விபரங்கள் கூடுதலாகக் கொண்டு மிளிர்வன இவனின் வாரிசான வீரராஜேந்திரனுக்கு 'திருவளர் திரள்புயத்து' எனவும், 'வீரமே துணையாகவும் தியாகமே அணியாகவும்' எனவும் இரு மெய்க்கீர்த்திகள் உள்ளன. முன்னையதே பிரதானமானது. 67

முதலாவது குலோத்துங்கனுக்குப்பல மெய்க்கீர்த்திகள் உள்ளன. இவற்றுள்'புகழ் சூழ்ந்த புணரி யகழ் சூழ்ந்த புவியில்' 68 எனத்தொடங்குவது மிகப்பெரியது. இக்குலோத்துங்கனுக்குப்பிந்தியசோழப்பெருமன்னருக்கும் தனித்தனி மெய்க்கீர்த்திகள் உள்ளன. ஆனால் இவனுக்குப் பின் குறிப்பிடத்தக்க வெற்றிகள் மிகக் குறைவாகையாலே, மெய்க்கீர்த்திகள் பொதுவாக மன்னரின் ஆட்சிச்சிறப்பையே பெரிதும் விபரிப்பன; புகழுரைகள் அதிகரிக்கின்றன.

சோழப் பெருமன்னருக்குப் பின் ஆட்சிபெற்றபாண்டியப் பெருமன்னர் (கி. பி. 13ம் நூ.) மெய்க்கீர்த்திகள் வெளியிட்டனர். முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தி ''பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும் புயத்திருப்ப'' எனத்தொடங்கும் 69 வரலாற்றுச் செய்திகள் கொண்ட நீண்ட சாசனமாகும். அடுத்து வந்த இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், அவனுக்குப் பின் வந்த முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் ஆகியோருக்கும் தனித்தனி மெய்க்கீர்த்திகள் உள்ளன, அடுத்து வந்த முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் (கி. பி. 1251—1268) மெய்க்கீர்த்தி ''பூமலர் வளர் திகழ் திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப'' எனத்தொடங்கும். 70 அரசனின் வெற்றிகள், சமயத்தொண்டுகள், பிறசாதனைகளை விபரிக்கும். முதலாம் மாறவர்மனின் மெய்க்கீர்த்தி ''தேர் போல்'' எனத்தொடங்கும்; 71 ஆனால் வரலாற்றுரீதியில் முக்கியமற்றது. இப்பெருமன்னரோடுகூட்டாக ஆட்சி செய்தவர்கள் சிலரும் தமக்கென மெய்க்கீர்த்தி வெளியிட்டனர். பாண்டியராதிக்கம் மங்கிச் சென்றுகொண்டிருந்த காலத்தில் ஆட்சிசெய்த மன்னர் சிலரும் மெய்க்கீர்த்தி வெளியிட்டனர். எடுத்துக்காட்டாக, 'பூமிசை வனிதை மார்பினிற் பொலிய' எனத் தொடங்கும் பராக்கிரம பாண்டியனின் மெய்க்கீர்த்தியினைக் குறிப்பிடலாம். 72 இதுபெரும்பாலும் வெறும் புகழ்மாலையாகக் காணப்படுகின்றது. இதன் காலம் கி. பி. 15ம் நூற்றாண்டு நடுப்பகுதியாம். பழைய தமிழ் மன்னர் குலங்களில் இறுதியாக எஞ்சிய பாண்டியர் மரபும் குன்ற மெய்க்கீர்த்தியும் அற்றுப் போயிற்று. வெற்றிகள் குறைந்து போகவோ அல்லது அற்றுப் போகவோ, மெய்க்கீர்த்திகள் முற்றிலும் புகழுரைகளாகவும் மாறுகின்றன.

அடுத்த பகுதிகளிலே பிரசஸ்திகள், மெய்க்கீர்த்திகளின் வரலாற்றியல்பும், இலக்கியச் சிறப்பும் சுருக்கமாக ஆராயப்படும்.

———

30 அ இராகவையங்கார். மு.மே.கு.நூ.ப. 213
31 பன்னிருபாட்டியல் — திரு. கா. ர. கோவிந்த ராச முதலியார் உரையுடன் சென்னை 1970 ப. 121
32 மேற்படி, ப. 122
33 ஷை 122
34 தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம் பூரணம் சென்னை 1961. ப 135 — 154 (சூ. 87—88)
35 Kailasapathy K.Tamil Heroie Poetry O.D.P. 1968 ப. 237
36 புறநானூறு 31
37 Kailasapathy K. மே.கு நூ ப. 232—233
38 Kailasapathy K. மே. கு. நூ. ப. 231
39 புறநானூறு 239
40 ஷை 182
41 ஷை 165
42 மதுரைக் காஞ்சி. 209
43 புறநானூறு 148
44 ஷை 174
45 ஷை 72
46 ஷை 27
47 அ நாகசாமி இரா. (பதிப்பு) செங்கம் நடுகற்கள் சென்னை, 1972
ஆ. வானமாமலை நா. 'செங்கம் நடுகற்கள்' ஆராய்ச்சி 3, 2. ப. 135—144
48 அ. Vanamamalai N. 'Hero stones and folk beliefs' Journal Tamil Studies Dce. 1972 ப.37-44
ஆ வானமாமலை நா. "நடுகற்களும் நம்பிக்கைகளும்" ஆராய்ச்சி 3. 4 ப. 9—18
49 தொல்காப்பியம் பொருளதிகாரம். சூ. 63
50 புறப்பொருள் வெண்பாமாலை உ. வே. சாமிநாதையர் பதிப்பு-சென்னை 1924 ப. 115—116 (பொதுவியற்படலம் சூ. 12)
51 புலவர் ராசு. மே. கு.
52 புறநானூறு. 39
53 ஷை 201 இவன் 49 தலைமுறையரசராயுள்ள மரபினன்
54 Kailasapathy K. மே. கு. நூ. ப. 130
55 Mahadevan I Tamil Brahmi Inscriptions of the Sangam Age Madras—1968
56 Kent. R. G. old Persian-American Oriental Society New Haven connecticut 1953 ப. 119
57 E. I. XVIII ப. 291 தொ.
58 S. I. I. Vol. III Part I No. 4
59 Sambamoorthy P. History of Indian Music—Madras 1960 ப. 46—56
60 மெய்க்கீர்த்தி, பிரசஸ்தி ஒற்றுமை வேற்றுமைகளைப் பின்வருவற்றிலே பார்க்கலாம்.
அ இராகவையங்கார் மு மே.கு.நூ.ப.214—216
ஆ. வி. சிவசாமி "வடமொழிச் சாசனமும் தமிழ்ச் சாசனமும்" ஈழநாடு 14—5—72
61 SII. XVII. No. 195, 288
62 சதாசிவபண்டாரத்தார் ரி வி. பிற்காலச் சோழர் சரித்திரம் முதலாம் பாகம் அண்ணமலை 1949 ப. 255
63 Sambamoor thy P. மே. கு. நூ. ப. 46
64 S. I. I. XVII No. 186, 308, 309
65 S. I. I. N. No. 537
S. I. I III. Part I. No. 28 முதலியன.
66 S. I. I. III. Part I. No. 29
67 S. I. I. III. Part I. No. 30
68 S. I. I. II. Part II. No. 58
69 S. I. I. V. No. 431
70 S. I. I. V. 459
71 சதாசிவ பண்டாரத்தார் ரி. வி. பாண்டியர் வரலாறு சென்னை 1966 ப. 221—222
72 Travancore Archaeological Series Vol. I. No. II. ப. 91—95

————

# இராமப்பய்யன் அம்மானை வரலாறும், கற்பனையும்

நா. வானமாமலை

திருமலை நாயக்கர் புகழை அவருடைய கோபிற் பணிகள்பறைசாற்றுகின்றன. திருமலைநாயக்கர் மகால், புதுமண்டபம், மீனாட்சியம்மன் கோயில் பிரகாரம், அக்கோயிலில் உள்ள சிலைகள், பாண்டிநாட்டிலுள்ள பல திருமால்கோயில் சிற்பங்கள், வண்டியூர் தெப்பக் குளம் முதலியன அவர்காலத்தில், அவருடைய முயற்சியால் உருவாக்கப்பட்டவை. அவருடைய காலத்தில் நிகழ்ந்த போர்களில் முக்கியமானது சடைக்கத் தேவன் போர். சடைக்கத்தேவன் என்ற சேதுபதி மன்னன் நாயக்கர் மேலாதிக்கத்தை உதறி விட்டு, சுயாதிக்கம் உடைய மன்னனாக ராமநாதபுரத்தைத் தலைநகராகக் கொண்டு சேதுநாட்டை யாண்டு வந்தவன். அவரை மதுரையின் மேலாதிக்கத்தினுட் கொண்டுவருவதற்காக திருமலைநாயக்கர் தமது படைத்தலைவன் ராமப்பய்யன் தலைமையில் ஒரு பெரும் படையை அனுப்பினார். சடைக்கன், தமது மருமகன் வன்னியத்தேவன் தலைமையில்மறவர்பெரும்படையொன்றைத் திரட்டி நாயக்கர் படையை எதிர்த்துப் போர் புரிந்தான். இப்போரில் வெற்றி யாருக்கென்று நிச்சயப்படாமல் மாறிக்கொண்டிருந்தது. இறுதியில் இலங்கையிலும், தூத்துக்குடியிலும் வாணிபம் செய்து கொண்டிருந்த போர்த்துகீசியர் உதவியால் ராமப்பய்யன் வெற்றி பெற்றான். போர் நிகழ்ச்சிகளை வருணித்தும், இரு கட்சிகளிலும் போராடிய வீரர்களின் வீரத்தைப் புகழ்ந்தும் பாடுவதுதான் இக்கதைப்பாடல்.

கதை கூறும் நாட்டுப்பாடல்கள் மக்கள் முன்னால் பாடப்படுபவை. எனவே அவை இசைப் பண்பு உடையனவாகவும், நாடகப்பண்பு உடையனவாகவும் இருக்கின்றன. இவை கும்மியாகவும், அம்மானையாகவும் லாவணியாகவும், வில்லுப்பாட்டாகவும் பாடப்படுகின்றன. உடுக்கடித்தும், தப்பு என்ற கொட்டடித்தும் பாடப்படும் பாடல்களும் உள்ளன.

இப்பாடல் அம்மானை வடிவத்தில் பாடப்படும். கட்டபொம்முகதை கும்மியாகவும், வில்லுப்பாட்டாகவும் பாடப்படுகிறது. திருநெல்வேலி, நாஞ்சில் நாடு பகுதிகளில் வில்லுப்பாட்டு கதை கூறும் நாட்டுப்பாடலாக வழங்கிவருகிறது. மதுரையிலும், இராமநாதபுரத்திலும், கோவையிலும் அம்மானை, கதைப்பாடல் உருவமாக விளங்குகிறது. தேசிங்குராஜன் கதை தொண்டைமண்டலப் பகுதியில் தெலுங்கு நாட்டுப்பாடல் தாக்கத்தால் புராணகதைப் பாணியில் வழங்கிவருகிறது.

தமிழ்நாட்டில் வழங்கிவரும்நாட்டுக்கதைப் பாடல்களில் தெய்வங்களைப் பற்றியகதைகளும், புராணக்கதைகளும்,சமூகக்கதைகளும்,ஏராளம். வரலாற்று நிகழ்ச்சிகளைக் கூறும் பாடல்கள் மிகக்குறைவே. அவற்றுள் அச்சேறியவை பத்துப் பாடல்களிலும் குறைவானவையே. தேசிங்குராஜன் கதை, மருது கதை, கட்டபொம்முகதை, கான்சாயபு கதை, இராமப்பய்யன் கதை, ஐவர்ராசாக்கள் கதை, இரவிக்குட்டிபிள்ளைபோர், பழாசிராஜாகதைஜிமுதலியகதைகள் தமிழ்நாட்டின் சிலபகுதிகளின் வழங்கி வருகின்றன. இவற்றுள் மருதுகதை சிவகங்கைக் கும்மி,

சிவகங்கை அம்மானை என்ற இரு கதைப்பாடல்களாக உள்ளன. அவற்றை ஓரியன்டல் மானுஸ்கிரிப்ட்ஸ் லைப்ரரி வெளியிட்டுள்ளது. கட்டபொம்மு கதைப் பாடல்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. அவற்றுள் மூன்றை நான்பதிப்பித்து ஆய்வுரையோடு வெளியிட்டுள்ளேன். கட்டபொம்மு கதைப் பாடலை நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் வெளியிட்டது. "வீரபாண்டியக் கட்டபொம்மு கதைப்பாடல்" என்ற தலைப்பில் ஓர் நூலையும், "கட்டபொம்மு கூத்து" என்ற நூலையும் மதுரைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ளது.

"ராமய்யன்அம்மானை ''ராமப்பய்யன் அம்மானை என்ற இருநூல்களை, முறையே ஓரியன்டல் மானுஸ்க்ரிப்ட்ஸ்லைப்ரரியும்,சென்னைப்பல்கழகக் கழகமும் வெளியிட்டுள்ளன.

முதல் நூலை சி. எம். ராமச்சந்திரன் செட்டியாரும். இரண்டாவது நூலை வையாபுரிப் பிள்ளையும் பதிப்பித்துள்ளார்கள்.

இவையிரண்டு பிரதிகளிலும் அடிப்படையான கதை நிகழ்ச்சிகள் ஒன்றாகவேயுள்ளன. ஆனால் கதையின் நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங்களையும் மதிப்பிடும் வரலாற்று நோக்கும் வேறுபடுகின்றன. கதைப் பாடகர்களின் வரலாறு நோக்குக்கு ஏற்றபடி அவர்கள் கதாபாத்திரங்களின் செயல்களையும், இயல்புகளையும் மதிப்பிடுகிறார்கள்.

வரலாற்று நிகழ்ச்சிகள் இருகதைகளுக்கும் பொதுவானவையே. ஆனால் கவிஞர்கள் எந் நோக்கில் வரலாற்று நிகழ்ச்சிகளைக் காண்கிறார்களோ அதற்கேற்றவாறு, கதைப்படைப்பு வேறுபடுகிறது. வரலாறும், வரலாற்றுக்கதையும் ஒன்றல்ல. வரலாற்று உண்மைகள், கலைஞனின் அழகியல் உணர்வில் ஆழ்ந்து கதையாகும் பொழுது, இலக்கிய உண்மையாகின்றன. இதனை அழகியல் ஆய்வாளர்கள் factual truth — நிகழ்வுண்மை, Artislic truth- கலையுண்மை எனக்கூறுவர். நிகழ்வுண்மை இவ்விருகதைகளுக்கும் ஒன்றேதான். ஆனால் உண்மையை நோக்கும் பாடகர் சமுதாய உணர்வுக்கேற்ப கதைப்படைப்பில் வேறுபாடு எழுகிறது.

நிகழ்வியல் உண்மையை அறிய ராமபய்யன் கதைப்பாடலுக்கு அடிப்படையான வரலாற்றுண்மைகளைக்காண வேண்டும். இவ்வுண்மையை அறிய ஏராளமான சான்றுகள் உள்ளன. திருமலை நாயக்கன் சாசனங்களும், முஸ்லீம் வரலாற்றாசிரியர்களின் நூல்களும், ஜெஸ்யூட் பாதிரிமார்களின் கடிதங்களும், நிகழ்வியல் உண்மையை அறிந்துகொள்ளத்துணை செய்கின்றன. இவற்றைப் பயன்படுத்தி சத்திய மூர்த்தி அவர்கள் TheVaicas of Madurai என்ற வரலாற்று நூலை எழுதியுள்ளார். இவையனைத்தினின்றும் இக்கதைப் பாடலின் நிகழ்வுண்மையைப் பின்வருமாறு சுருக்கமாகக் கூறலாம்.

விசுவநாதநாயக்கர், நாயக்கர் வமிச முதல்வர். இந்தவம்சத்தில் ஆறாவது பட்டத்திற்கு வந்தவர் முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர். இவருடைய மூத்தமகன் முத்துவீரப்பன். இவர் பட்டம் பெற்று 1622ல் இறந்தார். திருமலை நாயக்கர் 1623ல் பட்டம் முப்பத்தாறு ஆண்டுகள் ஆட்சி புரிந்து 1659ல் இறந்தார்.

இவர்காலத்தில் தமிழகத்தில் பலசிற்றரசுகள் இருந்தன. அவர்களனைவரும் விஜயநகர ராயர்களின் மேலாதிக்கத்துட்பட்டவர்கள். விஜயநகரம், பாமினி சுல்தான்களோடும், முகலாயப் பேரரசர்களோடும் இடையறாத போராட்டத்தில் ஈடுபட்டு வலுக்குன்றிச் சிதைந்த காலததில் தென்பகுதியில் ராயர்களது ராணுவ அதிகாரிகளாகவும், ராஜப்பிரதிநிதிகளாகவும் அதிகாரம் செலுத்தி வந்த நாயக்கர்கள் ராயர்களது மேலாதிக்கத்தை பெயரளவுக்கு ஒப்புக்கொண்டு சுயாட்சி செலுத்தத் தொடங்கினர். இக்காலத்தில் போர்த்துகேசியர் தொடர்பால், இலங்கை, போர்னியூ, கிழக்கிந்தியதீவுகள், அரபியா, ஐரோப்பா முதலியநாடுகளோடு தமிழகம் வாணிபத்தில் ஈடு பட்டது. துணி, உப்பு, மீன், அரிசி, மிளகு, தானியங்கள் முதலிய பொருள்களை தமிழ் நாட்டில் கொள்முதல் செய்து வெளிநாட்டில் வாணிபம் செய்யவும், வெளிநாட்டுப் பொருள்களை தமிழ்நாட்டிற்குத் தொடர்ந்து வாணிபம் செய்யவும் போர்த்துகேசியர் வரலாற்றுக் கருவியாயினர். உள்நாட்டு உற்பத்தி சக்திகள் இத்தேவைக்கேற்ப வளர்ந்தன.

ஆனால் சிற்றரசுகளான அரசியல் அமைப்புக்களும், பாளையக்காரர்களின் குறுகிய அரசியல் பிரிவுகளும், இவ்வளர்ச்சிக்குத் தடையாயிருந்தன. எனவே ஒருவலுவான மத்திய ஆட்சியும், வெளிநாட்டு, உள்நாட்டு வாணிபத்திற்கேற்ப, நாட்டு உற்பத்தியை வளர்ப்பதற்கேற்ற ஒருங்கிணைந்த ஆட்சியும் அவசியமாயிற்று இதனை உணர்ந்த திருமலை நாயக்கர் தஞ்சை, செஞ்சி முதலிய நாயக்க அரசுகளை தம் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர முயன்று வெற்றிபெற்றார். மதுரைச்சீமைப்பாளையக்காரர் மீது தமது ஆதிக்கத்தை வலுவாக்கினர். அதேசமயம், போர்த்துகேசியர் வாணிபம் புரிந்த தென்கிழ் கடற்கரை மீது அவருக்கு ஆதிக்கமில்லை அவருடைய ஆதிக்கத்திலிருந்து விலகி சேதுபதி மன்னர்கள் கடற்கரையில் ஆதிக்கம் செலுத்தி வந்தனர். ஆனால் உள்நாட்டில் வாணிபம் நடத்த சேதுபதிகளால் முடியாது. எனவே தடையற்ற வாணிபம் பரவமுடியவில்லை. பரந்த ஆட்சி எல்லையும், பெரும்படையும், நிருவாக அமைப்பையும் தமது கையில் கொண்டிருந்த நாயக்கர், தமது மத்திய ஆட்சியை சேதுநாட்டிற்கும் விஸ்தரிக்க எண்ணம் கொண்டு போர் தொடுத்தார். இவருடைய போர்களில் இவரது படைகளின் தளபதியாக ராமப்பய்யன் என்ற பிராமணர் பணிபுரிந்தார். இவர் திறமையானவர். கொடியவர். ராஜவிசுவாசமுடையவர். அவர்தலைமையில் அனுப்பிய நாயக்கர் படை சேது நாட்டில் புகுந்தது. அப்பொழுது சடைக்கன் சேதுபதி சேதுநாட்டை யாண்டு வந்தார். அவருடைய தந்தைக்கு காதல் நாயகி ஒருத்தி மூலம் 'தம்பி' என்ற பெயருடைய சகோதரர் இருந்தார். இவர் தமக்கே சேதுபதிப் பதவி வேண்டுமென விரும்பி திருமலை நாயக்கரோடு சேர்ந்து கொண்டார். திருமலை நாயக்கரின் அரசியல் நோக்கத்திற்கு தம்பி சேதுபதியின் நட்பு தேவையாயிருந்தது. திருப்புவனம், பாம்பன், இராமேசுவரம் முதலிய இடங்களில் பெரும்போர் நடைப்பெற்றது. சடைக்களின் மருமகன் வன்னியத்தேவன், மறவர் படைகளுக்குத் தலைமை தாங்குகிறான் அவன் மாபெரும் வீரன். ஆயினும் வரலாற்றுச் சக்திகளான உற்பத்திச் சக்திகள், வாணிபவிஸ்தரிப்புக்கு உகந்த பெருமன்னர் ஆட்சியாதிக்கத்தை எதிர்த்து வெல்ல அவனால் முடியவில்லை. அவன் போரில் இறந்தான். சடைக்கன்சிறைப்பட்டான். அதனால்மறவர்நாட்டில் கலகங்கள் நிகழ்ந்தன. திருமலையால் அவர்களை அடக்க முடியவில்லை. எனவே சேதுபதி நாட்டை தமிழகத்தோடு இணைத்துக்கொள்ள ஓர் ராஜதந்திரத்தைக் கையாண்டான். சேதுபதியை விடுதலை செய்து, அவனுக்கு மரியாதைகள் செய்து தனது மேலாதிக்கத்தைஒப்புக்கொள்ளச் செய்தான். அதன் பின்னர் நடந்த வரலாற்று நிகழ்ச்சிகள் நமது கதைப்பாடலின் இலக்கியப் பொருளல்ல. எனவே நிகழ்வுண்மை இதனோடு முடிகிறது.

ராமப்பய்யன் அம்மானை ஒரு வீர காவியம். அதன் நோக்கம் வீரத்தைப் புகழ்வது. ஒட்டக்கூத்தன் சோழர் வீரத்தைப் புகழ்ந்தான். எதிரிகள் வீரம் அவன் கண்ணில் படவில்லை. இளங்கோ, செங்குட்டுவன் வீரத்தைப் புகழ்ந்தார். ஆனால் அவனது பகைவர்கள் வீரத்தை அவர் காணவில்லை. ஆனால் நாட்டுப்பாடல்கள் இரு கட்சி வீரர்களின் வீரத்தையும் காண்கிறது. அதன் இயல்பிலேயே, நாயக்கர் படைத்தலைவன் ராமப்பய்யனும், சடைக்களின் படைத்தலைவன் வன்னியனும், வீரர்களாகவே கலையுண்மையாக நமக்குச் சித்திரிக்கப் படுகிறார்கள்.

போர்கள் தாம் இக்கதையின் பொருள். ஆனால் போரில் பங்குகொள்ளும் சக்திகளும் இங்கு பாத்திரங்கள் மூலம் சுட்டிக் காட்டபடுகின்றன. 72 பாளையப்பட்டாரும், போர்த்து கேசியரும் ராமப்பய்யன் படையில் போராடுகிறார்கள். இது மத்திய அரசின் ஆதிக்கம், அக்காலத் தமிழ் நாட்டின் தேவை என்பதைக் காட்டும்.

வன்னியன் படையில் பெரும்பாலும் மறவர்களும், அவர்களுடைய நண்பர்களான சில காதி

யார்களுமே போராடுகிருர்கள். இவர்கள் தங்கள் பகுதியில் தங்கள் இஷ்டம் போல வாழ, தமிழ் நாட்டுப் பொருளாதர வளர்ச்சியில் போக்குக்கு மாருக ஒதுங்கி நிற்க முயலுகிருர்கள். எனவே வரலாற்று சக்திகளின் திசைக்கு எதிராக இவர்கள் நிற்பதால் இவர்கள் தோற்றுப் போகிருர்கள்.

மக்களுடைய நம்பிக்கைகள், வீரம் பற்றிய கருததுக்கள் இவற்றிற்கேற்றபடி ராமப்பய்யனுடைய பாத்திரத்தையும், வன்னியின் பாத்திரத்தையும் கலையுண்மைகளாகக் கவிஞர் படைக்கிருர். திருமலே நாயக்களிடம் விடைபெற்றுச் செல்லும் ராமப்பய்யன் கூறுகிருன்.

"மதுரை நகர் வாழும் மன்னவனே
நீ கேளாய்,
நாலுதிக்கு மெட்டு பதிறுை கோணமெல்லாம்
திக்கடங்க வெட்டித்திறை கொண்டே
தானுமின்னு
வணங்காத மன்னர் தம்மை வணங்குவித்தேன் தானு மின்று
நின்னருளால் இம்மன்னர் தமை நீ என்
னிலத்தில் வெட்டிக்
கட்டாத கப்பமெல்லாம் கட்டுவித்தேன்
நின்னருளால்",

மேலும் சிற்றரசர்களே, பேரரசுக்கு உட்படுத்திய வெற்றிகளைக் கீழ்வருமாறு கூறுகிருன்.

"செஞ்சியில் இராயர் சேர்ந்த படை வந்தாலும் ஒட்டியர் மராட்டியர் உள்ள படைவந்தாலும் சிங்கிளியர் தங்கள் சேர்ந்த படை வந்தாலும் என் பேரைச் சொன்னலே இப்பூமி நாடார்கள்"

இதனைக் கேட்ட திருமலே நாயக்கன் "வென்று வா" என்று கூறி விடையளித்தான்.

இராமனுடைய விரத்திற்கு, அவன் கொண்டிருக்கும் "வலுவான மத்திய அரசு" என்ற அரசியல் நோக்கும், அதனை நிறுவுவதற்குரிய வலிமைநாயக்கர்ஆட்சிக்கு இருக்கிறதென்றநம்பிக்கையுமே காரணம்.

ஆனல் வன்னியின் வீரமோ, தாக்கப்பட்ட வீரனது தற்காப்பு, உணவாகவும் புலியால் தாக்கப்பட்ட மான், தப்பும் வழியறியாமல் எதிர்த்துத்தாக்கும் உணர்வு போன்றுமே உள்ளது. அவனது வீரம் வலிமையில் உள்ள நம்பிக்கையால் தோன்றுவதன்று- மானம், உரிமையுணர்வு ஆகிய இரண்டுமே வன்னியின் வீரத்தின் இயக்குசக்திகள் இதனை அவன் வீரபுரைகளில் காணலாம்.

"கெட்டானே பார்ப்பான் கீழ்த்திசையை
நோக்கிவிந்து
பஞ்சாங்கஞ் சொல்ல பாரிலிடமிலேயோ?
பூசைபண்ணித்தான் பிழைக்கப் பிள்ளையார்
தானிலேயோ?
ஆசைகொண்டு வந்தானே அறியாமல் பார்ப்
பானும்.
வடுதர்பட்ட பாடெல்லாம் மறந்தார்கள் மன்
னவர்கள்
பார்ப்பனும் இதுதேசம் படையெடுத்து வந்
தானே
இங்கே படையெடுக்க யினி வெட்கந் தானில்
லேயோ,
சாய்வாக வந்த தளத்தை முறிய வெட்டி
பார்ப்பான் குடுமியிலே பாங்குடனே
தேங்காயை
கட்டியடிப் போனன்ருன் கன்னன் புலிபனை
கரியனும்."

இப்பேச்சில் பார்ப்பான் போர்த் தொழிலுக்குரியவன் அல்லன்; தன்சாதியினரே போர்த் தொழிலுக்குப் பிறப்புரிமையுடையவர்கள் என்ற சாதி வீரயுணர்வைக் காண்கிருேம். ஆனல வரலாற்றுச்சக்திகள் சாதியை மீறி ஓர் அரசியல் பொருளாதர நோக்கிற்கு அதிகாரத்தாலும், வலிமையாலும் பலசாதியினரை திருமலேநாயக்கன் படையில் சேர்த்து விட்டிருப்பதை வன்னியன் காணவில்லே.

இராமன் இருவகையில் தன் கட்டளைகளை நிறைவேற்றுகிருன். தீவில் ஒளித்திருக்கும் வன்னியின் படைகளை அழிக்க அணைகட்டுவதற்கு இராமன் ஆணையிட்ட பொழுது அரசகுல மக்கள் கல் சுமக்கத்தயங்கி நின்றனராம். இராமன்

தன் தலைப்பாகை மீது கல்லையேற்றிச் சுமந்து சென்றான். உடனே மன்னர்கள் கல்சுமந்தன ராம். முன்மாதிரியாயிருந்து செயலில் ஊக்கு விக்கும் தலைமை இயல்பு ராமனிடம் இருந்ததை இந்நிகழ்ச்சி காட்டுகிறது. சூழ்ச்சியாலும், வன்முறையாலும் செயல் நடந்து விக்கவும் அவன் தயங்குவதில்லை. செட்டிகள், அரசமக்கள் கல் சுமப்பதைப் பார்த்துச் சிரித்ததும், அவர்களையே கல்சுமக்கச் செய்தான். செட்டிகள் கல் சுமப்பதைப் பார்த்து தாசிகள் சிரித்ததைக் கேட்டு, தாசிகளைக் கல் சுமக்க வைத்தான். இப்படியே பண்டாரங்கள், மக்களனைவரையும் வன்முறையால் வேலைசெய்ய வைத்து கடலில் அணைகட்டினான், அரசியல் சூழ்ச்சி, தலைமைத்திறமை, பெரும்படை நடத்தும் திறமை, அரசியல் சூழ்ச்சித் திறனால், தன்வெற்றியால், பறங்கியருக்குலாபம் உண்டெனக்காட்டி, அவர்களைத்தம்மோடுசேர்த்துக் கொள்ளல் போன்ற இயல்புகள் ராமனுக்கு உண்டென்பதைக்கவிஞர் தமது பாத்திரப்படைப்பில் காட்டியுள்ளார்.

வன்னியன் சுத்த வீரன். அவனுக்கு அரசியல் தந்திரம் எதுவும் இல்லை. முரட்டுப் போர்தான் அவனுக்குத் தெரிந்ததெல்லாம். உயிரை மதியாமல், உள்ளுனர்வால் ஊக்கப்பட்டும், சாதிப்பெருமையால் உந்தப் பட்டும் அவன் போராடுகிறான். இப்போரில் இருபுறமும் துப்பாக்கி, வாணம் கப்பற்படை முதலியன பயன் படுகின்றன. ஆனால் கடல்படையில் வலிமை பெற்றபோர்த்துகேசியர்கள் ராமபய்யன் படையோடு சேர்த்து விட்டதால், அவர்களுடைய வலிமை வன்னியனால் எதிர்க்க முடியாததாயிற்று.

இவ்வாறு புறநிலை சக்திகள் எதிர்த்து நிற்கும் பொழுது, வலிமையுடைய சக்திகளைத் தன்பால் கொண்ட ராமப்பய்யன் வெற்றி பெறுவான் என்பது உறுதியே. ஆயினும் இரு வீரர்களின் வெற்றி தோல்விக்குரிய காரணத்தை நாட்டு நம்பிக்கையில் கான முயலுகிறார் கவிஞர்.

ராமப்பய்யன் செய்வினை செய்து வன்னிக்கு அம்மை கண்டது என்றும், நோயையும் மதிக்காமல் குதிரையேறிச் சென்று பகைவர் படையைக் கலக்கியடித்து, அவன் போரில் மாய்தான் என்றும் கவிஞர் கூறுகிறார். அவனுக்கு நோய் கண்டவுடன் வன்னிநாயகம் செய்து ராமப்பய்யனுக்கு பிளவையும், முடக்குவாதமும் வரச்செய்தான் என்றும் கதைப்பாடல் கூறுகிறது. ஆயினும் ராமப்பய்யனே வெற்றி பெற்றான்.

சிறை செய்யப்பட்ட சடைக்கன் திருமலை நாயக்கன் முன், "என் மருமகன் வன்னியிறக்காவிடில் நான் உன்னிடம் வந்திருக்க மாட்டேன் "என்று வீரச் சொற்களைப் பேசுகிறான். திருமலை நாயக்கன் விலங்குமுட்டிகபாலில் வைக்கச்சொல்லுகிறான், காவிலில்இருந்த சடைக்கன் திருமாலை வணங்கி அருள் பெற்றான். கைவிலங்குகள் சழன்றன. இதனைக்கேட்ட திருமலை நாயக்கன் திருவருளை நினைத்து அவனை விடுவித்து நண்பனுக்கி விடுதுகளும், மரியாதையும் அளித்து சேது நாட்டிற்குத் திருப்பியனுப்பினான். இது கதையின் முடிவு. இம்முடிவு பகைவர் இருவருக்கும் வெற்றியாகக்காட்டப்பட்டுள்ளது.

வரலாற்றுண்மை, சடைக்கன் வலிமையிழந்து விட்டதால், மத்திய ஆட்சியை வலப்படுத்த ஒப்புக் கொண்டு, நாயக்கர் ஆட்சிக்குத் துணையானான். இந்நிழச்ழ்வுண்மை, நாட்டுக்கதைப்பாடலில் வீரர்களின் சமதானமாக கலையுண்மையாக மாற்றப்பட்டுள்ளது. (சரஸ்வதிமகால் பிரதி, சென்னைப்பிரதி)

இரண்டு பகுதிகளில் ஒன்று சடைக்கன் கட்சிக்கு ஆதரவான முறையில் கதையைச் சொல்லுகிறது. மற்றொன்று ராமபய்யனுக்கு ஆதரவாகக் கதைசொல்லுகிறது. ராமபய்யனது கொடுமைகள், சூழ்ச்சிகள், இரண்டாவது பிரதியில் விரிவாகக் கூறப்படுகின்றன. இரண்டாவது பிரதியில் அவையில்லை. ஆயினும் இரண்டுபிரதிகளுமே ராமபய்யனையும், வன்னியையும் மாவீரர்களாகவே சித்தரிக்கிறது.

இவற்றில் சரஸ்வதிமகால்பிரதி, திருமலை நாயக்கர் காலத்தைச் சேர்ந்தது.

வாழ்த்துப்பாடலில்,

"ஆலவாய்ச் சொக்கர் அருள்தானுமுண்டாகச்
சீலமுள்ள திருமலேந்திரன் செங்கோல் தழைத்தோங்க
திங்களில் மூன்று மழை குறமாகத் தான் பொழிய, "

திருமலேந்திரன் பெயர் வருவதும், அவன் செங்கோல் தழைத்தோங்க வேண்டும் என்று வாழ்த்துவதும் பாடலின் காலம் திருமலை மன்னனின் காலமே என்றுணரலாம். இப்பாட்டில் இராமபய்யன் சூழ்ச்சிகள், கழுவேற்றும் கொடுமைகள், அழகத்தேவனைத் துண்டு துண்டாக்கிக் கூடையில் போட்டு அவன் மனைவி தலையில் சுமக்கச் செய்த கொடுமை முதலிய செய்திகள் இல்லை. இப்பிரதி ராமப்பய்யனுக்கு ஆதரவான ஓர் மனப்போக்குடையவர் எழுதியது. சென்னைப்பிரதியில் மேற்கூறிய செய்திகள் உள்ளன. இப்பிரதியில் வாழ்த்துப்பாவில் திருமலை நாயக்கன் பெயர் இல்லை. "இராமபய்யன் கதையைப் பாடத்துணை செய்வாய்" என்று விநாயகருக்கும், சரஸ்வதிக்கும் துதிப்பாடல்கள் உள்ளன. எனவே இப்பாடல்திருமலைநாயக்கன் காலத்திற்குப்பிற்பட்டது என அனுமானிக்கலாம். பாட்டின் முடிவில், வாழ்த்துப் பாடலில்,

"மன்னன் கச்சித்திருமலேந்திரனுர் ஆண்ட கதை
கேட்டவர்களெல்லோரும் சிறப்பாக வாழ்ந் திருக்க
திருமலை நாயக்கன் "ஆண்டகதை நான் பாட" என்று வருகிறது. இது இறந்தகாலம் குறித்தது. எனவே இப்பிரதி திருமலை மன்னனின் காலத்திற்குப் பின்னர்தான் தோன்றியதென்பது விளங்கும்.

திருமலை மன்னன் காலத்திற்குப்பின் மீண்டும் சேதுபதி — நாயக்கர் போர்கள் நடந்தன. இப்போர்களில் மறவர்களை ஊக்குவிக்க, வன்னியின் வீரத்தைப் போற்றுவதோடல்லாமல், ராமனைச் சற்றுத் தாழ்த்தியும் பேசவேண்டியது அவசியமாயிற்று அப்பகுதியின் அரசியல் நிலைமைகளுக்கு அவசியமாயிற்று. எனவே தான் சில மாற்றங்களை இப்பிரதியை எழுதியவர் செய்திருக்கிறார்.

தமக்குமுன் வழங்கிவந்த இராமபய்யன் அம்மானைப் பாடலையே, மறவர்படை ஊக்கம் பெற பயன்படுத்த முடியுமென்பதைக் கவிஞர் கண்டிருக்கவேண்டும். அதற்கு கதையிலுள்ள இருவீரர்களான இராமபய்யன், வன்னியன் இருவர் சித்திரங்களிலும், ராமபய்யனைச் சிறிது குள்ளமாக்கி விட்டால், வன்னியன் உயர்ந்து விடுவான் என்று கருதி' ராமபய்யனது கொடுமை பற்றி விவரங்களைச் சேர்த்து, மக்கள் மனதில் இருக்கும் வீரத்தைப் பற்றிய மதிப்பில் தாழ்ந்தவனுக்கிக் காட்டியுள்ளார். போரில் கொடுமை செய்யாத மன்னர்களே கிடையாது. வன்னியன் கொடுமைகளைச் சொல்லாமல், இராமபய்யன் கொடுமைகளை மட்டும் சொன்னுல் மக்கள் வீரமதிப்பில் அவன் தாழ்ந்துவிடுவான்.

இதனையே தமது நோக்கத்திற் கேற்ற முறையில் கவிஞர் செய்துள்ளார்.

ஒப்பியல் ஆய்வு

# வடமலையாள நாட்டில் நன்னன் நினைவுகள்

பி. எல். சாமி, பி. எஸ்ஸி..

இக்கட்டுரை சில வரலாற்று நிகழ்ச்சிகளின் நினைவுகள் சங்க காலத்திலும் இன்றைய மக்கள் நினைவிலும் நிலைத்திருக்கும் நிலையிலுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்கிறது. சங்க காலச் செய்திகள் வட மலையாள நாட்டில் இன்றும் சில மாறுபாடுகளோடு காண பரம்பரைச் செய்திகளாகவும், கதைகளாகவும் நிலவுகின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய சில செய்திகள் இன்னும் நாட்டார் மரபில் நிலைத்து நிற்கிறது. இவ்விரண்டையும் ஒப்பிட்டு கால இடை வெளியில் கிடைத்த இடைக்கால சரித்திரச் சான்றுகளையும் இலக்கியச் சான்றுகளையும் பயன் படுத்தி ஆய்வாளர் P.L. சாமி அவர்கள் இக் கட்டுரையை எழுதியிருக்கிறார்கள். நாட்டார் நினைவுச் செய்திகளை அவரே மாஹியில் அட்மினிஸ்ட்ரேட்டராக இருந்த போது கள ஆய்வுகள் மூலம் சேகரித்தார்கள். எனவே, தற்கால கள ஆய்வு முறையையும், முற்கால இலக்கியச் செய்திகளை வரலாற்றை உருவாக்கப் பயன்படுத்தும் நவீன முறைகளையும் இணைத்துச் செய்யப்பட்ட ஒப்பியல் ஆய்வின் விளைவே இக்கட்டுரை. இது போன்ற மற்றொரு கட்டுரையை அடுத்த இதழில் வெளியிடுவோம்

(நா: வா.)

சங்க நூல்களில் நன்னன் என்றொரு வேளிர் குல அரசனைப்பற்றிப் பல பாடல்கள் கூறியுள்ளன அகநானூறு, புறநானூறு குறுந்தொகை, நற்றிணை, பதிற்றுப்பத்து ஆகிய தொகை நூல்களில் வரும் செய்திகள் கொண்கான நாட்டில் ஏழில் மலையையும் பாரம் என்ற நகரையும் ஆண்ட நன்னனைப் பற்றியவை. பூழி நாட்டையும் நன்னன் ஆண்டதாகக் கூறப்பட்டுள்ளது ஆனால், மலைபடுகடாம் என்னும் பாட்டில் பாட்டுடைத்தலைவன் நன்னன் சேய் நன்னன் என்று சொல்லப்படுவதால் நன்னனுடைய மகன் நன்னன் என்பது தெளிவாகின்றது நன்னன் ஆண்ட கொண்கானம், ஏழில் மலை, பூழிநாடு ஆகியவைகள் இன்று தென்கன்னடத்தில் துளு பேசும் பகுதியாகவும் வடமலையாள நாட்டில மலையாளம் பேசும் பகுதியாகவும் உள்ளன. பூழிநாட்டின் தலையிடம் தற்போது மாஹி என்ற பழைய பிரெஞ்சுத்திட்டில் பூழித்தலை என்ற பெயருடன் இன்றும் உள்ளது. நன்னனுடைய ஏழில் குன்று, பாரம் ஆகியவை கண்ணனூரிலிருந்து 15 மைல்களில் காணப்படுகின்றன. நன்னன் சேய் நன்னனின் பல்குன்றநாடும் தலைநகரமான செங்கண்மாவும் திருவண்ணாமலைக்கருகில் உள்ளன. நன்னன் ஆண்ட வடமலையாள நாட்டிற்கும் நன்னன் சேய் ஆண்ட பல்குன்ற நாட்டிற்கும் 500மைல்களுக்கு மேல் இடைவெளி இருக்கின்றது. நன்னன் சிற்றரசனாதலால் நன்னன் வேறு, நன்னன் சேய் நன்னன் வேறு என்பது தெளிவாகின்றது. நன்னனுக்குப் பிறகு அவனுடைய மகன் ஏழில் மலையைக் கைவிட்டு பல்குன்ற நாட்டில் அரசு செய்தான். பூழி நாட்டு நன்னனைக் களங்காய்க் கண்ணி நார் முடிச் சேரல் தோற்கடித்து கொன்று விட்டதைக் கல்லாடனார் அக நானூற்றில் 199-ம் பாட்டில் கூறியுள்ளார். நன்னனை தோற்கடித்து அவனது காவல் மரமான வாகையை நார் முடிச்சேரல் வெட்டியதாக பதிற்றுப் பத்திலும் கூறியிருப்பதைக் காணலாம். ஆதலின் கொண்கானத்து நன்னன் இறந்த பின் அவன் மகன் செங்கண்மா என்ற இடத்தில் புதியதாக ஒரு நாட்டில் அரசு கோலினான் என்று கொள்ள வேண்டும். கொண்கானத்து நன்னன், உதியன் நன்னன் என்று அழைக்கப்பட்டான். இவன் வேளிர் குலத்தில் பிறந்தவன். நன்னன் வேண்மான் என்று இவனை அகநானூறு 97-ம் பாட்டு கூறுகின்றது. வேளிர் குலத்தில் ஆய்க்குடியில் பிறந்ததால் 'நன்னன் ஆய்' என்றழைக்கப்பட்டான்.

சங்க நூல்களில் நன்னன் ஆண்டதாகக் கூறப்பட்டுள்ள ஏழில் மலையை ஆராய்ந்த போது சில செய்திகள் தெரிந்தன. ஏழில் மலையை ஏழுமலையென்று மலையாளத்தில் பாமரமக்கள் அழைத்தாலும் அங்கு ஏழுமலைகள் இல்லை. ஏழில் மலையை ஏழிமலா என்றும்

சிலர் அழைக்கின்றனர். சங்க காலப்பெய ரோடு இந்தப் பெயர் ஓரளவு ஒத்துள்ளது. ஏழில் என்று பெயர் பெற்றதன் காரணத்தை ஆராயலாம். குறுந்தொகையில் 138-ம் பாட்டில் வரும் 'ஏழில்' என்ற சொல் ஏழிலைப்பாலை மரத்தையும் குறிக்கலாம் என்று உ வே சாமிநாதய்யர் கூறியுள்ளார். 'ஏழில் ஒரு மலை, இது நன்னன் என்பவனுக்கு உரியது; ஏழிலைப் பாலையென்னும் மரமும் ஆகும்; இப்பெயர் கொள்ளுங்கால் உம்பரென்பதற்கு அப்பாலென்று கொள்க' என்று விளக்கவுரை கூறியுள்ளார்.

''கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே
எம்மி லயல தேழி லும்பர்
மயிலடி யிலைய மாக்குர னொச்சி
அணிமிகு மென்கொம் பூழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே''
—குறுந்தொகை 138

வீட்டின் அயலதாகிய ஏழிற்குன்றத்தின் மேலுள்ள நொச்சியின் பூவிழும் ஓசையைத் தலைவியும் தோழியும் இரவில் கேட்டதாக இப்பாட்டில் சொல்லப்பட்டுள்ளது. நொச்சி மரம் வீட்டுக்கருகில் வளர்ந்ததாகவே பல சங்கப் பாடல்கள் கூறுகின்றன. ஏழில் மலையின் மேல் வளர்நத நொச்சியின்பூ வீழ்தல் ஓசையைக் கேட்டதாக கூறுவது பொருத்தமாகத் தெரியவில்லை. ஆதலின் ஏழிலைப்பாலை மரத்தின் அப்பால் வளர்ந்த நொச்சி என்றே பொருள் கொள்ளவேண்டும். ஏழிலைப்பாலை மரம் இன்றும் ஏழில் மலையில் இயற்கையாக வளர்வதைக் காணலாம். ஏழில் மலைக்குச் சென்று நேரில் நான் ஆராய்ந்தபோது ஏழில் மலையே ஏழிலைப்பாலை மரங்கள் மிகுதியாக வளர்ந்ததால் பெயர் பெற்றதென்று தெரிந்து கொண்டேன். காஞ்சி, வஞ்சி, கொற்கை முதலிய பழைய நகரங்கள் மரத்தினுல் பெயர் பெற்றன. கொற்கு என்ற பெயர் கொன்றை மரத்தின் பெயராக சங்க நூலில் (நற்றிணை-302) வருகின்றது. ஆதலின் கொற்கை என்ற ஊர் கொன்றை மரத்தின் பெயராலே தோன்றியதாகலாம். கால்டுவெல் கருதுவது போல் கடல் கரையைக் கொல்லும் இடம் என்று வலிந்து கூற வேண்டியதில்லை. அதே போல ஏழில் மலையும் 'ஏழில்' என்ற ஏழிலைப் பாலை மரத்தால் பெயர் பெற்றதென்றே பொருத்தமாகும். ஏழில் என்பதற்கு யாழ் என்று பொருள் கொண்டு யாழ் வடிவாக மலையிருந்ததால் ஏழில் என்று பெயர் பெற்றதாக ஔவை துரைசாமி பிள்ளையவர்கள் கூறுவார். ஏழில்மலையை நேரில் சென்று பார்த்தபோது அது யாழ் வடிவமுடையதாகத் தெரியவில்லை. மற்றும் ஏழில் என்ற சொல் யாழைக் குறிக்கவுமில்லை. ஏழிலை என்பதே 'ஏழில்' என்று குறுகி ஏழிலைப்பாலை மரத்தைக் குறித்து வழங்கி பின்னர் அம்மரம் நிறைய வளரும் மலையைக் குறித்தது. ஏழிலை மரத்தை வடமொழியில் 'சப்தபர்னீ' என்று மொழிபெயர்த்து வழங்கினர்கள். ஏழிலைப் பாலை மரம் இன்றும் மலையாள மக்களின் வாழ்க்கையில் முக்கியமானதாகும். பகவதி முதலிய பழந்தெய்வ வழிபாடுகளில் இந்த மரம் மிக முக்கியமானதாகும். ஏழிலைப்பாலை மரத்தை ஏலிலம்பாலா, என்றும் அழைக்கின்றனர். ஏழில்மலை என்ற சங்க காலப் பெயரே ஏழுமலை, எலிமலை என்று பாமர மக்கள் வாயில் மாறிற்று ஏழுமலை என்று பிற்காலத்தில் கொண்டதால் 'சப்தசைலம்' என்றும் மொழிபெயர்த்தனர். இடைக்காலத்தில் எலிமலை யென்றும் வழங்கியதாகத் தெரிகின்றது. [1]13-ம் நூற்றுண்டில் மார்க்கோ போலோ 'எலி' என்ற நாட்டைப் பற்றி எழுதியுள்ளார். இது ஏழில் மலையைக் குறிப்பதாகும். [2]இபின்பத்தூத்தாவும் (Ibin Batuta) 'இலி' என்று இதைக் குறிப்பிட்டுள்ளார் பிற்காலத்தில் Mount Deli என்று ஐரோப்பியர் இதை அழைத்தனர். எலிமலை யென்று பாமரமக்கள் வாயில் வழங்கியதையே வடமொழியாளர் மொழிபெயர்த்து 'முஷிகப்பர்வதம்' என்றழைத்தனர். சந்திரோற்சவம் என்ற 13-ம் நூற்றுண்டு வடமொழி நூலின் முஷிகவம்சத்தைப் பற்றி கூறப்பட்டுள்ளது. 'பழமலையைக் கிழமலையென்றறைவதென்னே' என்று இராமலிங்கர் பாடியது போல ஏழில்மலையை எலிமலையென்றது நகைப்புக்கிடனுயிருக்கிறது. இந்த அரசர்கள் ஆண்ட இடத்தை எலிகோயிலகம் என்று கூறுவர். ஸ்ராபோ (Strabo) என்ற கிரேக்க ஆசிரியர் ''முசிகானேஸ்'' (Mousikanos) என்ற நாடு இந்தியாவில் தூரத் தெற்கில் இருந்ததாகக் குறிப்பிட்டார். இதைச் சில அறிஞர்கள் கேரளத்து முஷிக

நாடு என்றும், வேறு சிலர் சிந்துநதிப் பள்ளத் தாக்கின் கீழ்ப்பகுதி யென்றும் கொண்டனர். [3]போராசிரியர் ராய் சௌத்ரி கேரளத்து முஷிக நாடாக இருக்கலாம் என்று கருது கிறார். நந்தர்கள் ஆண்ட காலத்திலேயே வெளி நாட்டாருக்குப் பாண்டிய, சோழ நாடுகள் போல ஏழில்மலையும் தெரிந்த இட மாக இருந்திருக்கலாம். முஷிககானம் என்ற பெயரையே கிரேக்க நூலாசிரியர் குறிப்பிட் டுள்ளதாகக் கருதலாம். முஷிக வம்சம் என்ற வடமொழி நூலில் பிற்காலத்தில் ஆண்ட அரசர் பெயர் வரிசையில் நன்னன் பெயரும் மூவன் பெயரும் காணப்படுகின்றது. மூவன் என்ற தலைவன் பெயர் புறநானூற்றில் (209) வருகின்றது. இவன் 'சேய்' என்றழைககப் படுகின்றான். மூவன், மூவன் சேய் என்ற இரு தலைவர்கள் குறிக்கப்படுகின்றார்கள். நன்னன், நன்னன்சேய் என்ற உறவுப் பெயர்களைப் போல மூவன், மூவன்சேய் என்ற பெயர்கள் வழங்குவது கவனிக்கத்தக்கது. இவ்வழக்கு சேரநாட்டு வழக்குபோலத் தோன்றுகின்றது நற்றிணையில் சேரமான் கணைக்காலிரும் பொறை மூவனைக்கொன்று அவனுடைய பல்லைப் பிடுங்கி தொண்டிநகர் வாயிற் கதவில் அழுத்தி வைத்ததாகக் கூறப்பட் டுள்ளது. அம்மூவன் என்ற புலவர் தொண்டி, மாந்தை முதலிய சேர நாட்டூர்களைப் பாடி யதால் சேரநாட்டினராகக் கருதப்படுவார் முஷிகவம்சத்தில் வரும் நன்னன், மூவன் என்ற பெயர்கள் பிற்காலத்திலும் இங்கு ஆண்ட மன்னர்கள் இங்கு வாழ்ந்த சங்கால மன்னர் பெயர்களைச் சூட்டி வந்ததைக் குறிப் பிடும். நன்னன் என்ற பெயரைத் தமிழ் நாட்டில் மக்களுக்குப் பெயராக இன்று வழக் கில் காணமுடியாது. ஆனால் ஏழில் மலைக்கரு கில் உள்ள நீலேஸ்வரம் ஊரில் மீனவர்களி டையே 'நந்நன்' என்ற பெயர் மக்களின் பெயராக வழங்கினதைக் கண்டேன். பெய ரொலிப்பில் தந்நகரம் இருப்பது குறிப்பிடத் தக்கதாகும். பிற்காலத்துத் தமிழ்க் கல்வெட் டுகளில் நன்னன் என்ற பெயர் குறுமன்னர் களின் பெயராகவும், தஞ்சாவூர் பெருவுடை யார் கல்வெட்டில் இடையர்களின் பெயரா கவும் காணப்படுவது கருதத்தக்கது ''சாத்த மங்கலத்து இருக்கும் இடையன் கண்டன் கரு வேலனும்...... நந்தன் நீலனும்'' என்று வரும் கல்வெட்டு வரியில் தந்நகரமே பயில்வதைக் காணும்போது மலையாள மொழியில் வழங் கும் தந்நகரமே சங்காலத்திலும் நன்னன் பெயரில் வழங்கியிருக்க வேண்டும் என்று கருத இடமுண்டு.

ஏழில் மலையைச் சுற்றி மூன்று பக்கங்களி லும் நீர்பரப்பு உள்ளது. ஒரு பக்கத்தில் கட லும் இரு பக்கங்களிலும் ஆறும் உள்ளன. ஆதலின் ஏழில் மலையை அணுகுவது எளி தன்று. ஏழில் மலையை அடைய புன்னைக் கடவு என்ற இடத்தில் படகில் ஆற்றைக் கடக்கவேண்டும். ஆனால் சென்ற ஆண்டு பாலங்கள் கட்டினதால் ஏழில் மலையை அடைய எளிதாகியுள்ளது. ஏழில் மலைக்கரு கில் கொற்றியூர் உள்ளது. கொற்றிக்கடவு, கொற்றிப்புழை என்ற துறையும் ஆறும் இருக்கின்றன. கொற்றியூர் காடு அடர்ந்த இடத்தில் அம்மாறக்கல் என்ற பெயருள்ள பாறை உள்ளது. இந்தப் பாறையைச் சக்தி வாய்ந்த அம்மனாகக் கருதி 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை மலையாளத்தில் பல இடங்களி லிருந்து மக்கள் வந்து குழுமி பலிபூசை நடத்துகிறார்கள் இந்த அம்மாறக்கல் அம் மன் இருக்கும் இடமே நன்னனது பாழி யிருந்த இடம் என்று கருதலாம். கொற்றி என்பது கொற்றவை என்பதன் மாற்றமாகும். பாழியில் இருந்த ஒரு கடும் பேய்க்கு ஆட்பலி கொடுக்கும் வழக்கம் இருந்ததைச் சங்கப் பாடல்கள் கூறுகின்றன. அக நானூற்றில் 142-ம் பாடலில் ''ஊட்டரு மரபின் அஞ்சச வருபேய்க்கு'' அதிகனைக் கொன்று ஆட்பலி ஊட்டுவதாக மிஞிலி வஞ்சினம் கூறினான் என்று கூறப்பட்டுள்ளது. இந்தப் பேயே பிற்காலத்தில் கொற்றியாகவும் அம்மனா கவும் விளக்கப் பட்டிருக்கலாம். கொத்தி என்ற சொல்லுக்கு ஒரு பேய் என்று பொரு ளக ராதி பொருள் கூறியுள்ளது. ஆதலின் இன்று ஏழில் மலையிருக்கும் கொற்றிப் புழைக் கருகில் பாழிச் சிலம்பு இருந்திருக்கலாம். ஔவைதுரைசாமி பிள்ளையவர்கள் வடக்கன்ன டத்தில் உள்ள பாட்கல் என்ற ஊரின்பெயரே பாழிக்கல் என்று மாறிற்று என்று கொண் டார். பாட்கல் என்ற ஊர் ஏழில் மலைக்கு வெகுதொலைவில் உள்ளதாகும். நன்னனைப் பற்றிய சங்கப்பாடல்களிலிருந்து (அகம் 152)

பாழி ஏழில் மலையிலேயே இருந்திருக்க வேண்டும் என்று தெரிகின்றது. பாழிச் சிலம்பை ஏழில்மலைத் தொடரிலேயே அல்லது அதன் அருகிலேயே காணவேண்டியதாகும். பூழி நாட்டார் சிறுகுளத்தைப் பாழி என்று அழைப்பர் என்று மயிலைநாதர் கூறியுள்ளார். இதை நன்னன் பாழி என்றும் அழைத்தனர். அகநானூறு 375-ம் பாடலில் சோழன் இளம் பெருஞ்சென்னி 'செம்புரிசை பாழியை' அழித்தாகக் கூறியதை காணலாம். அதனுல், இந்தச் சோழ அரசனுக்கு 'செருப்பாழி எறிந்த' என்ற அடைமொழி வந்தது. நன்னன் பாழியில் ஒரு நிலைச்செருவை (Standing Army) வைத்திருந்தான் என்று கருதலாம். பாழியை நன்னன் நன்கு பாதுகாத்தான் என்பதை 'அருங்கடி பாழி' என்று கூறுவதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். பதிற்றுப் பத்தின் 4-ம் பதிகமும் "உருள் பூங்கடம்பின் பெருவாயில் நன்னனை நிலைச்செருவினுற்றலை அறுத்தவன்" என்று நார்முடிச்சேரலைப் புகழ்ந்துள்ளதைக் கவனிக்க வேண்டும். ஏழில் மலைக்கருகில் இன்றும் கடற்கரையூராக செருவத்தூர் என்ற ஊர் உள்ளது இவ்வூரின் இருபகுதிகள் காரி என்றும் ஓரி என்றும் இன்றும் அழைக்கப்படுகின்றன. இப்பெயர்கள் சங்ககால குறுநில மன்னர்களான காரி, ஓரியின் நினைவாகத் தெரிகின்றது 'பாரத்துத் தலைவன் ஆர நன்னன்' (அகம் 152) என்று சங்கப் பாடல்களில் அழைக்கப்படுகின்றான். பாரம் என்ற ஊர் ஏழில் மலை அருகிலே பத்து மைல் தொலைவில் உள்ளது. பாரம் இப்போது சிற்றூராக உள்ளது. இங்கு பழைய கோயில் ஒன்று உள்ளது. கல்வெட்டுகள் இல்லை. 'ஜீப்' வண்டியில்தான் செல்ல முடியும். பாரத்தைச் சுற்றிப்பெரிய பறம்புகள் உள்ளன். முரம்பு நிலமான மேட்டிடம் எங்கும் காணப்படுகின்றது. பனையால் என்ற ஊருக்கு அருகில் பாரம் உள்ளது. இங்கு 'கோட்டப்பாறு' என்ற சிறு மேட்டிடம் உள்ளது. இந்த ஊரில் செவிவழிச் சில செய்திகள் கூறுகின்றனர். இங்கு கோட்டையைக் கட்டி மடிகர் என்ற சாதியினர் ஆண்டு வந்தனர் என்றும் அவர்களில் ஓர் அரசன் நன்னன் என்றும் அவன் தோலில் நாணயங்கள் செய்து வெளியிட்டான் என்றும் கூறுகின்றனர். மடிகர்கள் இன்று தோலில் தொழில் செய்யும் கீழ்ச்சாதியாகக் கருதப்படுகின்றனர். இங்குள்ள பறம்பின் மேல் ஏறி கீழிறங்கினுல் காஞற்றங்கரையில் பாரம் என்ற ஊர் உள்ளது. நன்னன் பறம்பு என்பதை இங்கு வந்து நேரில் பார்த்தால் தான் நன்கு புரிந்துகொள்ள முடிகின்றது. இத்தகைய பறம்பில் உள்ள முரம்பு நிலத்தில் குருந்தக்கல் கிடைப்பதாகக் கண்டு பிடித்துள்ளனர். இந்தக் கல் சாணை பிடிக்கும் கல் செய்யப் பயன் படுகின்றது [4]இதை யொட்டி தென் கன்னடத்திலும் குருந்தக்கல் நிறைய கிடைக்கின்றது. சங்க நூல்களில் இந்தக் குருந்தக்கல்லைச் சாணைக்கல்லாக்கின தொழில் பற்றிச் செய்தி வருகின்றது. நன்னன் பறம்பில் சாணைக்கல் செய்யும் காரோடன் எனப்படும் தொளிலாளர் வாழ்ந்தனர் என்று அகநானூறு கூறுகின்றது.

"தொன்னிசை சாவாமை நன்னன் பறம்பிற்
சிறுகாரோடன் பயினொடு சேர்த்திய
கற்போல் நாவினேன் ஆசி மற்றது"

—அகம் 356

சிறுகாரோடன் என்ற சாணைக்கல் செய்யும் தொழிலாளன் பிசினொடு சேர்த்தின கல் போல உறுதியானது என்று அகநானூறு கூறியுள்ளது. சாணைக்கல் செய்வோரின் சங்ககாலப் பெயரான 'காரோடன்' பல்லவர்கள் காலத்தில் சாணைக்கல்லுக்கே வணிகப் பெயராக மாறியது. [5] கோபால தேவனின் ஹாஸ்தியூர் கன்னடச் செப்பேட்டில் 'கொளகுப்பை, ஜெவாஸி, லாரல், கர்ஸபிண்டம், கெம்பைகாரோடம்' என்ற வணிக உரிமைப் பெயர்கள் காணப்படுகின்றன. இப்பெயர்கள் வேறு எந்தத் திராவிட மொழிக் கல்வெட்டுகளிலும் காணப்படவில்லை. இந்தப் பெயர்களில் 'கெம்பைக்காரோடம்' என்பது சங்ககாலப் பெரைக் கொண்டுள்ளது. கெம்பை என்ற சொல் செப்பு என்று தமிழில் வழங்கும். செம்மை என்ற பொருள் தரும். சங்க காலத்திலிருந்தே சாணைக்கல் செய்யும் தொழில் இங்கும் தென்கன்னடத்திலும் முக்கியமானதாக இருந்து அதை ஒரு வணிக உரிமையாகப் பல்லவர்கள் வழங்கியிருக்கலாம். நன்னன் பறம்பில் சாணைக்கல் செய்த காரோடர்களைப் பிற்காலத்தில் பறம்பர் என்றழைத்தனர். திவாகர நிகண்டு காரோடன் என்ற பெயரை உறைகாரருக்கு உரிய

பெயராகக் கூறியுள்ளது. அடியார்க்கு நல்லார் உரையில் தோல் தைப்பவர்க்கு 'உறைகாரர், பறம்பர்' என்று பெயர்கள் இருந்ததாகக் கூறியுள்ளார். காரோடன்மார் பிற்காலத்தில் சாணைக்கல் தொழிலை விட்டு தோல் உறை தைக்கும் தொழிலைச் செய்ததினுல் பறம்பர், உறைகாரர் என்றழைக்கப்பட்டனர். இந்த உறைகாரர் பிற்காலத்துக் கல்வெட்டுகளில் கூறப்படுகின்றுர்கள். சச்சவிட வணிகர், சேனையங்காடிகள், கோயிலங்காடிகள், செக்கு வணிகர், உறைகாரர் ஒன்றுகூடி தனிநின்று வென்றான் நல்லூர், மாதேவிமங்கலம் ஆகிய ஊர்களையும் அஞ்சினுன் புகலிடமாக நிறுவினுர்கள் என்ற ஒரு கல்வெட்டு (Epi. Rept 62/32-34) சொல்லுகின்றது. நன்னன்பறம்பில் இருந்த காரோடன்மார்கள் பிற்காலத்தில் உறைகாரர்கள் ஆனதால் அங்கு வாழ்ந்தவர்களைச் சக்கிலியர்களான மடியர்கள் என்றும் நன்னனும் அந்தக் குலத்தைச் சேர்ந்தவன் என்றும் கதை கட்டினுர்கள். பாரத்திலிருந்து இரண்டு மைல் தொலைவில் உதுமா என்ற ஊர் உள்ளது. இவ்விடத்தில் மலையாளமும் கன்னடமும் பேசப்படுகின்றது. பாரம், உதுமா என்ற ஊர்களில் இன்றும் நன்னனைப் பற்றிச் செவிவழிச் செய்திகள் வழங்குகின்றன. நன்னன் ஒரு நாடுவாழி என்றும் அவன் கொடுமை மிக்கவன் என்றும் பாரத்தில் கூறினர், நாடுவாழி என்ற பெயர் மலையாளத்தில் குறுநில மன்னர்க்கு இன்றும் பேச்சுவழக்கில் வழங்குகின்றது பதிற்றுப்பத்தில் செல்வக் கடுங்கோவாழியாதனைப்பற்றிக் கபிலர் பாடியுள்ளார். செல்வக்கோ என்பது அவன் இயற்பெயராகச் சொல்லப்படுகின்றது வாழி என்பது குறுநில மன்னனைக் குறித்ததாகலாம். நாலாயிரத் திவ்ய பிரபந்தத்திலும் குறையலூர் வாழி என்று திருமங்கை மன்னனை அழைத்திருப்பதை காணலாம் பிற்காலத்தில் வட மலையாளத்தில் தோன்றிய சிறக்கல் கோவிலகத்துச் சிற்றரசர்களைக் 'குறுவாழ்ச்சா' என்றழைப்பதைக் காணலால். குறுவாழ்ச்சி என்ற பெயர் சிறிய நாடுவாழி அல்லது அரசன் என்று பொருள்படும்' பதிற்றுப்பத்தில் (56) வரும் வாழ்ச்சி என்ற பெயரும் மன்னனைக் குறித்து வழங்கியதாகத் தெரிகின்றது. பத்தாம் நூற்றுண்டில் வாழ்ந்த தானுரவி என்ற சேர அரசனின் கல்வெட்டில் 'நாடுவாழ்தல்' என்ற பெயர் அரசன் அல்லது குறுநிலத்தலைவன் என்ற பொருளில் வழங்கியிருப்பதை காணலாம். கோவாழி, கோச்செய்தல் என்ற வழக்குகள் அப்பர் தேவாரத்தில் அதிகாரம் செய்தல் என்ற பொருளில் வந்திருக்கின்றன. கோத்தொட்டு, கோக்கொள்ள என்ற வழக்குகள் பல்லவர் செப்பேடுகளில் காணப்படுகின்றன. பல்லவர்கள் தங்களை தமிழ்நாட்டு அரசர்கள் என்று வற்புறுத்துவதற்காகவே 'கோவிசைய' என்ற கல்வெட்டுகளில் துவக்கும் வழக்கை கையாண்டனர். கோவிசைய என்ற வழக்கு கோவாழி என்ற சங்கநூல் வழக்கு போன்றதேயாகும். நன்னன் முதலில் சேர அரசர்களுக்கு அடியில் ஏழில் நாட்டிற்கு அதிகாரம் செய்து வாழ்ந்து பின்னர் அரசனுனன் என்று கருதலாம் ஆதலால் நன்னனை இன்றும் நாடுவாழி என்று வடகேரளத்தில் கூறுகின்றனர்.

நன்னனைக் கொடுமை மிக்கவன் என்று கூறுவதைத் தென்கன்னடத்திலும் செவி வழிச் செய்தியாகக் கேள்விப்பட்டேன். காசர்கோட்டில் துளு மொழியிலும் கன்னட மொழியிலும் புலமை பெற்ற ராமன் நாயக் என்ற பண்டிதரைக் கண்டு நன்னனைப்பற்றிச் சில செவிவழிச் செய்திகளைத் தெரிந்து கொண்டேன். ராமன் நாயக் என்ற பண்டிதர் நன்னனைப்பற்றி ஒரு நாடகம் எழுதி அதை உயர்நிலைப்பள்ளியில் நடத்தினுராம். நன்னன் என்ற அரசன் விழுந்துகிடந்த மாங்காய்களைப் பொறுக்கிய குழந்தைகளின் கைகளைக் கத்தியால் வெட்டவைத்தானும். அவ்வளவு கொடுமையுடையவனும். சங்க நூல்களில் நன்னனைப் பற்றி ஒரு செய்தி கூறப்பட்டுள்ளது நன்னனுடைய தோட்டத்தில் இருந்த நறியமாவின் காய் ஆற்றில் விழுந்து அடித்துச் செல்லப்பெற்றது. குளிக்கச்சென்ற ஒரு சிறுமி அந்த மாங்காயை எடுத்துத் தின்றதாக நன்னன் கொலைத்தண்டனை விதித்தற்தான். அவள் புரிந்த பிழைக்கு எண்பத்தொரு யானைகளையும் அவள் நிறையளவு பொன்பாவையும் கொடுப்பதாகச் சொல்லியும் நன்னன் கொலைத் தண்டனையை நிறைவேற்றினுன். அதனுல் பெண் கொலை புரிந்த

நன்னன் என்று பரணரால் இகழப்பட்டான். சங்க காலத்துச் செய்தி இன்றும் செவிவழிச் செய்தியாக சிறிது மாறி தென் கன்னடத்தி லும் பண்டிதர் நாயக் கூறிய செய்தியாக வழங்கி வருகின்றது. சிறுமி மாங்காயை எடுத்துத் தின்றதற்காகக் கொலை செய்த நன்னன் செய்தி வேறுவகைக் கதை யாக மாறி மலபாரில் மட்டும் நடத்தப்படும். தெய்வ ஆட்டங்கள், பேயாட்டங்களிலும் வருகின்றது. நன்னன் ஆண்ட நாட்டைப் பிற்காலத்தில் கோலத்து நாடு என்று வழங் கினர். கோலஸ்திரி, கோலத்திரி என்ற பெயர்கள் முஷிகவம்சம் என்ற நூலில் காணப்படுகின்றன. இங்கு கோலம் பூண்டு ஆடும் வழக்கம் உள்ளதால் கோலத்துநாடு கோலஸ்திரி நாடு என்ற பெயர்கள் தோன் றின. இந்தக் கோலங்கள் திராவிட மரபில் ஆடும் தெய்வ ஆட்டங்களாகும். இந்த ஆட் டங்களை வேலன், பாணன், மலையன் முத லிய திராவிடக் குடிகளே பெரும்பாலும் ஆடு கின்றனர். நாயர்களோ, நம்பூதிரிகளோ ஆடுவதில்லை. இந்த ஆட்டங்கள் வீரர்களை யும், வீராங்கனைகளையும், குட்டிச்சாத்தான், சாமுண்டி முதலிய பழந்தெய்வங்களையும் இந்து மத தெய்வங்களையும் பாவித்து ஆடு வனவாகும். கண்ணகி பகவதியான போது பகவதியாட்டம் பரவியது. உடன் கட்டை யேறிய பெண்ணை தெய்வமாக்கி செம்மறத்தி என்ற ஆட்டம் ஆடுவர். வைரிஜாதன் முத லிய வீரர்களையும் பாவித்து ஆடுவர் இந்த ஆட்டங்கள் ஆடுவோர் முகத்திலும் உடம் பிலும் அழுத்தமான சாயவரிகள் பூசித் தென்னை ஓலையாலும், மூங்கில் பிளாச்சுகளா லும், அட்டைகளாலும் செய்த உடைகள், காதுகள், மகுடங்கள் அணிந்து, பயங்கரத் தோற்றமுடையவர்களாகக் காணப்படுவார் கள். இந்த ஆட்டங்கள் ஆடும் பூசாரிகள் களம் இழைத்துக் களத்தில் ஆடுவர். இந்த களங்கள் சங்க நூல்களில் கூறிய வண்ணம் கட்டங்களை உடையன. களங்களில் ஆடு, கோழி குருதிப்பலி நடக்கும். இந்தச் சடங்கு களை மலையாளத்து வேலன்மார் நடத்துங் கால் நான் பார்த்த போது சங்கப் பாடல் களிலும் திருமுருகாற்றுப்படையிலும் வேலன் செய்யும் வெறியாட்டுச் சடங்குகளுடன் நெருங்கிய ஒற்றுமை இருப்பதைக் கண்டேன். கோலம் என்ற சொல் இன்று என்ன பொரு ளில் வடமலையாளத்தில் வழங்குகின்றதோ அதே பொருளில் சிலப்பதிகாரத்தில் வழங்கு வதைக் காணலாம். குறள், மறம், சிந்து, சோனகன் பார்ப்பான், சடாதாரி என்ற வடிவம் கொண்டு ஆடும் கூத்துவகைகளைக் கோலம் என்ற பெயரால் பரதசங்கிரக நூலாசிரியர் கூறியுள்ளார். அடியார்க்கு நல்லார் சிந்து, பறை, சோனகல், சடாதாரி ஆகிய கோலங்களைப் பல்வரிக் கூத்தாகக் கூறி யுள்ளார். சிலப்பதிகாரத்தில் கால்கோட் காதையில், கொங்கணக்கூத்தர் தங்குலக் கோதிய தகை சாலனியினராய் தம் கோலத் தால் செங்குட்டுவனை மகிழ்வித்ததாகக் கூறி யுள்ளதைக் கவனிக்க வேண்டும். கொங்கண நாடான நன்னன் ஆண்ட கொண்கான நாட்டினரே ஆடிய கோலத்தைச் செங்குட் டுவன் கண்டு மகிழ்ந்தான். இந்த ஆட்டங் கள் ஆடப்படும் நாடு இன்றும் கோலத்து நாடு என்றழைக்கப்படுவது வியப்பே முகத் திலும் உடம்பிலும் எழுதும் இந்த எழுத்து வரிக்கோலமே பிற்காலத்தில் கதகளி ஆட் டத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டது. தரை யில் எழுதுவரி வடிவமும் பிற்காலத்தில் தமிழ் நாட்டில் கோலம் என்று அழைக்கப்பட்டது.

தற்போது நன்னன் ஆண்ட நீலேஸ்வரத் தில் ஒரு தெய்வ ஆட்டம் ஆடப்படுகின்றது. இந்த ஆட்டம் கொலை செய்யப்பட்ட ஒரு சிறுவனைத் தெய்வமாகக் கற்பனை செய்து ஆடுவதாகும். இந்த ஆட்டக் கதையில் நன் னன் செய்த கொலையைப் பற்றிய கதை மாறி வழங்குவதைக் காணலாம். நீலேஸ்வ ரத்தில் குருப்பு என்பவனின் அடியாளான மாடுமேய்க்கும் சிறுவனான கண்ணன் என்ப வன் மாமரத்தின் மேலிருந்து மாங்காய் தின்று கொண்டிருந்தான். அப்போது குருப் பின் மருமகன் தன்னுடைய மாமரத் தோட் டத்தின் வழியாகச் சென்ற போது கண்ணன் தின்ற மாங்காய் தவறி மருமகன் மேல் விழுந் தது. இதற்காக குருப்பு சினங்கொண்டு கண்ணனை நாடு கடத்தினான். கண்ணன் மங்களூரிலே ஒரு துளுப் பெண்ணிடம் அடைந்து கடவுள் பக்தனாக வாழ்ந்தான். ஒரு நாள் தன்னுடைய நாட்டைக் காணவந் தான். கண்ணன் நீலேஸ்வரத்தில் தாமரைக்

குளத்தில் குளிக்கும் போது குருப்பு கண்ணனைக் கண்டு சினந்து வெட்டித் தள்ளினுன். கண்ணனைக் கொன்றதும் மாடுகள் செத்தன. பல துன்நிமித்த தங்கள் தோன்றின. அதற்காகப் பரிசாந்தி செய்வதற்கு வெட்டுண்ட கண்ணனுக்குக் கோலங் கற்பித்து ஆடினர். இந்தக் கதையில் மாங்காயை எடுத்தது, அதற்காகக் கொன்று போட்டது ஆகிய இரண்டு செய்திகளும் நன்னன் வரலாற்றிலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டுக் கண்ணன் என்பவன் மேல் ஏற்றப்பட்டதைக் காணலாம். குளிக்கச் சென்ற சிறுமி கொல்லப்பட்டது போல குளிக்கச் சென்ற சிறுவன் இந்தக் கதையில் கொல்லப்பட்டான். இது போன்ற வேறொரு கதையை இபின் பத்தூத்தா கொல்லத்து அரசனுக்கு நிகழ்ந்ததாகக் கூறியிருப்பதைக் காணலாம். கொல்லத்து அரசன் கொடுமை வாய்ந்தவன் என்றும் அதற்கு ஒரு கதையும் கூறப்படுவதாகச் சொல்லியுள்ளான். ஒரு நாள் கொல்லத்து அரசன் குதிரையில் செல்லும் போது கூடச் சென்ற அவருடைய மருமகன் கிணற்றில் விழுந்த மாங்கனியை எடுத்தான். அரசனுக்கு மிகுந்த சினம் வந்தது மருமகனின் வயிற்றைக் கீறி பிளந்து போட சொன்னுன். இந்தக்கதை குருப்பும் அனுடைய மருமகனும் போன்ற ஒரு கதையாகத் தெரிகின்றது. இக்கதையில் மருமகனே மாங்கனியை எடுத்ததாகச் சொல்லப்படுகிருன். ஆதலின் நன்னன் கதை பிற அரசர்கள் மேலும் ஏற்றப்பட்டு வெளிநாட்டுப் பயணிகளுக்கும் தெரிந்திருந்தது. இதுபோன்று மற்றொரு கதையும் வடமலையாளத்தில் தெய்வ ஆட்டமொன்றில் வழங்குகின்றது. தாழக்காட்டு மனை என்ற பிராமணருடைய வீட்டிலே ஒரு சிறுமி பலாமரத்தில் ஏறி பலாக்காயைப் பறித்தாள் என்று குற்றம் சாட்டப்பட்டு மாமனுல் கொல்லப்பட்டாள். பின்னர் அந்தச் சிறுமியைக் கொன்ற காரணத்தால் பல கேடுகள் இயற்கையாக நிகழ்ந்ததால் தெய்வமான அச்சிறுமிக்குச் சாந்தி செய்து அவளை மனையில் போதி, மனையில் பகவதி என்று அழைத்துக் கன்னிக்கோலம் கட்டி ஆடலாயினர். இந்தக் கதையும் நன்னன் சிறுமியைக் கொன்ற வரலாறு போல உள்ளது. மாங்காயைப் பறித்துக் கொல்லப்பட்டாள் என்று சங்க நூல்கள் கூறும். ஆனுல் இக்கதையில் பலாக்காயைப் பறித்துக் கொல்லப்பட்டாள் என்று கூறப்பட்டுள்ளது. பாரத்திற்கு அருகில் உதுமா என்ற ஊர் உள்ளது. நன்னனுடைய நறுமா இருந்த இடம் இந்த உதுமா என்ற ஊராகலம். உதிர்மா என்பதே உதுமா என்ருயிருக்கலாம். நன்னனுடைய மகன் செங்கண்மாவில் ஆட்சியை நிறுவியதும் நன்னனைப் பற்றிய இக்கொடிய செய்தி அங்கும் வழங்கிற்று. 'அறுந்த மாங்கனி பொருந்திய செங்கம்' என்ற இவ்வூரைக் குறிப்பிடுவர் என்று வடார்க்காடு மாவட்டத்தைப் பற்றி எழுதிய நூலில் 'சோமலெ' குறிப்பிட்டுள்ளார்.

நன்னனைப் பற்றிய வடமலையாளத்திலும் தென் கன்னடத்திலும் கூறப்படும் மற்றெரு செய்தி நன்னன் பதுக்கி வைத்திருந்த செல்வத்தைப் பற்றியதாகும். நன்னன் நிறைய தோல் நாணயங்களைச் சேர்த்து மறைத்து வைத்திருந்தானும். அந்தத் தோல் நாணயங்களை நரியும் நாயும் தின்று போட்டனவாம். ''நந்நா பதுக்கு நரிநாயி தின்னு ஹோயித்து'' என்று பழமொழி போல ஒரு மொழி பாரத்திலும் உதுமாவிலும் வழங்குகின்றது. காசர்கோடு பண்டிதர் நாயக்கும் இந்தக் கதையைக் கூறினர். நன்னன் பாழியில் தொன்முதிர் வேளிர் பொன்னைச் சேர்த்து வைத்து இருந்தனர் என்று அகநானூற்றுப் பாடல் 258 கூறுகின்றது.

''நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்னினும் அருமைநன் கறிந்தும்
அன்னேன்''

- அகம் 258

'பொன்படு கொண்கானம்' (நற்றிணை), பொன்படு கவான் (அகம் 173) என்று கூறப்பட்டுள்ளது. அகநானூறு 15-ம் பாட்டு நன்னனுடைய பாழி 'கடியுடை வியன்நகராக செறிந்த காப்புடன்' இருந்ததைக் கூறியுள்ளது. தனது முன்னேர் சேர்த்து மறைத்த பொன்னைக்காக்க நிலைச்செரு ஒன்றை நன்னன் வைத்திருந்ததனுல் 'செருப்பாழி' என்ற பெயர் பெற்றதாகவும் தெரிகின்றது. நன்னன் பதுக்கிவைத்த பொன் ரோம நாணயங்

களாக இருக்கலாம். ஏழில் மலைக் கருகிலும் பக்கத்து ஊர்களிலும் நிறைய கி. பி முதல் நூற்ருண்டுலிருந்து கி. பி. ஐந்தாம் நூற்ருண்டு வரை வழங்கிய ரோம நாணயங்கள் மிகுதியாகக் கிடைத்திருக்கின்றன. ஏழில் மலை நாட்டிலிருந்து மிளகை ஏற்றுமதி செய்து பெற்ற பெரும் பொன்னை நன்னனும் அவன் மூதாதையரும் பதுக்கி வைத்திருக்கக் கூடும். நன்னனுக்குக் காற்றின் வழியாக ஓங்குபுகழ் கான்மர் செல்வியின் அருளால் பல் படை வெள்ளைப் புரவிகள் வந்தன என்று அக நானூறு 345-ம் பாட்டு கூறுகின்றது. இந்த குதிரைகள் கப்பலில் நன்னனுக்கு வெளி நாட்டிலிருந்து இறக்குமதி ஆனவை என்று கருதலாம். 'காலின் வந்த நிமிர்பரிப் புரவியும்' என்று பட்டினப்பாலை கூறுவதை கவனிக்க வேண்டும். வெண்காற் குதிரைகள் (White Stockinged horses) இன்றும் மேல் நாட்டில் சிறந்த இனமாகக் கருதப்படுகின்றன. கி.பி முதல் சில நூற்ருண்டுகளிலே ஏழில் நாட்டிற்கும் மேல் நாட்டிற்கும் வணிகம் நடத்திருக்கலாம். நன்னன் நாட்டிலிருந்து சாணைக் கல்லும் வெளிநாட்டிற்கு ஏற்றுமதியாயிருக்கலாம் மேற்கு கடற்கரையிலிருந்து கி. பி. முதல் இரண்டு நூற்ருண்டுகளில் ஏற்றுமதியானவைகளில் வைரம், குருந்தம் போன்ற கற்களையும் கிரேக்க ஆசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். குருந்தக் கல்லினும் மதிப்பு தாழ்ந்த ஒருவகைக் கல்லே காரோடமாகும். நன்னன் நாட்டிலிருந்து மிளகும் பிற பொருள்களும் ஏற்றுமதியாகிப் பெற்ற மிகுதியான பொன்னையே நன்னன் பதுக்கி வைத்திருந்தான். நன்னன் பொன்னைக் காத்த சங்க நூற் செய்தியையே மிகப்பிற்காலத்தில் தோல் நாணயங்களைப் பாதுகாத்ததாகவும் அவைகளை நாயும் நரியும் தின்று போட்டதாகவும் மாற்றிக் கூறினர். நன்னன் பதுக்கிய பொன்நாணயங்கள் தோல் நாணயங்களாக மாறி அவைகளை நாயும் நரியும் தின்று போட்டன என்று கதைகட்டியிருக்கின்றனர். நன்னன் பொன்னைப் பாதுகாத்த செய்தியையும் வட நாட்டில் நந்தர்கள் பொன்னை நீரில் மறைத்து பாதுகாத்த செய்தியையும் தொடர்புபடுத்திக் கூறும் போக்கையும் வடகன்னடத்தில் கேள்விப்பட்டேன். பண்டிதர் நாயக் நன்னன் நந்தவாரில் இருந்து வந்ததாகவும் நந்தர்களைப்போல இழிகுலத்தவனென்றும் கூறினர். நந்தவார் என்ற ஊர் மங்களூருக்கு அருகில் உள்ளது. இந்தச் செவிவழிச் செய்தியும் ஆராயத் தக்கது. நந்தர்கள் மகாபதுமம் என்ற ஒரு பேரளவு சொத்தைக் பதுக்கி வைத்திருந்தனர் என்ற நந்தர் வரலாறு கூறும் இச்செய்தியை அகநானூறும் கூறியுள்ளது.

''நந்தன் வெறுக்கை யெய்தினும் மற்றவண்
தங்கலர் வாழி தோழி வெல்கொடி''

– அகம் 251.

''பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழிஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ''

- அகம் 265.

நந்தர் பாடலியில் கங்கை நீரில் சேர்த்து மறைத்த நிதியம் போல நன்னனும் அவனுடைய முன்னோர்களான தொன்முதிர்வேளிரும் பொன்னைப்பாழி நீரில் சேர்த்து பாதுகாத்தனர். பிற்காலத்தில் இந்த இரு செய்திகளையும் தொடர்புபடுத்தி நந்தனுடன் நன்னனைத் தொடர்புபடுத்தினர் போல் தெரிகின்றது. நந்தர்களில் நவ நந்தர்கள் இருந்தனர். அவர்களே நிதியம் சேர்த்தனர் என்பர். நன்னனும், அவன் மூதாதையரும் சேர்த்தனர் என்று அகநானூறு கூறியுள்ளது. நந்தர் என்ற பெயரைப்போலவே நன்னன் என்ற பெயர் நன்னன் பரம்பரைக்கே வழங்கி வந்தாகத் தெரிகின்றது. நந்தர்களை நாவிதக் குலம் என்று செவிவழிச் செய்தி கூறும். அது போலவே நன்னனைத் தோலில் தொழில செய்யும் மடிகர் குலமென்று வடமலையாளத்தில் கூறுகின்றனர். ஆனால், நன்னன் முடிமன்னர்க்கு மகட்கொடை கொடுக்கும் உரிமை பெற்ற வேளிர் குலத்தினன், அதுவும் தொன்முதிர் வேளிர் குலத்திவன் என்பதைப் பிற்கால மக்கள் மறந்தனர். ஆனல் அவ்வாறு கருதினதிற்குக் காரணம் ஒன்று தெரிகின்றது. நன்னன் பறம்பில் வாழ்ந்த காரோடன் மாராகிய பறம்பரைத் தோலில் தொழில் செய்ததால் இழிகுலத்தினராக ஆக்கினர். அதோடு நில்லாமல் அந்தப் பறம்புக்கு முற்காலத்தில் உரியவனுக இருந்த நன்னனையும் இழிகுலத்தவனுக்கி அதற்கேற்ப நன்னன் பாதுகாத்த பொன்னைத் தோல் நாணயங்கள்

என்று கதை கட்டினர். நன்னன் பறம்பில் வாழ்ந்த பறம்பரைக் கொண்டுதோல் நாணயங்களைச் செய்து கொண்டதாகக் கதை படைத்துக்கொண்டனர் போலும். இந்திய வரலாற்றில் துக்ளக் என்பவன்தான் தோல் நாணயங்களை அடித்ததாகக் கூறுவர். அவனுக்கு வெகுகாலத்துக்கு முன்னரே நன்னன் தோல் நாணயம் அடித்ததாகக் கூறியது அருமையான கதையாகும் நாயக் கூறிய வேறு சில செய்திகளும் உண்டு. நன்னனுடைய மனைவி நாட்டியக்காரியாம், அவனுடைய மகன் சந்திரசயனு என்பவன் நல்லகுணமுடையவனும். தந்தையான நன்னனுக்கு நல்லுரை கூறி கொடுமையை விடச் சொன்னானும். ஆனால் நன்னன் இந்த நல்லுரைக்கு செவிசாய்க்கவில்லையாம்.

கேரளத்தில் நன்னனைப் பெரிய மன்னனாகக் கருதினதற்கு வேறொரு சான்றும் உள்ளது. முதுமக்கள் தாழிகளைப் புதைக்கும் இடுகாடுகளை இன்றும் நன்னங்காடி என்று அழைக்கின்றனர் முதுமக்கள் தாழியை நன்னங்காடிக் குடங்கள் என்றழைக்கின்றனர். இவ்வாறு சிறந்த அரசபரம்பரையின் பெயரால் முதுமக்கள் தாழியைப் பெயரிட்டழைப்பது கன்னடநாட்டிலும் பழக்கமென்று தெரிகின்றது கன்னடநாட்டில் இதையே 'மோரியர் மனை', 'மோரியரங்காடி' என்று அழைக்கின்றனர். மோரிய அரசர்களுடன் தொடர்பு படுத்தி கூறுவதைக் கவனிக்கலாம். சங்க நூல்களில் மோரியர் படையெடுப்பு பற்றி செய்திகள் காணப்படுகின்றன சந்திரகுப்த மௌரியன் தன் இறுதிக் காலத்தில் கன்னட நாட்டில் தவம்புரிந்து சல்லேகனம் செய்ததாக சைன நூல்கள் கூறுகின்றன. சேரமானங்காடி என்ற ஊரில் குடக்கல் பறம்பு உள்ளது இங்கு குடைபோன்ற கல்லுக்கடியில் இறந்தவர்கள் புதைக்கப்பட்டனர். பதிற்றுப்பத்தில் ''மன்னர் மறைத்த தாழி வன்னிமன்றத்து விளங்கிய காடே'' (44. 22--23) என்று வரும் வரியில் சேரமன்னர்கள் தாழியில் புதைக்கப்பட்டனர் என்ற செய்தி சொல்லப்பட்டுள்ளது. இச்செய்தி சேரமானங்காடி என்ற பெயர் தோன்றிய தொடர்பைக் காட்டுகின்றது. பெயர்பெற்ற அரச பரம்பரையோடு முதுமக்கள் தாழிகளிலிருக்கும் இடுகாட்டைப் பெயரிட்டழைப்பது வழக்கமென்று தெரிகின்றது. நன்னன் பெரிய அரசனுயிருந்ததால் 'நன்னங்காடி' என்று அழைக்கின்றனர் என்று தெரிகின்றது. மதுரைக்காஞ்சியில் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை பாராட்டிய மாங்குடி மருதனுர் சேர மன்னனின் பிறந்தநாள் விழாவின் மகிழ்ச்சி ஆரவாரத்தைக் கூறி அதே பாட்டில் நன்னன் பிறந்தநாளும் கொண்டாடப்பட்டதாகக் கூறியுள்ளார். நன்னனைப் பேரிசை மன்னன் (615—619) என்று புகழ்ந்து கூறியுள்ளார். ஆதலின் நன்னன புகழ்பெற்ற மன்னனுக சங்ககாலத்திலேயே மதிக்கப்பட்டான் என்பது தெளிவாகின்றது.

வடமலையாளத்தில் நன்னனைத் தவிர சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள நள்ளன் முதலிய குறு நிலத் தலைவர்களைப் பற்றியும் செவி வழிச் செய்திகள் உள்ளன. அகநானூறு 325-ம் பாடலில் அள்ளன் என்பானை நாட்டைக் கொள்ளுமாறு பணித்த அதியன் என்பவனைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது வடமலையாளத்துத்தெய்வ ஆட்டக்கதைகளில் அள்ளோன் என்ற நாடுவாழியைப் பற்றி காஞ்சரங்காட்டில் செல்லப்படுகின்றது. அள்ளோன் என்பவன் சங்கப் பாடலில் வரும் அள்ளனுக இருக்கலாம். அந்த அவ்ளோன் வழிவந்தவர்களே கி பி. 8-ம் நூற்றுண்டுக்கு பின்னுல் இங்கு ஆண்ட ஆளுவ அரசர்கள் என்று கருதலாம். ஆளுவர் என்ற பெயரை ஆள்பவர்கள் என்ற பொருளில் அறிஞர்கள் கூறுகின்றனர். சிலப்பதிகாரத்தில் 'மாளுவர்' என்று வரும் பெயருக்கு பாட மாற்றமாக 'ஆளுவர்' என்ற சொல் இருக்கலாம் என்றும், அது ஆளுவ அரசரை குறிப்பதாகச் சில அறிஞர்கள் கொள்வர். [7] அறிஞர் ரா. இராகவய்யங்கார் திதியன் என்று குறு நிலத் தலைவன் வாழ்ந்த அழுந்தூர் குடமலை நாட்டிலுள்ளது என்று கூறினர். வெளியன் வேண்மான் ஆய்எயினன் மிருவியொடு செய்த போரில் புண்ணுற்ற போது அவனது மகளிர் அடைந்த துன்பத்தை அகுதை என்ற தலைவன் களைந்தான் என்று ஒரு அகப்பாடல் (208) கூறுகின்றது. இவன் வாழ்ந்த 'அகுதைகூடல்' வடமலையாளத்தில் உள்ள கடற்கரையூராகும். இதுஇன்று'கூடலு'

என்று அழைக்கப்படுகின்றது. ''மணநாறு மார்பின் மறப் போரகுதை குண்டுநீர் வரைப் பின் கூடல்'' (புறம் 347) என்று கூறியிருப் பதால் அகுதையின் கூடல் கடற்கரையூரா கும். இது மதுரையாக இருக்க முடியாது. சங்க காலத்திலேயே கூடல் என்ற ஊர்கள் சில இருந்திருக்க வேண்டும். அவைகளில் தமிழ்கெழு கூடலே மதுரையெனப்பட்டது. வெளியன் வேண்மான் ஆய்எயினன் பாழிப் பறந்தலையில் மிஞிலியுடன் பகலில் போரிட்டு புண்ணுற்ற போது புள்ளொருங்கு சூழ்ந்து சிறகுகளால் நிழல் செய்தன என்று அகநா னூறு (208) கூறியுள்ளது. மற்றும் இன்னொரு அகப்பாட்டில் புள்ளிற்கு 'ஏமம்' ஆனவன் இவன் என்றும் கூறப்பட்டுள்ளது. ஏழில் மலைக் குச் சிறிது தொலைவில் 'புள்ளூர்' என்ற ஊர் உள்ளது. இப்பெயர் எயினனை வெயிலினின்று காத்த புள்ளின் நினைவாக வந்ததாக இருக்க லாம் கண்ணனூருக்கு அருகில் உள்ள வெளி யனூர் வெளியன் வேண்மான் எயினன் இருந்த ஊராகலாம். பரசுராமர் ஏற்படுத்திய 64 பழைய ஊர்களில் 'வெளியன்னூரு' என்ற ஊரை கேரளோற்பத்தி கூறுவதைக் கவனிக்க வேண்டும் நற்றிணை (180) அன்னியும் பெரி யனும் பொருது அழிந்தனர் என்று கூறுகின் றது அன்னிமிஞிலி எயினனைத் தோற்கடித் தவன் நன்னனது பாரத்தைக் கைப்பற்றின வன். பெரியன் என்பவனின் பெயரின் நினை வாக 'பெரியெ,' 'பெரியன்' என்ற ஊர் தோன்றியிருக்கலாம். இந்த ஊர் புள்ளூருக்கு அருகில் உள்ளது. கொண்கானங்கிழான் என்ற வேளாளர் தலைவனைப் பற்றிப் புறநானூற்றுப் பாடல்கள் (154, 155, 151) கூறுகின்றன இந் தக் கொண்கானங்கிழான் தென்கன்னடத்தில் வாழ்ந்த வேளாளர் தலைவனாகத் தெரிகின்றது பெல்லாள ராஜாக்கள் என்றவர் தென்கன் னடத்தில் சில பகுதிகளை ஆண்டனர் என்று வரலாறு கூறும். துளுவ வேளாளர் வகுப்பைச் சேர்ந்தவராக இவர் கருதப்படுவர். கொண் கானங்கிழானும் இந்த வகுப்பைச் சேர்ந்த வனாகக் கருதலாம்.

வடமலையாளத்தில் கன்னங்காடு என்று இப்போது அழைக்கப்படும் பகுதியே நன்னன் நாடான கானங்காடு ஆகும். இங்கு கன்னங் காட்டு பகவதி மிகவும் முக்கியமான தெய்வ மாகும். கொற்றிக்கன்னங்காடு என்ற இடத் தில் இன்றும் இந்த பகவதி தொழப்படுகிறாள். ஓங்கு புகழ் கானமர் செல்வி ஏழிற்குன்றத்தில் இருந்ததாக கூறியுள்ளது கவனிக்கத்தக்கது. 'கானமர் நன்னன் (அகம் 392) என்ற கூறப் படுவதைநோக்கலாம். இன்றும்இந்தக் கானங் காட்டுப்பகுதியிலும் ஏழில் மலையருகிலும் பல கோயில்களில் வனதுர்க்கை வழிபாடும் தேவி வணக்கமும் மிகவும் சிறப்புடன் நடைபெறு வதைக் காணலாம். கொற்றிக் கன்னங்காடு என்பதை கன்னங்காட்டுக்கொற்றி என்று சொல்லவேண்டும். கானமர் செல்வியே கானங்காட்டு கொற்றி என்றழைக்கப்பட் டாள். இங்குள்ள பல தேவி கோயில்களிலும் பூசை செய்பவர்கள் மணியானி என்ற மண மாகாத பூசாரிகளாவர். நன்னன் காலத்துக் கானமர் செல்வியே வனதுர்க்கையாகவும் தேவியாகவும் மாறியதாகத் தெரிகின்றது. துளுவக் கானத்து பகவதியும் துளு நாட்டில் தொழப்படுகின்றாள். இங்கு கானத்தூர் என்ற ஊரும் உள்ளது.

நன்னன் நினைவுகள் இன்றும் வடமலை யாளத்தில் காண்பது வியப்புக்குரியது. நேரில் சென்று சங்க நூல்களில் கூறப்பட்ட ஊர்களை யும் இடங்களையும் ஆராய்ந்தால் வடமலை யாளத்தில் இன்னும் பல அரிய நினைவுச் செய் திகள் கிடைக்கலாம்

1 & 2 Foreign notices of South India-Collected and edited by K.A. Nilakanta Sastri.

3 Age of Nandas and Mouryas-Edited by K.A. Nilakanta Sastri. On a passage on Strabo, Onascritus is said to have represented the country of 'Mousikanos' in the most southerly part of India.

4 South Kanara Gazeteer.

5 பல்லவர் செப்பேடுகள் முப்பது-தமிழ் வரலாற்றுக் கழகம்.

6 பண்டைய கேரளம்-குஞ்சன்பிள்ளை.

7 கோசர்-ரா. இராகவய்யங்கார்.

# பேராசிரியர் பி. சுந்தரம்பிள்ளையின் நூற்றொகை விளக்கம்

ஏ. வி. சுப்பிரமணிய ஐய்யர்

[பேராசிரியர் பி. சுந்தரம் பிள்ளையவர்கள் அறிவியல் பிரிவுகளை வரையறுத்து அவை ஒவ்வொன்றின் பொருளடக்கத்தை சுருக்கமாக விளக்கி, பல புதிய கலைச் சொற்களை தாமே படைத்து இலக்கண நூல் வடிவில் செய்யுளில் ஒரு நூல் இயற்றினார்கள். அதுவே நூற்றொகை விளக்கம் என்ற நூல். இதனைப் பற்றி 65 ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்ப் பேரறிஞரும், திருவனந்தபுரம் உயர் நீதிமன்றத்தின் தலைமை நீதி பதியாகவுமிருந்த K.G. சேஷையைய்யர் அவர்கள் பின் வருமாறு எழுதினர். "சுந்தரம் பிள்ளையின் நூற்றொகை விளக்கம் விஞ்ஞான சாத்திரங்களுக்கு ஒரு சிறந்த அறிமுக நூல்; தமிழ் வசன நடைக்கு முன் மாதிரி எப்படியிருக்க வேண்டுமோ, அப்படியே அதன் உரை நடையும் அமைந்திருக்கிறது. நூல் இன்றுள்ளதிற்கும் அதிகமான பிரகாசத்திற்கும் பாராட்டுதலுக்கும் உரியது" இப்படி ஒரு நூல் இருப்பதையே தமிழ்அறிஞர்கள் இன்றும் அறிந்து கொள்ளவில்லை. தற்காலத்தில் விஞ்ஞானம் பெரு வளர்ச்சியுற்று புதிய புதிய கருத்துக்களையும் அவற்றிற்கேற்ற கலைச்சொற்களையும் படைத்து ஒளி வேகத்தில் முன்னேறி வருகிறது. சிந்தனை அதை எட்டிப்பிடிக்கவே வேகமாக இயங்க வேண்டியுளது. சிந்தனையைப் பின் தொடர்ந்து மொழிகள் வேகமாகவளர வேண்டியுளது. இலங்கையில் விஞ்ஞான சிந்தனையோடு ஒத்து இயங்க தமிழை தமிழர்கள் வலு வாக்கி வருகின்றனர்கள் தமிழ் நாட்டில் அத்தகைய நிலை இல்லையென்று வருத்தத்தோடு ஒப்புக்கொள்ள வேண்டியுளது. இந்த நூல் விஞ்ஞானத்தை தமிழில் வளப்படுத்தவும், வளர்க்கவும் தொடங்கப்பட்ட முதல் முயற்சியாகும். எனவே இந் நூல் இன்று வளர்ச்சி பெற்றுள்ள விஞ்ஞானத்தை வளப்படுத்த போதிய நூல் அன்று எனினும் விஞ்ஞான சிந்தனையில் தமிழை செலுத்தும் முயற்சியில் ஒரு வரலாற்று முக்கியத்துவம் உடையது என்று கருதியே முதுபெரும் ஆய்வாளர் A.V. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் எழுதிய இக்கட்டுரையை மகிழ்ச்சியோடு வெளியிடுகிறோம்.

நா. வானமாமலை]

I

விஞ்ஞானம் என்ற சொல் விரிந்த பொருட் செறிவுடையது; ஆங்கிலத்தில், சைன்ஸ், (Science) என்பதில் அடங்கக் கூடிய எல்லாவற்றையும் அது குறிக்கும், சைன்ஸில் எத்தனையோ துறைகளும் பிரிவுகளும் உண்டு; அவை இன்னும் வளர்ந்து கொண்டே போகின்றன. சாத்திரங்களில் பூதபௌதிக இயல், இரஸாயனம், தாவரம், நிலஇயல், உயிர்இயல், கணிதம் போன்றவை துல்லிய மானவை (exact sciences) எனக்கருதப்பெறுகின்றன. இவற்றில், எங்கும், எக்காலத்திலும், எவராலும் நடத்தப் பெறும் ஒரே விதமான சோதனைகளில் ஒரே விதமான விளைவுகள் தான் ஏற்படும். ஆனால், பொளாதாரம், உள்பட சமூக இயல்புகள், மனோதத்துவம், பொது தத்துவம், யோகம், ஆன்மீகம் போன்ற, துல்லிய மற்ற, மனித சோதனைக்குள் முறையாக அடங்காததாயும் மனித சிந்தனையின் விசுவ ரூபத்திற்கே இடம் கொடுக்கக் கூடியதாயுமுள்ள அறிவியலும், விஞ்ஞானம் என்பதில் அடங்கும் என்றும், இவைகளும் 'சைன்ஸ்' அல்லது சாத்திரம் என்பதற்கு உரியன என்றும் இன்று பலர் கருதுகிறார்கள்.

"பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்" என்று கவிஞர் சுப்பிரமணிய பாரதி சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்பு பாடினார். பலதுறைகள் உடையனவாயும், எண்ணிறந்த கருத்து நுட்பக்குவியல்களாயும், உள்ள விஞ்ஞான சாத்திரங்களைத், தமிழில் துல்லியமாய் வடிக்க முடியுமா என்ற ஐயம் அக்காலத்தில் அறிஞர்களிடையே எழுந்தது.

இதைக்கண்ட பாரதி வெகுண்டு எழுந்து "தமிழ்த்தாய்" என்ற பாடலில் தமிழன்னை, தமது மக்களுக்கு சொல்லும் பாவத்தில் இவ்வாறு எழுதினர்:-

"புத்தம் புதிய கலைகள்- பஞ்சபூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும், மெத்த வளருதே மேற்கே-அந்த மேன்மைக்கலைகள் தமிழினில் இல்லை; சொல்லவுங் கூடுவதில்லை- அவைசொல்லுந் திறமை தமிழ் மொழிக் கில்லை; மெல்லத் தமிழினிச்சாகும் — அந்த மேற்கு மொழிகள் புவிமிசை ஓங்கும்; என்றந் தப்பேதை உரைத்தான்-ஆ! இந்த வசை எனக் கெய்டதிலாமோ! சென்றிடுவீர் எட்டுத்திக் கும் கலைச் செல்வங்கள்யாவும் கொணர்க் திங்கு சேர்ப்பீர்" கவிதைக்குரிய உணர்ச்சி பாவத்தில் பாடல் இருப்பதால் அதில் காணப் பெறும் கருத்து சற்று மிகைபடக் கூறப்பெற் றிருக்கிறது: எல்லாவித விஞ்ஞான சாத் திரங்களையும் தமிழில் ஆக்கலாம் என்று ராஜாஜி ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு 'தமிழில் முடியுமா' என்ற தமது நூலில் ஓங்கி அடித்தார். இவ் இரு பெரியார்களும் தேசிய உணர்ச்சியால உந்தப் பெற்று சங்க நாதம் செய்வதற்குப் பல வருடங்களுக்கு முன்னரே சில அறிஞர்கள் தமிழில் விஞ்ஞான நூல்களைச் சமைக்க முன் வந்திருக்கிருர்கள். 19ம் நூற்ருண்டின் இறுதியில் வெளி வந்த இவ்வித விஞ்ஞான நூல் ஒன்றைக் குறிப்பிட்டு, அதிலுள்ள பொருளின் சுருக்கத்தைக் கொடுத்து விளக்கி, அதன் முக்யத்வத்தையும் தரத்தையும் ஆராய்வது தான் இக்கட்டுரையின் நோக்கம்.

இந் நூல் பேராசிரியர் பி சுந்தரம்பிள்ளை இயற்றிய நாற்றுகைவிளக்கம் தான். இதை முதனூல் (original work) எனலாம். இது 1888ல் வெளியிடப் பெற்றது. தற்காலத் தமிழ் இலக்கியத்தில் முதல் விஞ்ஞான நூல் என்று கூடக் கருத இடமிருக்கிறது. இன்று இந் நூலைப்பற்றிக் கேள்விப் பட்டவர்கள் மிகச் சிலரே. அதைப்படித்துத் தெரிந்தவர்கள் அதனிலும் குறைந்தவர்கள் தான். ஆகையால் பல நயங்களுள்ள இந்நூலைத் தமிழ் அறிஞர் கள் மறந்து விடாதபடி அவர்கள் கவனத் திற்குக் கொண்டுவருவது அவசியமாகிறது.

நூலை ஆராயு முன்பு, தமிழ் இலக்கியத் தில் வசன நடையின் வளர்ச்சியைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்வது. சுந்தரம பிள்ளையின் நூற்றுகை விளக்கத்தின் முக்யத் வத்தையும் தன்மையையும் அறிய துணை புரியும். தமிழ் மொழியில் எல்லா நூல்களை யும் செய்யுள் நடையில் இயற்றுவதுதன் தொன்றுதொட்டு வந்தமரபு. அவ்வாறு சமைக்கப்பெற்ற இலக்கிய, இலக்கண, சமய நூல்களுக்கு, உரைகள் எழுதுவதின் மூலமாகத் தான் முற்காலத்துப் புலவர்கள் வசன நடையைக்கையாண்டிருக்கிருர்கள். இறையனர் அகப்பொருள் என்றகளவியல் உரை, யாப் பருங்கலவிருத்தி ஆகியவை முதல் சிவஞான முனிவரின் மாபாடியம் வரையிலுள்ள சிறந்த உரைகளை நோக்கினல் இந்த உண்மை விளங் கும். பண்டைக்காலத்தைச் சேர்ந்த சிலப்பதி காரத்திலும், தகடூர்யாத்திரை, பெருந்தேவ ஞரின் பாரத வெண்பா, போன்ற நூல்களி லும் கிடைத்தபகுதிகளில் காணப்பெறும் உரைப்பகுதிகள் மிகக் கொஞ்சமே. அவற்றை விதிவிலக்காகக் கருதலாம்; அல்லது அவற்றை தொன்மை என்பதின் இலக்கண வரம்புக்குள் கொண்டுவர, பெயரளவில் சேர்க்கப்பட்டிருக்கலாம் என்று ஊகிக்கலாம். உரைகளுக்கு புறம்பாக ஒரு பொருளைக் குறித்து வசன நடையில் நூல்கள் இயற்றுவது மிகப் பிந்திய கால வழக்கு. இதை கி. பி. 17ம் நூற் ருண்டிலிருந்து, கிறிஸ்தவப் பாதிரிகளில் தமிழ்ப் பயிற்சி பெற்றவர்கள், தங்களுடைய சமய வேலைக்காகப் பெரும் பாலும் கையாண் டிருக்கிருர்கள். கடந்த நூற்ருண்டின் பிற் பாதியிலிருந்துதான் வசன நடையில் நூல்கள் எழுதுவது பெருவழக்காயிற்று; எனினும் விஞ்ஞானப் பொருள்களைப் பற்றி நூல்கள், முதல் நூல்களாகவோ, மொழி பெயர்ப்புக ளாகவோ இயற்றப் பெற்றதாகத் தெரிய வில்லை. இந்தநிலைமையில் சுந்தரம் பிள்ளையின் நூற்றுகை விளக்கம், விஞ்ஞானத்துறையில் திட்டமிட்டு ஆக்கப் பெற்ற முதல்நூல் என்று தெரிகிறது.

செய்யுள் நடையில் சுந்தரம் பிள்ளை ஆக்கிய மனேன்மணீயம் என்ற நாடகமே அவருடைய இலக்கிய சிருஷ்டியில் முதன்மை யானது. அடுத்த படியாக உரை நடையில்

Accn No: 28818

அவர் தீட்டிய நூற்ருெகை விளக்கம் சிறப்புடைத்து, இதைப் பற்றி திருவநந்த புரத்தைச்சேர்ந்த தமிழ்ப் பேரறிஞர்களில் ஒருவரான கே. ஜி சேஷய்யர் 65 ஆண்டுகளுக்கு முன்பு இவ்வாறு எழுதினர்:- ''சுந்தரம் பிள்ளையின் நூற்ருெகை விளக்கம் விஞ்ஞான சாத்திரங்களுக்கு ஒரு சிறந்த அறிமுக நூல். தமிழ் வசன நடைக்கு முன் மாதிரி எப்படி இருக்க வேண்டுமோ, அப்படியே அதன் உரை நடையும் அமைந்திருக்கிறது. நூல், இன்றுள்ளதை விட அதிகமான பிரகாசத்திற்கும் பாராட்டுதலுக்கும் உரியது''-1 இந்த மதிப்புரை மிகை படக் கூறப் பெறவில்லை என்பதை இக்கட்டுரை எடுத்துக் காட்டும்.

சுந்தரம் பிள்ளையின் மனோன்மணீயத்தையும் நூற்ருெகை விளக்கத்தையும் ஊன்றி நோக்கினல் அவருடைய இலக்கிய சிருஷ்டியின் ஒரு முக்கியமான இயல்பு தென்படும். அவர் தற்கால விஞ்ஞான, தத்துவ அறிவில் முற்றிலும் ஊறிப்போய், எல்லா விஷயங்களையும் அறிவியல் கோணத்திலிருந்தே அணுகினர் என்பது வெளிப்படை. எனினும், தமது நூல்களைப் பழைய முறையிலும் நடையிலுமே எழுதியிருக்கிருர் என்பதும் உண்மை. அவர் நாடகத்தின் பெரும் பகுதியிலுள்ள அகவல் நடையும், நூற்ருெகை விளக்கத்தின் சூத்திர அமைப்பும் இதற்குச் சான்றுகளாகும். அவர் எவ்வளவு திறமையுடன் அகவல் நடையை அமைத்திருக்கிருரோ, அவ்வளவு திட்பத்துடன் சூத்திரங்களை இயற்றியிருக்கிருர்.

நூலுக்கு ஆசிரியர் கொடுத்திருக்கும் தலைப்பாவது:—''சாஸ்திர சங்கிரஹம் என்னும் நூற்ருெகை விளக்கம். பொதுவியல்.'' இதைப்பற்றி அவர் தமது ஆங்கில முகவுரையில் கூறியிருப்பதாவது:—''தற்கால சாத்திரங்களின் முக்கிய இயல்புகளையும், அத்துடன் பல அறிவுத்துறைகளை, ஆசிரியர் கருதிய முறையில் செய்தபாகுபாடுகளையும், தமிழில் கொடுப்பது பின்வரும் கட்டுரையின் நோக்கம். விஞ்ஞான அறிவையும் கருத்துக்களையும், தமிழ் மொழியில் சொல்லக்கூடிய ஆற்றலைப் பெருக்குவதற்கு உபயோகமான முயற்சி என்ற நம்பிக்கையில் இது வெளியிடப் பெறுகிறது'' இதிலிருந்து இரண்டுவிஷயங்கள் தெளிவாகின்றன. நூல் முற்றிலும் ஆசிரியின் சிந்தனையின் விளைவு என்பது ஒன்று. 'தமிழில் முடியுமா'? என்ற உணர்வே, இந்த நூலை எழுத அவரைத்தூண்டியிருக்கிறது என்பது மற்ருென்று முடியும் என்ற நம்பிக்கையை, ஆடம்பரமும் தேசீய உணர்ச்சியின் தொடர்பும் இல்லாத தன்மையுடன், செயலில் திறமையுடன் காட்டியிருக்கிருர். தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு தமிழில் தைரியமாய் ஆக்கப் பெற்ற இந்த புதுமைச்சிருஷ்டியை ஆராய்ந்து மதிப்பிடும் போது, அப்போது தமிழ் உலகில் நிலவியபொதுவான சூழ் நிலையையும், அறிஞர்களிடம் இருந்த கருத்துப் போக்கையும் சம்பிரதாயங்களையும் நினைவில் வைத்துக் கொண்டு செய்வதுதான் விமரிசன நியதி. இன்று விஞ்ஞான வளர்ச்சி, அக்காலத்து அறிஞர்களின் கற்பனைக்கும் எட்டாத விதத்தில் பெருகி அடைந்திருக்கும் அற்புதங்களையோ, இன்றையத் தமிழ் புலவர்களில் பெரும் பாலோர் கடைப்பிடிக்கும் தமிழ் நடையையோ நாம் மறந்து விடவேண்டும்.

## II

இனி நூலின் பொருளுக்குப் போவோம். மொத்தத்தில் நூல் அளவில் சிறியது. 92 பக்கங்களையேயுடையது. அதில் ஒருவரியிலிருந்து ஐந்து வரிகள் வரையிலுள்ள 38 சூத்திரங்கள் அடங்கியிருக்கின்றன. ஒவ்வொரு சூத்திரத்திற்கும் ஆசிரியர் உரையையும் தெளிவான விளக்கத்தையும் தந்திருக்கிருர். சில சூத்திரங்களுக்கு அவை விரிவாக அமைந்திருக்கின்றன. நூலைக் கவனத்துடன் படித்தபிறகு அது பொருண்மையின் பரப்பிலும் சிந்தனையின் தனித்வத்திலும், ஆழத்திலும், உயர்ந்தது என்ற உணர்ச்சியே எஞ்சிநிற்கும். இந்தத் தன்மையில் இது மெய்க்கண்டதேவரின் சிவஞான போதத்தை ஒருவாறு ஒத்தது என்று கொள்ளலாம்

திருவருளன்றித்தெரிவறறிகரிய
வொருவனை வணங்கி யீங்கோதுவன்
விரிவுறு நூற்ருெகை விளங்குநல்லியல்பே

என்ற கடவுள் வணக்கத்துடன் நூல் தொடங்குகிறது. இதில் இந்து சமயிகளின் தெய்வங்கள் பெயர் சொல்லி வணங்கப்படவில்லை. ஆனுல் ஆழ்ந்த சமயக்கொள்கை ஒன்று அதில் பொதிந்துகிடக்கிறது. கடவுளை அவன்

அருளின்றி அறியமுடியாது என்ற பெரும்பாலான சமயிகளின் தத்துவம் இதில் காணப் பெறுகிறது.

அடுத்து நூலுக்கு முகப்புப் பட்டயமாக ஒரு குறிப்பை ஆசிரியர் மிகுந்த உணர்ச்சியுடன் எழுதி இவ்வாறு முடித்திருக்கிறார்:—''ஆதலால் பூர்விகர்கள்மேல் உண்மையான பக்தியும் தேசாபிமானமும் உடையோர், முன்னோர் நூல்களை அன்போடு ஆராய்வதோடு, நூதனமாக அந்நிய தேசத்தாரால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் நூல்களையும் கற்றறிந்து, கலந்து, 'பழையனகழிதலும் புதியன புகுதலும் வழுவல, காலவகையினலே' என்னும் முதுமொழியை மறவாது, அவர் அவர்களால் கூடிய அளவும், நம் முன்னோர் உழைத்தபடி உண்மை அறிய உழைத்து, ஜன சமுதாய அறிவைவளர்க்கக் கடமைப் பட்டவர்களாக இருக்கிறார்கள் அவ்விதமான முயற்சிக்கு நூல் என்பதின் இயல்பும், அந் நூல்கள் கூறுபடும் தொகைவகைகளையும் பொதுவாக நிர்ணயித்துக் கொள்ளல் இன்றியமையாத சாதனங்களில் ஒன்றாய் இருப்பதால், அவற்றை நம்மால் இயன்றமட்டும் சுருக்கி விசாரிப்போமாக.'' நமது நாட்டு பண்டைய சாத்திரங்களுடன், தற்கால மேனாட்டு விஞ்ஞான அறிவையும் பெற்று நமது முன்னேற்றத்திற்குப் பயன்படுத்த வேண்டும் என அவர் கூறியிருப்பது இன்றைய நிலைமைக்கும் பொருந்தக்கூடியதாயிருப்பது அவருடைய தீர்க்கதிருஷ்டியைக் காட்டுகிறது.

நூலில் உள்ள 38 சூத்திரங்களும் அவற்றின் விளக்கங்களும் பல அரிய விஷயங்களைப் பற்றிக் கனிந்த சிந்தனைப் பண்புடன் பேசுகின்றன. அவற்றில் முக்கியமான சூத்திரங்களைப் பொறுக்கி, நூலாசிரியரின் விளக்கங்களை சற்று விரிவாக எடுத்துக்காட்டி, நமது விமரிசனத்தைச் சுருக்கிக் காட்டும் முறையில் இக்கட்டுரை அமையும்.

'அறிவினை உணர்த்தும் கருவி நூலென்ப' என்பது முதல் சூத்திரம். நூல் என்பதற்கு, தொல்காப்பியம், நன்னூல ஆகியவை கூறும் இலக்கண முறையிலிருந்து வேறுபட்டு, தற்கால விஞ்ஞான நோக்குடன், பொதுவாக சூத்திரத்தைச் சமைத்திருப்பது அருமையாய் இருக்கிறது. இதன் விளக்கத்தில் ஆசிரியர் எழுதுவதாவது:- 1) 'நூல்' என்பது அறிய வேண்டியவற்றை அறிவிக்கும் ஓர் கருவி, சதுர் வேத முதல், பல்லியின் குரல் முதலிய வற்றுள் நேரிடுகிறவைகளைத் தெரிவிக்கும் பல்லி சாத்திரம் வரை, கற்கக் கூடிய எல்லாவற்றிற்கும் நூல் எனும் தமிழ் பெயர் பொருத்தம் உடையதாய் இருக்கின்றது....... ஆதலால் நூலின் முதல் பிரயோசனம் அறிவே, அறம், பொருள், இன்பம், வீடடைதல் என்பதை இதனுல் மறுத்ததன்று அவைகளுக்குப் பரம்பரா சாதனவாதன்றி, நூல் கற்றவுடன் பயப்பது அறிவே, அவ்வறிவைத் தக்கவழி செலுத்தின் அடையக் கூடியவை அந்நான்கும். நூலுக்கு 'சாத்திரம்' என்பது பொதுவான வடமொழிப் பிரதிபதம் ஆகலாம்''.

நூல் 1) அறிவுக்குக் கருவி என்ற உண்மையைக் கூறி விட்டு, அறிவின் தன்மையையும் வகையையும் ஒரு சூத்திரத்தில் ஓதி, அதைத் தழுவி நூல்களையும் ஒரு விதமாகப் பாகு பாடு செய்கிறார். சூத்திரம் வருமாறு.

அறிவு பேரறிவு சிற்றறிவு புலனறிவென
மூவகை யதனுன் முறையே நூலும்
மதம், பொது, கலையென வகை மூன்றுமே.

இதில் அறிவை, பேரறிவு (திருவள்ளுவர் இதை மெய்யறிவு என்பர்) சிற்றறிவு, புலனறிவு என மூன்று வகையாக்கி அவற்றிற்குக் கருவியாகிய நூல்களை, முறையே மதநூல் அல்லது சமயநூல்கள், பொது நூல்கள், கலை நூல்கள் என வெகு நுட்பமாக வகுத்துக் கூறுகிறார். அதாவது இக்கருத்துப்படி அறிவு மண்டலம் முழுவதும் சமயம் (Religion) பொது அறிவு (Science), கலை (Art) ஆகிய மூன்று பெரிய துறைகளுக்குள்ளடங்கும், நூலாசிரியர் இப்பாகு பாட்டிற்குக் காரணமாகச் சொல்வதாவது:- ''அநுபவசித்தமான அறிவை இன்னதென்று இலக்கணங் கூறிக் காட்டல் அரிது. ஆயினும் நூல்களை வகுத்துப் பிரிப்பதற்காக, அறிவினை மூவகையாகக் கூறுபடுத்தி விவரிக்கவேண்டியதாக இருக்கின்றது ...... வாசா சாத்தியம், கிரியா சாத்தியம் என்ற முன்னோர்களின் பிரிவு ஆழ்ந்து பார்க்

குந்தோறும், நிராட் சேபனையாக நிலை நிற்கத் தக்கதேனும் உபநிடதங்களில் குறிப்பிட்டிருக் கின்ற பிரம்ம வித்தையானது வாக்கு மானங் களுக்கு அவிஷயமான பரவித்தை என்றும், வேதாதி அனைத்தும் அபர வித்தை என்றும் நம் முன்னோர் தாமே பிரித்துக் கூறிவதினு லும், வேதமும் வேதாங்கங்களில் சிலவும் ஒரு வித ஆஸ்திகர்களுக்கன்றி, பொதுப்பட யாவர்க்கும் பொருந்தாமையாலும், நூதன மான பல நூல்கள் ஏற்பட்டிருப்பதினுலும், கேவலம் வாக்கு மாத்திரத்தினுல் சாத்திய மல்லாதவை ஆதலாலும், இப்பிரிவை சற்றே பேதப்படுத்தி இக் காலத்திற்கு ஒக்கச் செய் தால் அவர்கள் கருத்துக்கு விபரிதமன்று ஆத லால் இவிடத்தில் அறிவின் சாதனமான துணைக் காரணங்களை முன்னிடாது, அதுவே தன்னியல்பில் எத்தனை வகைப்படும் என நோக்குங்கால், 'பேரறிவு', 'சிற்றறிவு' புலனறிவு' என மூன்று கூறுமென விளங்கும்.''

''பேரறி வென்பதிரண்டற வறிதல்
லநுப வமன்றி மற்ற கோசரமதுவே''

என்ற சூத்திரம் பேரறிவை விளக்குகிறது. பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, பொதுவாக சைவ சித்தாந்த தத்துவத்தில் ஈடுபட்ட வேளாளர் குடும்பத்தைச் சேர்ந்தவர்; கல் லூரியில் தத்துவ ஞானப்பாடம் படித்து எம். ஏ. பட்டம பெற்றவர். அவர் காலத்தில் (சென்னை பல்கலைக்கழகம் தொடங்கிச் சில வருடங்களே ஆயிருந்தன) கல்லூரிகளில் மே னுட்டு தத்துவஞானமே பிரதானமாக போதிக்கப்பட்டது. இதனுல் அவர், நமது நாட்டு வடமொழியிலுள்ள ஞானதரிசனங் களைக் கற்க அவாக் கொண்டு, நெல்லையில் ஆரம்பிக்கப் பட்ட இந்து கல்லூரியின் முதல் தலைவராயிருக்கும் போது, கோடக நல்லூர் சுந்தர சுவாமிகளை அணுகி அவருக்குச் சீட ராகி பயிற்சி பெற்ருர். இதன் விளைவாக அத் வைத வேதாந்தத்தில் பெரு நாட்டம் கொண் டார். நூலின் முதல் தலைப்புப் பக்கத்தில் ஆசி ரியர் 'ஸ்ரீ கோடக நல்லூரில் எழுந்தருளி யிருந்தஸ்ரீ சுந்தர சுவாமிகளின் மாணுக்கருள் ஒருவரும்' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அநுபவ பூர்வமாய் அடையக் கூடிய பிரம்ம ஞானத்தையே பேரறிவு என்று கருதுகிருர். அதற்கு விளக்கமும் தந்திருக்கிருர். பேரறி வுக்குக் கருவியாயிருக்கும் மத நூல்களைப் பற்றி அடுத்த சூத்திரம் விளம்புகிறது. அதற்கு வியாக்கியானம் செய்யும் போது ஆசிரியர் ''மத நூற்கிரமம் மற்ற நூற்கிரமம் போலன்று; அந்தந்த மதத்தில் சிரத்தை யுடைய ஆத்திகர்களுக்கு, அவர்கள் அடை விரும்பிய அநுபவ நிலை எய்து தற்கேற்றதான சாதன விஷயங்களை, பரம்பரையாய்ப் பக்கு வானுசாரமாகக் கூறி அவைக்கேற்கு நட வடிக்கைகளை, விதி விலக்குகளாக, ஏற்படுத்து வதே மத நூல்களின் பொதுவான இயல்பு'' என்று கூறுகின்ருர்.

இரண்டாவது பாகுபாட்டை 'சிற்றறிவு' என்று ஆசிரியர் வகுத்திருப்பது சிந்தனைக் குரி யது. பொது அறிவு அல்லது விஞ்ஞான அறி வைத்தான் 'சிற்றறிவு' என்கிருர். இதனுல் அவர் விஞ்ஞான அறிவின் முக்கியத்வத்தை குறைத்தோ, தாழ்த்தியோ கூறுகிருர் என்று சொல்வதற்கில்லை. முதலாவது கூறிய பேரறிவிலிருந்து, அதன் எதிர் மறையாக (பேரின்பம், சிற்றின்பம் என்ற தமிழ் தத்துவ மரபின் எதிரொலியாக) இயங்கவும் இலக்கியப்பண்பை நோக்கியுமே இவ்வாறு கொண்டு அதற்கு.

''இரு வகைக் கரணமு மொரு வழிப் படர்தல்
சிற்றறிவது நூற்குச் சிறப்பென்ப''

என்ற சூத்திரத்தை ஆக்கியிருக்கிருர். அவர் காட்டும் காரணமாவது:- ''மனமுதலிய உட் கரணமும், கண் முதலிய வெளிக் கரணமும், ஒன்று பட்டு பொருந்த இவ்வறிவு விளங்கு கிறது..... ஆதலால் இச்சிற்றறிவிற்கு இரு கரணத்தின் சம்பந்தமும் வேண்டுமெனக் கூறப்படுகின்றது. இவ்வித சிற்றறிவே நமக்கு இயல்பாயுள்ளது. ஆதலாலும், இச் சிற்றறி வினுல் ஸ்தாபிக்கப்பட்டவைகள், தங்கள் தங்கள் அநுபவத்திற்கு உதவுவது மாத்திரம் அன்று, அவற்றை மறுத்தார்க்குத் தெளிவி னுல் நிருபிக்கத்தக்கனவாயிருப்பதாலும், இச் சிற்றறிவுதான் நூல் விவகாரங்களுக்கு உரித் தாயிருக்கின்றது ........ பேரறிவு, புலனறிவு என்பவற்றைச் சுட்டாத இடங்களில் அறிவு என்னும் பெயரே இச்சிற்றறிவுக்கு உரித்தா கவும் போதுமானதாகவும் இருக்கும்.''

இச்சிற்றறிவிற்குரிய நூல்களை, பொது நூல் என்று கொண்டு அதற்கு இலக்கணம் பின் வரும் சூத்திரத்தில் அமைந்திருக்கிறார்.

''உண்மை, பொதுமை, யொழுங்கென மூன்று திண்மைசேர் அறிவின் செறிவே பொது நூல்" தத்துவரிதியாக இதற்கு விரிவான விளக்கத்தையும் கொடுத்திருக்கிறார். வரி வஞ்சி அது இங்கே விடப்பட்டிருக்கிறது.

மேற்கூறிய சூத்திரத்தில் வரும் ஒழுங்கு என்ற குணத்திற்கு அடியிற்கண்ட சூத்திரத்தை இயற்றியிருக்கிறார்.

எடுத்த மொழிகட்கிலக்கணங் கூறல்
வெளிப்படை கூறி மேலல்லன விளக்கல்
கேவலங்கூறி மேல கேவலங் கிளந்த
லெல்லா நூற்குமிவை பொது ஒழுங்கே.

இதில் காணப்பெறும், வெளிப்படை, கேவலம் அகேவலம் என்பன தனிச் சூத்திரங்களும்

விளக்கங்களும் பெற்றிருக்கின்றன. இவை பெரும்பாலும் தர்க்க சாஸ்திரத்தின் அடிப்படையில் (Logic) நியாயதரிசனத்தின் இயல்புகளுடன் அமைந்திருக்கின்றன

இதற்கப்புறம் பொது அறிவு அல்லது சிற்றறிவுக்குரிய நூல்கள் என்ற பொருளைப் பற்றி அலசுகிறார். பெயரளவில் முன்னோர்கள் முறையைப் பின்பற்றி 1 முதல், வழி, சார் பென பொது நூல், என்ற சூத்திரம் கண்டு மூன்று விதமான நூல்களுக்கும் வேறுதவி மாக இலக்கணம் அமைக்கிறார்.

''முதனூ லான்ற முடிவுடன் மொழிந்த
இலக்கண நிரம்பத் துலக்கிடு மென்ப"
''இலங்கிடு மிருக்கையு மெண்ணுடைளவு
மிருவகை யியக்கமு மைக்கிய முயக்கமு
முயிரு முளனு மென்றறுவகை முதனூல்"

என்ற இரு சூத்திரங்கள் முதனூலைப் பற்றியவை அறுவகை முதனூல்களுக்கும் சூத்திரங்களை இயற்றி அவற்றிற்கு விளக்கங்களையும் தந்திருக்கிறார்.

'Pure Being' என்பதற்கு இருக்குகை என்ற சொல்லைக் கையாண்டு 'இருக்குகை விளக்கு நூல் தத்துவமென்ப' என்ற ஒரு சூத்திரத்தை வரைந்து அதன் உரையில் அவர் கூறியிருப்பதின் ஒரு பகுதியாவது:- ''தோற்றுகின்ற எல்லாப் பொருளுக்கும் பொதுவாய் நிற்கின்ற குணம் யாதெனப்பார் போமாயின், கேவலம் 'இருக்கை' அல்லது 'தோற்றம்' என்னும் குணத்தைவிடத் தனிப் பண்பாக ஒன்று கூறுவதற்கில்லை. 'இருக்கை' என்னும் குணம் இல்லாததற்குப் பொருள் என்னும் பெயரே இலது ........ ஆதலால் பொருள் எனத் தோற்றமேயாகில், கேவலம் இருக்கை என்னும் குணம் அதனுடன் இருக்க வேண்டும். இக் குணத்தை வடமொழியார் கேவலம் தன்மாத்திரமென்றும் சேவலசத் தென்றும், வஸ்துத்வம் என்றும் அஸ்தித்துவம் என்றும் பல மொழிகளால் விவகரிப்பர். இந்த இருக்கை என்பதே வேறொரு பாவனையில் தோற்றுகை என்னும் பெயர் பெறும். தோற்றத் தொழியில் இருக்குகையின்று; தோற்றுவதே ஒரு பொருளின் இயற்கை. இப்படியாகத் தோன்றும் தன்மை முற்கூறிய இருக்கையோடு அபின்னமாயிருந்து, பாவனு பேத மாத்திரத்தால் பேதப்படுவதினுல் கேவலம் இருக்குகைக்கு எவ்வளவு பொதுத் தன்மை உளதோ அவ்வளவு பொதுத்தன்மை தோற்றுகைக்கும் உண்டு ...... கேவலசத் சித் விவகாரங்களை செய்கின்ற நூலுக்குத் தத்துவ நூலெனப் பெயர் தத்துவம் என்றால் (அதுக்தன்னம்) என்றும் இயற் பொருளை உடைத்தாய், இருக்குகை விளக்குகை என்னும் இரண்டையும் உணர்த்தும் இது முதநூல்களின் முதநூல் என்னும் தலைமை அடைவதற்கு உரியது. ஊகத்தின் அனுப்பிரவேசத்திற்கு இடங்கொடுக்கிற மத நூல்கள் எல்லாம் இத்தத்துவ நூலைக் கூடிய அளவும் தழுவியே நிற்கின்றன. சதுர் வேதங்களும் அவற்றை ஒட்டிவரும் சமயங்களும் இத் தத்துவ நூலோடு கலந்து அபேதமாய் நிற்கின்றன வென்று, அவற்றை அவிரோதமாய்ச் சோதனைச் செய்தவர்கள் யாவரும் துணிகின்றார்கள். அப்படி வைதிக மதக் கொள்கையோடு அபேதமாய்க் கலப்புண்ட தத்துவ நூலுக்கு, உத்திர மிமாம்சப, வேதாந்தம் எனும் பெயர் சாதாரணமாய் வழங்குகின்றது இந் நூலில் நமது முன்னோர் மிகவும் தேர்ச்சியடைந்தோர் என்பது இந் நூலோடு கலப்புண்டிருக்கிற மதக் கொள்கைகளை முற்றிலும் மறுப்போர்க்கும் சம்மதம். மற்ற தேச வாசிகள் இதுகாறும் ஆய்ந்து

அடைந்திருக்கும் துணிவுகளை பன்னூற்றாண்டுகளுக்கு முன் இவர்கள் உழைத்தறிந்த முடிவுகளோடு ஒப்பிடுங்கால், ஐயமற நமது முன்னோரின் மதி நுட்பமும், அகமுக விலாசமும் புலப்படும் '' ஆசிரியரின் தீவிர வேதாந்தப் பற்றை நீங்கு மீண்டும் பார்க்கிறோம். இது வரை சூத்திரங்களிலும் அவற்றின் விளக்கங்களிலும், தத்துவ இயல்பே முனைந்து நிற்கின்றது.

III

அடுத்துப் பின் வரும் சூத்திரங்களில் விஞ்ஞான இயல்பு ஓங்கி நிற்பதைக் காணலாம்.

'எண்ணே டளவு நூல் கணிதமென்ப'
'இயக்க மென்பதிடப் பெயர்ச்சி அவஃதுஞ்
சாங்க மணு வென வீங்கிருபாற்றே'
'சாங்கஞ் சாமிய மசாமிய மென விரு
பாங்கா நில. நீர், கால் சேராவழி'
'அணு வெனப்படுவது பிரிபடாப்பகுதி
மூலங் கலப்பென வா மிருவகையே'
'அணுமானீக மணு வினியக்கம்
வெம்மை யொளி மின் மயமதன் பயனே'
'இயக்கநூல் சத்திநூலெனப் பெயர் பெறுமே
'நின்ற யொழி பண்பெலாம் பிறழ்தரச் சரிமுறை
யளவிற் பிற ழாவாகி யணு வின
மிரண்டறக் கலந்தலேக்கிய முயக்கம்'
'முயக்க நூலி ரசாயன மா மதுவு
மியல்பு சாரீர மென மிருகவகை யே'
'உறுப் போடமைந்த வுடம புடைத்தாகி
யுண்ணலுற் பாதனம் பண்ணுயிர் யாவுந்
தாவரஞ் சரமெனவா மிருவகையே'
'உண்ணலென்பது தன் மயப்படுத்தல்
தனைப் போல் பிரதி சமைத்தாலுற் பாதனம்'
'புலன் புலால் படைத்த வுடம் புடைத்தாகி
யுணர்தலுஞ் சலித்தலு முடையன சரமே'
'அங்க விபாகமு மவற்றின் றொழிலுங்
கரு முதன் மரணம் வரையுறு கதியுஞ்
சாதியுட் சாதியாம் வரலாறுந்
தாவரஞ் சர மென மிருபாலுயிர்க்குங்
கூறு நூலுயிர் நூலெனக் கூறுவரே.'
'தான் பிறரென வறிகரண முளமே'
'உள நூற் தத்துவ நூ லோடொன்றும்.

அறிவில் முதல்பிரிவான பேரறிவு அல்லது தத்துவ அறிவு சம்பந்தமான கருத்துக்கள் நமது நாட்டின் எல்லா பாகங்களிலுமுள்ள மக்களுக்கு ஓரளவு பழக்கமுள்ளவையாதலால் அவற்றின் நுட்பங்களைத் தமிழில் சொல்வது அவ்வளவு கஷ்டமில்லை. இந்தத் துறையிலும் ஆசிரியர் பொருளைப் புதுமுறையில் அணுகி, தமது சிந்தனைத் திறனைக் காட்டியிருக்கிறார். ஆனால் மேலே கொடுக்கப் பெற்ற பதினன்கு சூத்திரங்களும் இரண்டாவது பிரிவான பொது அறிவைச் சேர்ந்த முதநூல்களுக்குள்ளடங்கும் விஞ்ஞான சாத்திரங்களைப் பற்றியவை. இவற்றின் கருத்துச் செறிவுடைய விளக்கங்கள் அடைந்திருந்த வியாபகத்தையும் பொருண்மையையும் தெளிவாக்குகின்றன. இந்தப் பகுதியில் தான் சுந்தரம்பிள்ளையின் மேதையும், தமிழில் விஞ்ஞான அறிவைக் கொண்டுவர வேண்டுமென்ற அவாவும் நன்றாய் விளங்கின்றன. அதிலிருந்து சிற் சில பாகங்களை, அங்கு கொஞ்சம், இங்கு கொஞ்சம் எடுத்துச் சுருக்கமாக வாவது, கூடிய வரையில் பொருள் தொடர்பையும் விடாமல் தொடுக்க வேண்டியது அவசியம். அதற்கு முன்னர் அவர் கையாண்டிற்கும் தமிழ்ச் சொல்லாக்கத்தில் சிலவற்றிற்கு சமமான ஆங்கில பதங்களையும் கொடுத்தால் தான் அவருடைய கருத்துக்களை எளிதில் புரிந்து கொள்ளலாம்.

அவையாவன முதநூல்கள் Fundamental Sciences; சாங்கம் Motion; அணு Indivisible particle; சாங்கத்சாமியம் Statics; சாங்கமசாம்யம் Dynamics; நில, நீர், கால Solids, Liquids, Gas; மூல அணு Atom; கலப்பணு Molecule; வெம்மை Heat, ஒளி Light; மின்மயம் Electricity சத்தி நூல் Physical Sciences; ஐக்கிய முயக்கம் Chemical change; இயல்பு ரசாயனம் Inorgnic chemistry; சாரீர ரசாயனம் Organic chemistry; தாவரம் Vegetable kingdom; சரம் Animal kingdom; உற்பாதனம் Reproduction of species; புலன் Senses; புலால் muscles; அங்கவிபாகம் Anatomy; உயிர்நூல் Biology; உளநூல் Psychology.

விஞ்ஞான சூத்திரங்களின் விளக்கங்களிலுள்ள சில பகுதிகள் வருமாறு. ''இருக்குகை

அல்லது விளங்குகை என்னும் குணம் நீங்கிடில் பொருள் எனப்படும் எல்லாவற்றிற்கும் பொதுவாக நிற்கும் குணம் ஒன்றிரண்டு எண்ணப்படும் பண்பேயாம். நம்மால் நினைக்கக் கூடிய பதார்த்தங்கள் யாவும் எண்ணம் என்னும் பரிமாணம் உடையனவே . . காலத்துள் அகப்படாத தோற்றம் இல்லாததால் எண்ணுகைக்குட்படாத பொருள்களும் இன்று 'எண்' எனும் குணம் நீங்கில் மற்றெக்குணம் பொருள் எல்லாவற்றிற்கும் பொருத்தமென மேல் ஆராயில், நீளம், அகலம், கனம் என்னும் விகாரங்களுடைய 'அளவு' (Extension) அடுத்த குணமாக விளங்கும். 'விஸ்தாரம்' 'வித்தி' 'வியாப்தி', 'திக்கு' 'தேசம்' என்னும் வடமொழிகள் இக்குணத்தையே குறிக்கின்றன. 'எண்' என்பது எப்படி காலத்துவத்தின் விகற்பமோ, அப்படியே 'அளவு' தேசத்துவத்தின் விகற்பமென தத்துவ ஞானிகள் கூறுவர். ஆதாயம் என்றும் ஒரு பூதமாக இதை விவகரிப்பதும் உண்டு. தேசம், ஆகாசம் என்று சொல்லுகிறது, தமிழில் இடம் என்னும் பொருளுடையதேயன்றி வேறன்று. அப்பொருள்களுக்கும் இடமில்லையானல் இருக்கையுமில்லை. இடத்தை நிரப்பும் குணமே இவ்விடத்தில் 'அளவு' எனக் கூறியது .. ஆயினும் 'எண்' எனும் குணம் போல இவ் 'அளவு' எனும் குணம் பொதுமையுடையதன்று என்பதும், அதனல் முன்னதை விசாரிக்கும் நூலில் அளவை விசாரிக்கும் நூல் விரிவிற் குறைவுடையது என்பதும் வெளிப்படை. இந்நூல் 'எண்' எனும் குணத்தை ஆராய்கின்ற காலதத்துவம், மற்றும் தனித்தாபிதங்களையும் உடையதாய், முறையே, நீளம், நீளம்-அகலம், நீளம்-அகலம், கனம், என்னும் மூன்று விகாரபாடுடைய அளவினல் ஆக்கப்பட்ட சகல வடிவங்களுடைய தன்மைகளை ஆராயத்துணியும். இஃது தனிப்பட ஒருமுதல் நூலாய் இருப்பதற்குப் போதுமான விரிவும் மேன்மையும் உடையதேனும், இதன் சூக்ஷும விவரணங்களுக்கு கணக்கிடுதற்கேற்ற ஒன்று, இரண்டு, மூன்று என்னும் பாக விசேடங்கள் முற்றிலும் தேவையாயும் பெரும்பான்மையும் இரண்டு நூல்களுக்கும் சிறப்பிலணங்களும் ஆராய்ச்சி வழிகளும் பொதுவாயும் இருப்பதினல் நூல் வலோர் இரண்டையும் சேர்த்து ஒரு நூலாகவே விவரிப்பதும், அந்நூலுக்குக் கணிதம் எனப் பெயர் கூறுவதும் வழக்கம்."

"இருக்கையோடு கூடிய விளங்குகை, கணக்கிடும் கூறுபாடுகள் அடங்கிய அளக்கும்படியான வடிவ பேதங்கள் ஆகிய இவ்விரு குணங்களையும் நீக்கிடில், 'இயக்கம்' என்பது பொருளுக்கு அடுத்த பொதுவான குணமாக விளங்கும். ஒரு இடத்தை விட்டு மற்றொரு இடத்துக்குப் பெயரும் தன்மையே இயக்கம். அசைவு, சலனம் இதற்கு மறுபெயர்கள் புலன்களுக்கு புலப்படும் வெளிப்பொருள்கள் யாவும் இக்குணம் உடையனவே. இந்நூலில் விசாரிக்கப்படும் இயக்கம் இரண்டு பெரும் பிரிவுடையது. சாங்கமாகிய இயக்க விதிகள் அசைவற்றதாய்த் தோன்றுகின்ற 'சாமிய சாங்க இயக்கத்தையும், அசைவுள்ளதாய் வெளிப்படத்தோற்றுகின்ற 'அசாம்ய சாங்க இயக்கத்தையும் குறித்தனவாய், இரண்டு பெரும் பிரிவுடையனவாம். இவை ஒவ்வொன்றும் தனித்தனி 'நிலவகை சாமிய சாங்கம்' 'நீர் வகை சாம்ய சாங்கம்' 'நீர் வகை அசாம்ய சாங்கம்' 'கால்வகை சாம்ய சாங்கம்' 'கால் வகை அசாம்ய சாங்கம்' என்று இப்படி ஆறுவகைப்படுகின்றது"

அணு, அணு இயக்கம் என்பன விளக்கம் பெறுகின்ற பகுதியில் ஆசிரியர் எழுதுவதாவது:- "முன் சென்ற தத்துவ நூலில் நின்றும், கால, தேச, வஸ்துவாகிய மூன்று தத்துவங்களையும், கணித நூலின் பிரதான முடிவுகளையும், தனித்தாபிதங்களாக (Postulates and axioms) கொண்டு, ஆங்காங்கு வேண்டுழி, கணித நூல் மார்க்கங்களை யநுஷ்டித்து, மேற்கூறியபடி சாமிய சாம்யமாய், நிலம், நீர், கால் என்றும் அவஸ்தா பேதங்களையுடைய பொருள்கள் சங்க இயக்கத்தினையும், வெம்மை, ஒளி மின்மயம் முதலானவற்றிக்குக் காரணமாய் நிற்கின்ற அணு இயக்கத்தினையும் ஆராய்ந்து, அவற்றின் குண விசேடங்களையும் தொழில் வேறுபாடுகளையும் திட்டப்படுத்தி அறிந்து அவற்றிற்குரிய விதிகளை ஒழுங்குபட விரிக்கும நூல், முதனூலில் மூன்றுவது நூலாகும். இனித 'பிரகிருதி விஞ்ஞானம்' அல்லது 'சக்திநூல்' (Physical sciences) என்று கூறலாம்"

''அணுக்கள் தங்கள் நிறையொழிய, மற்றெல்லா குணங்களையும் நீத்து, ஒன்றோடொன்று புணர்ந்து, இரண்டு பதார்த்தங்களாகஇருந்த தன்மையை விட்டுப் புதிதாக ஒரு பொருளாக பாவிக்கின்றதற்கு, 'ஐக்கிய முயக்கம்' (Chemical change) எனக் கூறலாம் சிலர் கருதுவதுபோல்'உப்போடுஅப்பை பளுவ விடுதல்' பூரண ஐக்கியம் அன்றென்பது மேற்கூறியதனுற் போதரும். இதை 'வெறும் கலவை' (Physical change) என்று கூறலாம் மேற்கூறிய ஐக்கிய முயக்கங்களை ஆராயும் நூல் ரசாயன நூலெனும் பெயர் பெறும். இரசாயன நூலானது இயற்பொருள் ரசாயன நூலென்றும், சாரீர இரசாயன நூலென்றும் இரண்டு பெரிய உட்பிரிவுகளை உடையதாயிருக்கின்றது முதனூலில் நான்காவதாகிய இந்த இரசாயன நூலுக்கும், முன்சென்ற முதனூல்களுக்கும் உள்ள சம்மந்தமும், முறைக்கிரமமும் இதுவரை கூறியதினுல் வெளிப்பட்டிருக்கலாம்''

''பொதுவாக உயிருள்ள பொருள்களின் இலக்கணத்தை ஆராயும்போது அவை மூன்றெனத் தோன்றும். இவற்றுள் முதலாவது உறுப்புகளுடன் கூடிய உடம்பாம். உயிர் என்ற பிரதிதியினுல் உடம்பென்ற வேற்றுமை பிறந்தது. உடம்பென்பது உறுப்புக்களால் ஆக்கப்பட்ட யாக்கை. உறுப்புக்களில் உயிர் செய்கின்ற தொழில் இரண்டு எனகூறப்படும். அவற்றில் முதலாவது உண்ணுதல், இரண்டாவது உற்பாதனம், உறுப்புக்களோடு கூடிய உடம்பிலிருந்து, அதுபோலவே எல்லா உறுப்புக்களும் கூடிய வேறொரு உடம்பை உண்டுபண்ணும் சக்திக்கு உற்பாதனம் என்று பெயர். இவ்விரண்டு தொழிலையுடைய உயிர்க்கு தாவரம் என்று பெயர். மற்ற பெரும் வகுப்பிற்கு சர உயிர் என்று பெயர். பொதுவாகப் பார்க்கில் இவைகளுக்குத் தாவரங்களைவிட இரண்டு உறுப்பும் அவைக்கிசைய இரண்டு தொழிலும் கூடுதலுண்டு. பிற பொருள்கள், தம் உடம்பின் மேல் பல விதத்தில் தாக்குவதை உணரும் புலன் என்னும் உறுப்பும், அப்படித் தாக்குதலுக்கேற்க இடம் விட்டுதானே சலிப்பதற்குரிய புலால் என்னும் உறுப்பும் எல்லா உயிர்களுக்கும் உள. இவற்றை முறையே ஞானேந்திரியம், கர்மேந்திரியம் எனக் கூறுவர் ... இப்படி தாவர, சரமாகிய சரீர நியமங்கள், ஜாதி உற்பத்தி ஆகிய பல நுண்ணிய ஆனந்தகரமான விசாரணைகளைச் செய்கின்ற இந்நூலில் முதனூல்களில் ஐந்தாவது நூல். இதற்கு உயிர் நூல் எனப்பெயர் கூறலாம். இந் நூல் ஆதிகால முதல் ஆரம்பிக்கப் பட்டிருக்கினும், தூர தேச சஞ்சாரத்தாலும், கால விளம்பரத்தாலும் நேரிடக் கூடிய அனுபவ முதிர்ச்சியாலேயே பூரணப்படத் தக்கது''

''தத்துவாதி உயிர் நூல் பரியந்தம் பொருள்களை விசாரணை பண்ணி அறிந்து நூலேற்படுத்தின கருவி அந்நூல்களில் அகப்பட இல்லையே ஆகையால் அக்கருவியே அடுத்த நூற்பொருளாக அமைகின்றது. இக் கருவிக்கு மனம் முதலிய பல பெயர்கள் பொருந்துமேனும், அவற்றை சிற்சிலவிசேட அருத்தத்தோடு வழங்குவதுளதாதலால், 'உளம்' எனும் தமிழ்ப் பெயர் ஐயமற்ற பொதுப் பெயராகத்தகும். தான், பிறர் என்றதுவிதநாட்டத்தோடு அறிவது உள்ளத்தின் தொழில். புலனறிவு தற்போத அறிவோடு கலக்கும் சந்தியில் உண்டாகும் விருந்திகளை மனம் எனவும், அப்போத அறிவு மிகுந்து தனித்து நிற்கும் விருத்திகளைப் புத்தி எனவும், இப்படி அறிதலால் உண்டான இன்ப துன்பங்கள் மயமாய் எழும்பும் விருத்திகளைச் சித்தம் எனவும், அதனுல் இயக்கப்பட்டு 'நான்' எனத்தடித்து வெளிப்படும் விருத்திகளை அகங்காரம் எனவும் பிரித்து உளத்தை (அந்தக்கரண) சதுஷ்டயம், என விவகரித்தல், இந் நாட்டில் பொதுவான வழக்கம். மனுஷ தத்துவத்தை அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் எனப் பஞ்ச கோசங்களாக்கி, அவற்றில் முன்னதிரண்டும் ஜடப் பொருட்களாதலால் உயிர் நூல் விஷயங்களாகத்தள்ளி, பின்னது மூன்றையும் இந்நூலில் விசாரிப்பது நமது முன்னோர் கொள்கை'' இக் கோச விசாரணைக்கு அடுத்தது போல் சில அபிப்பிராயங்கள் இக் காலத்தில் ஐரோப்பிய நூலோரில் சிலர் வெளியிடுகின்றார்கள் ... .. மேற்கூறிய அந்தக் காரணவிகற்பங்களைச் சோதனை செய்து உள்ளபடி விளக்கும் நூலுக்கு உள நூல் என்று பெயர். பொது நூல் இனத்தில்

இது இறுதியான நூல். மற்ற நூலாராய்ச்சி அனைத்திற்கும் கருவியாய் நின்ற உளத்தையே அவ்வாராய்ச்சியின் முடிவில் அகமுகமாய்த் திரும்பி நோக்கி அதன் இயற்கை விசாரணை பண்ணப் படுகின்றபடியால், இந்நூல் கணிதாதிபகிர்முக நூலுக்குப் பின் வைக்கப்பட்டது. தத்துவ நூலுக்கும் இதற்கும் அனுஷ்டான மார்க்கத்தாலும் விஷய ஒற்றுமையாலும் மிகவும் சாமீப்யம் உளதென விளங்கும் இது முதனூலின் ஆறுவது வகையென கொள்ளப் பட்டிருக்கிறது'' இந்நூலில் நம்முன்னோர் மிகவும் தேர்ச்சி அடைந்திருப்பதாகக் கூறி ஆசிரியர் இப்பகுதியை முடித்திருக்கிறார்.

இதுவரை பொது அறிவு சமபந்தமான முதல்நூல்களைப் பற்றிய விபரங்கள் கூறப் பெற்றன. அடுத்தாற்போல் இதே பிரிவைச் சேர்ந்த 'வழி நூல்கள்' கவனிக்கப்படுகிறது. அதற்குரிய சூத்திரமாவது:—

''முதநூல்பலவின் பொதுவிதி யொழுங்காய்''
சிறப்பிற் சிற்பொருட்கேற்புடைத்தாக்கி
யொருவழிப்படுத்தல் வழி நூன்மாண்பே.

இதை விளக்கி ஆசிரியர் பின் வருமாறு கூறுகிறார்:— ''முதல்நூலில் ஆறிலும் உட்படாத விஷயம் இல்லை. ஆனால நூலிலக் கணத்தைப் பூரணமாக விளக்குபவையாதலால், அவற்றுள் எடுக்கப்பட்ட விஷயங்களைப் பொதுப் படக் கேவல விபாவன்யாய் உண்மை விளங்குவது மாத்திரமே கருதி, நிஷ்ப பக்ஷபாதமாய் ஆராய்ந்து நியமங்களை ஏற்படுத்துவதன்றிச் சிறப்பாக சிலபொருள்களை மாத்திரம் விபரிக்க இடமில்லை. பற்பலகாரணங்களால் பலபொருட்டொகுதிகளை அப்படி ஆராய்வது வித்தியாநந்தத்திற்கும் விஷய நிச்சயத்திற்கும் உபயோகப் படுவதினால், அவ்வித ஆராய்ச்சி எங்கும்வழங்கிவருகிறது. அப்படி ஆராயும் போது எந்தஎந்தமுதல்நூல்களோடு எடுத்துக்கொண்ட பொருள்கள் சம்பந்தப்படுமோ, அம்முதல் நூல்முடிபுகளை ஒன்றாய்ப்புணர்த்தி கூடியஅளவும் நூல் இலக்கணங்களுக்கு ஏற்றபொதுமையும் கேவல விபாவனையும் ஒழுங்கும் வருவித்து, விசேட விதிகளை ஏற்படுத்தி, அப்பொருட்டொகுதியைப் பற்றி அறியத்தக்கவையாவையும் திரட்டித்தருவது வழிநூலின தலைமையான குணம்'' வழிநூல்களுக்கு உதாரணங்களாக ''சோதிடம், பௌமியம் (பூமி சாத்திரம்) தொல் வியாகரணம் முதலியவை ஒரு சூத்திரம் எடுத்துக்காட்டுகிறது.

ஆசிரியர் 'சோதிடம்' என்ற சொல்லால் பேச்சுவழக்கில் 'ஜோஸ்யம்' என்று இருப்பதைக் குறிக்கவில்லை அதை, ஆங்கிலத்தில் 'அஸ்ட்ரானமி' 'அஸ்ட்ராஜெனி' (Astronomy, Astrogeny) என்றுள்ள வார்த்தைகளின் பொருளைக் குறிக்கவே கையாண்டிருக்கிறார் அதன் முக்கியத்வத்தைப்பற்றி அவர் எழுதியிருப்பதாவது:— ''வானில் தோன்றும் நட்சத்திரம், கிரகம், சூரியசந்திரர், தூமகேது ஆகியவைகள் யாவர்க்கும் வியப்புண்டு பண்ணும் பதார்த்தங்களாக இருக்கின்றன. இவை என்னவென்றும், இவை செய்யும் தொழில் என்னவென்றும், மற்றும் அறிய மனிதர் ஆதிகாலம் முதல் முயல்வதுண்டு. அவைகள் பூமியில் நாம் காண்கின்ற மற்றப் பொருள்கள் போல ஒன்றும் அன்று என எது காலமும் நினைகின்றோமோ அதுவரையும் அவைகளைப் புறம்பாக நிறுத்தி அவைகளின் குணங்களை ஆராயும் நூலையும் ஒரு முதல் நூலாக அங்கீகரிக்க வேண்டியதாம். ஆனால் வாஸ்தவத்தில் அவைகள் பூமிபோல பௌதிக கோளங்களாகவே இயங்குகின்றன. அவைகள், நாம் பூமியில் காணும்படியான, இரும்பு, பொன் முதலிய பூதங்களின் சேர்க்கையே என்பதற்கு நிராகரிக்கத்தகாத அநுமானங்களுண்டு. தானேபிரகாசிக்கும் படியான நட்சத்திரங்களிலும், சூரியனிலும், இப் பூத பௌதிகங்கள் அவஸ்தாபேதத்தை அடைந்து எப்போதும் வாயுவடிவமாகவே நிற்கின்றன. சுயம்பிரகாசிகளாகிய நட்சத்திரங்களும் சூரியனும் பெருநெருப்புகளின்றி வேறில்லை. கிரகங்கள் இவ்வளவுபேதமேலும் உள்ளவை அன்று; சகலவிஷயங்களிலும் பூமியைப் போலவே இருக்கின்றன. சந்திரனும் அப்படியே இவ்வான் பொருள்களின் இடப் பெயர்ச்சியும் இயக்க விதிகளுக்குப்புறம்பன்று'' ஆயினும் அவைகளை இயக்கும் சக்திகள் சுத்தமாயும் சிலவாயும் இருப்பதினால், அவைகளின் கதிகளைத்திட்டமாய்க்கணித்து முன்னதாய் அறிவிக்ககூடியதாய் இருக்கின்றது. ஆனதினால் கணிதம், இயக்கம், ரசா

யனம் என்ற மூன்று பொதுநூல்களையும் தலைமையாய் முன்னதையும் அனுசரித்து, இச் செய்திகளை ஆராய்ந்து, அவற்றைப்பற்றி அறியவேண்டியவை அனைத்தையும் ஒருமுகமாய்த் திரட்டிக் கொடுக்கும் சோதிடநூல், வழிநூல் இயல்பிற்கும்பிரபல உதாரணமாக இருக்கின்றது. கால, தேசமென்னும் தத்துவங்களில் பெருமையும், நமது சிறுமையும் விளக்கி, மனவிரிவை உண்டுபண்ணி ஆனந்தம் அளித்தற்கு, இக்கெம்பீர வழிநூல்போல் வேறில்லை. இந்நாட்டிலுள்ள இக்கால சோதிட நூலோரில் பெரும்பான்மையர், சூரிய சந்திரர் இருவரையொழிய, மற்ற வான் பொருள்களைப் பற்றி, பஞ்சாங்கத் தாலன்றி அறியாதிருக்கும்படி நேரிட்டிருக்கிற நமது தேசநிலைமை மிகவும் விசனகரமாக இருக்கின்றது''

வியாகரணமும் ஒருவழி நூலேயென்று விளக்கம்பெறுகிறது. இதுமுன்னவைபோல் அல்லாமல் உளநூலாகிய முதல்நூலோடு சம்பந்தப்படுகிறது. வாக்கும், அருத்தமும் ஒன்றுப்பட்டே நிற்கும். அருத்தம என்பது மனோவிருத்தி. வாக்கு மனோவிருத்தியைக் காட்டும் ஒருகுறி. பற்பலதேசத்தார் தங்கள் கருத்தைவெளியிட பற்பலகுறிகளை ஏற்படுத்தி இருக்கின்றார்கள். அக்குறிகளின் சேர்க்கை பாஷை எனப்படும். ஒவ்வொரு பாஷையில் வழங்கும் பொருள்களை வகுத்து, அவைகள் உபயோகப்படும் முறையையும், அர்த்த பேதத்தை விளக்க மாறுபடும் கிரமத்தையும் சொல்வது வியாகரணத்தின் தொழில், இறுதியாக, இப்படிச்சிறப்பாக ஆராயக்கூடிய பொருட்டொகுதிகளுக்கு அளவில்லாததினால் வழிநூல்களைக் கணக்கிட்டு வகுத்தல பயனுடையதன்று'' என்கிறார் ஆசிரியர்.

பின்னர் சார்பு நூலைப்பற்றி இச் சூத்திரம் குறிப்பிடுகிறது.

''முதல் வழி நூற்களின் முடிபுணர்ந்தவையுடன் கைவரும் வகையொரு செய் வினைக்கமைத்துத் துணை செயல் சார்பு நூற்றெழி லென மொழிப.'' அதன் விளக்கத்தில் சொலலப் பட்டிருப்பதாவது:-

''முதனூல் வழி நூல் இரண்டும் நிஷ்காமியமாய் உண்மையை மாத்திரம் விளக்க வேண்டுமென்ற ஒரே கருத்துடைன. உண்மையை அறிதல் போதுமான ஆநந்தம் தருவதேனும், அவ் ஆநந்தம் தக்கோர்க்கன்றி யாவர்க்கும் அநுபவிக்கக்கூடிய தன்றாயும், மனிதர்களுடைய சுகவாழ்விற்குப் பற்பல சௌகரியங்கள் ஆவசியபட்டனவாயும் இருப்பதால், முன்சென்ற இருவகை நூல்களின் முடிவுகளைத்திரட்டி, அவை மனிதர் செய்து வரும் யாதேனும் ஒரு வகைத்தொழிலுக்கு உபயோகப்படும் படியாக அமைத்து, காரண காரிய விசாரங்களை ஒழித்து, உடன் அனுஷ்டிக்கத்தக்கதான விதி, விலக்கு வாக்கியங்களாக ஏற்படுத்தி, பயன்படும் ஒன்றையே கருதிப் பிரவர்த்திக்கும் நூல்களும் உள. அவற்றிற்கு சார்பு நூல்' என்று பெயர். மேற்கூறிய வற்றில் நூல் இலக்கணங்கள் இவற்றுள் பூரணமாய் அமைவதற்கு இடமில்லை என்பது தானே விளங்கலாம்.''

சார்பு நூல் வகைக்கு, தர்க்கம் தர்மம் சிற்பம், நாபிகம் (Navigation) தனுர் வேதம் ஆயுர்வேதம் முதலியவைகளை உதாரணங்களாகக் காட்டுகிறார். நமது தர்ம சாத்திரங்களைப் பற்றி உணர்ச்சியுடன் எழுதியிருப்பதாவது:- ''இப்படியே தரும சாஸ்திரமும் இந் நாட்டில் காயோய்ந்த மரமாக நிற்கின்றது. மிகவும் கெம்பீரமான இச்சார்பு நூற்கு மனிதர் செய்யும்சகல வினைகளும் எதன்பொருட்டு என ஆய்தலே தொழில், ஆதலால் புருடார்த்தமே இந்நூலின் விஷயம். பொதுமையிலும், கேவல விபாவனையிலும், இதனினும் சிறந்த சார்பு நூலில்லை. நன்மை தீமை எவை என ஆராய்தலே இந் நூலின் ஆரம்பம். இவ் ஆராய்ச்சி தத்துவ நூல் உள நூல் என்று இரண்டோடும் கலப்புண்டு நிற்கும். நன்மை தீமைகளை நிர்ணயம் பண்ணிக் கொண்டு, அவற்றுள் முன்னதை அடையவும் பின்னதை விலக்கவும் வேண்டிய மார்க்கங்கள், விதி, விலக்கு வாக்கியங்களாக ஏற்படுத்தப்படும். தரும நூலும், மத நூலும் மிகவும் ஒற்றுமையுடையன. நமது நாட்டில் இவை இரண்டும் பிரிவு பட்டதே இல்லை. எல்லா மனிதருக்கும் பொதுவான புண்ணிய பாவங்களை நிச்சயித்து

அவைக்கேற்ற ஆசார அனுஷ்டானங்களை விதிப்பதே நூலொழுங்குப் படி தரும சாத்திரத்திற்குரிய தொழிலாயினும், மதச் சார்பால் குற்றம் வருவதன்று. தருக்கம்; தருமம் இரண்டும் விசேடச் சார்பு நூல்கள், பிற இவை போல விரியும் பெருமையும் உடையன அன்று."

V

அப்புறம் அறிவின் மூன்றும் பெரும் பகுதியாகிய புலனறிவுக்கு வருகிறார். ஐந்து சூத்திரங்களில் விஷயத்தை அடக்கி அவற்றிற்கு விளக்கங்களையும் எழுதியிருக்கிறார் முதல் சூத்திரம் வருமாறு.

வாசனுவைபவங்கலையாமதுவும்
பொதுவுடன் யோகமென்றிரு கூறுகு
நற்கலை விகற்ப நணுகா வழியே

இதன் உரையில் அவர் சொல்லியிருப்பதாவது:- "இது காறும் மக்களின் இயற்கையறிவாம் அறியக்கூடிய பொது நூல்களின் இலக்கணம நிருபிக்கப் பட்டது. இரண்டற உணரும் நிருபாதிக ஞானமாகிய பேரறிவினின்றும் பிரிக்கும்படி இவ் இயற்கை அறிவை 'சிற்றறிவெ'னத் தாழ்த்தியும், சர உயிரின் இலக்கண சோதனையில் வெளிப்பட்ட புலனறிவினின்று பிரிப்பதற்கு 'தற்போத அறிவு' அல்லது 'போத அறிவு' என அதனை உயர்த்தியும் கூறப்பட்டது ...... இயல்பாக மனிதருக்குப் புலனறிவால் சாத்தியப் படுபவை சுருங்குமெனினும் தற்போத அறிவால் பலகால் செய்து பழகினவைகளை அவைகளில் சம்பந்தப்படும் புலனறிவால் மாத்திரம் பிற்பாடு நடந்தேறக் கூடியவையாக மாற்றுகின்ற ஒரு சக்தி உளது. இதற்கு 'வாசனை', 'பழக்கம்' எனப்பெயர்... இவ்விதம் போதவறிவோடு சில காலம் பழகிய வாசனுவைபவத்தால் விளையும் தொழில் யாவையும் 'கலை' எனக் கூறலாம் க..... கலைகளனைத்தும் கண்டு பழக வேண்டியவையேயன்றி வாக்கால் உபதேசிக்கத்தக்கதன்று மனுதிதமான பரம் பொருள் எப்படி மனிதரின் இயற்கையறிவாகிய போதவறிவிற்கப்பாற்பட்டு நிற்கின்றதோ, அப்படியே அதற்குக் கீழ்ப்பட்ட இயற்கையான புலனறிவும் செயற்கையான வாசனு விசேஷங்களும் வாக்கு மனங்களுக்கு அகப்படுவதில்லை க ....கலைகள் இடைவிடாப் பழக்கத்தாலேயே சாத்திய மாயினும், பழக வேண்டிய முறைமைகளையும் சாத்தியப் படுகின்ற பயனுக்கும் சாதனத்திற்கும் உள்ள சம்பந்தங்களையும், காரிய காரண விசாரணைக்கு இடமுள்ள மட்டும் ஆராய்தல் கூடியதாகவே இருக்கின்றது அவ்வித ஆராய்ச்சி 'கலை நூல்' என்று கூறத்தகும்."

பின்னர் ஆசிரியர் நற்கலைகளுக்கு இலக்கணம் வகுக்கும் சூத்திரம் இது.

கித சித்திரங்கவியாதிய பொதுவுண்
ணலநேர் பயத்தலினற் கலையென்ப

இதைப் பற்றி விவரிக்கிறார்:- "வேறொன்றைக்குறியாமல் நேரே சுகந்தரும் கலைகளுமுள. கானம் செய்வோன் தனக்கும் பிறருக்கும் அத்தொழிலாலே பிரத்தியட்சமாக சுகம் விளைத்தல் யாவரும் அறிவர். அப்படி நேரே இன்பம் தராத விஷயத்தில் கானம் என்னும் கலை ரேருப்பயனும் உடைய தன்றே. இப்படியே சித்திரம், நடனம், கமனம், முதலியனவும இவற்றையே சிறப்பு நோக்கி 'கலை' என உபசரித்தலும் 'நற்கலை' என அடைமொழியிட்டு அழைதலும் வழக்கம். (நற்கலை) இன்பங்களுக்கு, கூறிய இவ் விலக்கணமின்றி, வேறு ஒன்றிரண்டு விசேஷ குணங்களுமுண்டு. நற்கலைகளால் பிறக்கும் இன்பம் எத்தனை பேர்திரண்டனுபவிக்கினும் குறைவு படாது கண், காது என்ற உயர்ந்த புலன்களே இவற்றிற்குரியன. 'அழகு' என நாம் அநுபவிக்கும் யாவும் நற்கலை வகுப்பை ஆதரவாயுடையன. நற்கலைகளுக்குப் புலன் வாசனை யன்றி அழகினில் ஆனந்திக்கும் மனோதருமம் என்னும் அகக்கரண வாசனு விசேடமும் வேண்டியதுண்டு. "சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்" என்பது பழுதன்றேனும், கை, நாப்பழக்கங்கள் மாத்திரம் போதா என்பது யாரும் அறிவர். இந் நற்கலைகளைக் குறித்த கலை நூல், அந்தந்த நற்கலைத் தொழில்கள் சாத்தியப்படும் முறையை விவகரிக்கும். தாள, சமீபங்கள், இன்னதந்திரங்களால் சித்திரிக்கப்படுகின்றன என்பதாதியும், ஒலிகள் இன்ன இன்ன முறையாய் மாறுபட்டுப் புணர்ந்து பண் ஆகின்றனர் முதலியவையும், கவிநயம் இன்ன இன்ன சொற்பொருள் சோக்கைகளால் பிறக்கின்றது போன்றனவும், இவைகளைப் பற்றிய கலை நூல் வரன்

முறை ஆராயும். இக்கலை நூல்களைக் கற்றது கொண்டு, கலைகளில் தேர்ச்சி வரக் கூடிய தன்று, அவற்றில் கல்லாதார்க்கும் தேர்ச்சி வருவது எங்கும் சகஜம். ஆகையால் அந்தந்த கலைகளுக்கேற்ற ஞானேந்திரிய, கர்மேந்திரிய சாதுரியமே முக்கிய ஆவசியகம்''. மேலே கூறியதிலிருந்து 'ஃபைன் ஆர்ட்ஸ்' (Fine arts) என்ற நற்கலைகளின் அடிப்படையான தத்துவத்தை எவ்வளவு மதிநுட்பத்துடன் சுருக்கிக் கூறியிருக்கிறார் என்பது கவனத்திற்குரியது. இதே தத்துவத்தைப் பற்றி, கடந்த நூற்றாண்டிலும் அதற்கு முன்னரும், இந்த நூற்றாண்டிலும் நூற்றுக்கணக்கான விரிவான நூல்கள் ஆக்கப் பெற்றிருப்பது இலக்கிய வாணர்கள் நன்கு அறிந்த விஷயம்

முந்திய சூத்திரத்தில் புலனறிவால் விளையக் கூடியவைகளை கலை என்று கூறி, அதை நற்கலை, யோகம் என இரு கூறாகப்பிரித்திருக்கிறார். இது இன்றைய வாசகர்களுக்குச்சற்று விந்தையாகத் தோன்றலாம். ஊன்றிக்கவனித்தால் விந்தைக்கு இடமில்லை ஆசிரியர் ஆழ்ந்தகருத்து வளிமையுடன் இது சம்பந்தமான சூத்திரங்களை ஆக்கிவாதாடியிருக்கிறார். எப்படி பகவத்கீதையில் யோகம் என்ற சொல் ஒரு விரிந்த பொருளின் சொல்லப் பட்டிருக்கிறதோ, அதேபோல் அந்தச்சொல், இந்த நூலில் ஒரு தனிச் சிறப்புடைய கருத்தில் கையாளப் பெற்றிருக்கிறது. யோகத்தின் இலக்கணத்தை இந்த சூத்திரத்தில் ஆசிரியர் அமைத்திருக்கிறார்.

''இயற்கையும் பயிற்சியுமிணைந்திடக்கரணம் வியப்புறக்சில வழிவிரிந்து மற்றொருங்கல் சொலற்கரும் யோகமென்றுரைக்கவும் படுமே'' இதற்கு ஆசிரியரின் உரை தெளிவுடனும் உத்வேகத்துடன் இருப்பதுடன், அது இன்றைய நிலமைக்கும் பொருந்தக் கூடியதாயும் பொருளை ஒரு பொருட்டாகக் கொள்ளாத வெறும் இலக்கிய ரசிகர்களுக்குங்கூட இன்பம் பயக்கக் கூடியதாயும் இருப்பது நோக்கற்பாலது. அவர் கூறுகிறார்:- ''மேற்கூற வேண்டிய யோகக் கலைகளின் இயற்கை, முற்கூறியவைபோல், எடுத்துக் காட்டச்சற்றும் எளிதன்று. அவை, உளவோ, இலவோ என யாவராலும் சந்தேகிக்கத்தக்க அருமையை உடையன. கரகௌசலாதி சாதாரண கலைகளும், சங்கீதாதி நற்கலைகளும்போல அவை பொதுவாகப் பழகி வரக்கூடியதல்ல. ஆனால் பொதுக்கலைகளும், எந் நாட்டாராலும் ஒன்று போல அறிந்து பயிலுதற்கேற்றவையன்று என்பதும் வாஸ்தவமே. துப்பாக்கி சுட்ட ஒருவனைக்கண்டு, இவன் ஏதோ மின்னல் இடிகொண்டிழிந்த தேவனோ என்று சந்தேகித்தமலை மூடன் கதை, ஒரு தேசத்துள்ள சாதாரண கர கௌசல சாமர்த்தியம், மற்றொரு தேசத்தாருக்கு, அமானுஷ்யமாய் தோற்றத்தக்கபக்குவ வேறுபாடு மனிதருக்குள் உண்டென்பதை விளக்குவதல்லது வேறென்ன?.... ஆதலால் கர கௌசலாதி பொதுக்கலைகளும் பக்குவாறு சாரமாகச் சிற்சிலரால் பழகவும் அறியவும் கூடியவையன்றி, யாவர்க்கும் உரியது என்பது ஏகதேச வாக்கியமே ஒழிய பூரண உண்மையன்று''

''எல்லாகலைகளுக்கும் இவ்வாறு ஆவசியப் படுகின்ற பக்குவ நியமம், யோகக் கலைகளில் அதிகரித்து நின்று, அவற்றை ஆங்காங்கே சிற்சிலருக்கே உரித்தாக்கி, அவ்வருமையில் அக்கலைகள் உளவோ இலவோ என சந்தேகப்படச் செய்கின்றது. மேலும் இக்கலை பயில்வோர், தங்கள் அறியாமையாலோ, அல்லது வேறு காரணங்களாலோ, செய்து வரும் ஜாலங்களும், கூறிவரும் காரண காரிய நியமங்களும் இக்கலைகளுக்குப் பெருங்கேடு விளைவிக்கின்றன. யாதாவதொரு விருத்தாந்தத்தில், சிற்சிலபொய் மேற்படத் தோற்றுவதால் அது ஆதியோடந்தம் பொய்யென மதித்தல், பாசிபடர்ந்திருக்கும் ஏரியில் நீர் இல்லையென மதித்தலையொக்கும். அன்றியும், யாதாவதோரு தோற்றம், நமது கொள்கைக்கு விபரீதமாயிருப்பதனால், ஆராயாமல், அது பொய்யெனவும் ஜாலமெனவும் தீர்மானித்தல், நமது விஷய ஞானபிவிருத்திக்கு ஏககாரணமாயிருக்கும் அநுபவவழியை அடைக்கும் கல்லாக முடியும். எல்லாம் அறிந்தவர்கள் ஒருவரும் இல்லாத படியால், நமது அற்ப அனுபவத்திற்கிசையக் கொண்டிருக்கும் உலக இயற்கைக்கு விபரீதமென தோற்றுபவையாவும் இல்லை என ஒருதலையாய் நிராகரித்தல் தருக்க நியமத்திற்கு அடுத்ததன்று, இப்படி நியம

விரோதமாய்த் தங்கள் மனதிற்கு எட்டாதவைளெல்லாம், இல்லை என இறுமாந்து புதிதான தோற்றங்களை ஆராயாது விடுதல் ஒரு திறத்தார் குற்றம். ஆனல் இல்லையென மறுக்க ஏலாதவையாவும் உண்டென நம்புவதும் நியமானுசாரமன்று. ......இருக்கக் கூடியவை எல்லாம் இருக்கிறதெனத் துணிந்து பிரவர்த்திப்பவர்கள் பேரிடர்ப் படுவர் என்பது.

நில்லாவுலகில் நிலை நேர்மையினல்
வல்லாருமுணர்ந்திலர் மன்னுயிர்தாம்
பல்லாயிரகோடி பரந்துளவால்
இல்லாதென இல்லை இளங்கும'ரா'

என்ற துணிவால் இலக்குமண வாக்கியத்தை மறுத்துப் பொன்மானின் பின் சென்ற இராமமூர்த்தியே சான்ருக நின்றுகாட்டுவார். யோகக்கலைகளைப் பற்றி அபிப்ராயப் படுவதில் பெரும்பான்மையரும் மேற்கூறிய இரண்டு வழுக்களில் ஒன்றிற் சிக்குண்டு, தம்மனதிற்கேற்றபடி துணிந்து கொண்டவரன்றி, நூலொழுங்கின்படி சோதனை செய்தவர்களாகக் காண்பது அரிது''

இந்தப் பகுதியில் அக்காலத்தில் மேனுடுகளில் 'மெஸ்மெரிசம்' என்ற வசீகர நித்திரையைப் பற்றி நடந்து வந்த சோதனை விளைவுகளைப் பற்றிய வாதங்களை ஆசிரியர் விரிவாகக் குறிப்பிடுகிருர்; 'Mind' என்னும் விஞ்ஞானப் பத்திரிகையின் பல இதழ்களிலிருந்துமேற்கோள் காட்டுகிருர். அத்துடன் நமது முன்னேரின் யோக சாத்திரக் கொள்கைகளையும் செயல் முறைகளையும் ஆராய்ந்து, திருமூலர், கண்ணுடைய வள்ளலார், தாயுமானவர் முதலியோரின் பாடல்களை ஆதரவாகக் காட்டி விளக்குகிருர். யோகக்கலைகளின் மேல் சில கல்விமான்களிடமுள்ள விபரீதபாவனை நீங்குமானல் அதனல் விளையும் நூற்பயன் அனந்தம் என்கிருர். இன்று, நமது முன்னேர்கள் வளர்த்த யோகக்கலைகள் விஞ்ஞான அடிப்படையில்தான் அமைந்திருக்கின்றன என்றும், அதன் சில பகுதிகளை யோகாப்பியாசங்களின் மூலம் வாலிபர்களுக்கும் மாணவமாணவிகளுக்குப் போதிப்பதற்குப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்துவது அவசியம் என்றும், சென்னை கவர்னர் திரு. கே.கே.ஷா உள்படப் பலர் கூறி வருவதும், அதன்படி திருப்பதி போன்ற இடங்களில் பள்ளிகள் ஏற்பட்டிருப்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது.

VI

நூலின் முடிவாக இருக்கும் இரண்டு சூத்திரங்கள் பின்வருமாறு.

ஆனந்தமே யுருவாக்கிடும் ஞான
யோகமும் யோகத்தொரு நற்கலையே,
பேரறிவினருட் பிரசாதமாதலின்
ஞானமு மதமுடிவாமென நவில்ப

தத்துவ ஞானத்தில் தொடங்கிய நூல். அதே பொருளுடன் ஞான யோக விளக்கத்துடன் முடிகிறது. இது புலனறிவுப் பகுதியில் யோகக் கலைகளுடன் சேர்க்கப்பட்டிருப்பது பொருத்தமா என்று சிலர் கருதலாம். சுந்தரம் பிள்ளை நமது முன்னேர்களின் ஞானேபதேசத்தையே நல்கிய போதிலும், அதைப் புது முறையிலும் தற்கால பண்புடனும் ஆராய்ந்திருக்கிருர். கலைகளை நாடி வளர்ப்பது இன்பம் பெறுவதற்கு என்றல். பேரின்பத்தைத் தரும் பிரும்ம ஞானத்தையும் கடவுளின் அருளையும் நாடுவதும் ஒரு கலை என்று கொள்கிருர். ஞான யோகத்தைப் பயிலுவோர், அது தரும் பேரானந்தத்தைத் தவிர வேறு பிரயோசனம் யாதும் கனவிலும் கருதாதலால், ஏக தேச உவமை நோக்கி இதனை யோக நற்கலை என்று தான் கொள்வதாக, ஆசிரியர் பண்டிதப்பான்மையுடன் கூறுகிருர். இப்பகுதியில் அவர் வேதாந்த தத்துவத்தை நுட்பத்துடன் மீண்டும் விளக்குவதுடன், சமய சமரச மனப்பான்மையின் அவசியத்தையும் வற்புறுத்தியிருக்கிருர். தமது கருத்துக்கு முட்டுக் கொடுக்க திருவள்ளுவர் மாணிக்கவாசகர் நம்மாழ்வார் பட்டினத்தார், முதலியோரின் பாடல்களையும், ஒழிவிலொழுக்கம், அவிரோத உந்தியார், அஞ்ஞனவதைப்பரணி, மோக வதைப்பரணி அருட்பிரகாசம் சிவானந்த மாலை முதலிய நூல்களிலிருந்து சில பகுதிகளை தந்திருக்கிருர்.

கடைசி சூத்திரத்தின் விளக்கத்தில் அவர் சொல்லியிருப்பதின் ஒரு சிறு பகுதியாவது:- பொதுவாய் ஞானநிஷ்டையை அடைய விரும்புவோர் கலஇச்சைகளையும் நிறைவேற்று தலை குறியாக நிற்பர். ''இச்சையாம் விறகு

மாண்டால் எண்ணமாம் வன்னிமாயும்'' என்பது அவர் துணிபு. சத்கருமங்கள், ஈஸ்வர உபாசனை முதலியவற்றை அவர் செய்தலும் இச்சா நிவர்த்தியின் பொருட்டே. இதனையே நிஷ்காமிய தபசு என்று சொல்வர். இப்படிப் பரிசுத்தமாகிய உள்ளத்தோர்க்கு, இச்சா நிவர்த்தி உண்டாய் மனோலயம் அடையுங் காலைப் பரம் பொருளின் அருள் உதயமாகி, அவர்கள் தற்போதத்தையுண்டு, பிரிவற விளங்கி, ஆநந்தமே அவர் வடிவமாகச் செய்கின்றது. இம்மார்க்கங்களில் சிற்சில மத பேதங்கள் உளவெனினும், அவற்றுள் மொழி வேறுபாடன்றிப் பொருள் வேறுபாடில்லை என்பது அநுபூதிமான்களின் அவிரோத நிலைமை ......அவருள் இரு வழியும் அறிந்து அநுபவித்து அவற்றின் அபேதத்தை வெளியிட்டிருக்கின்றவரும் அநேகர் உளர். தங்கள் தங்களின் மதாநுஷ்டானங்களின் உட்கருத்துரைக்கத்தக்க சித்தசுத்தியும் மனவிரிவும் இல்லாதவர்கள், தாம் நடத்தி வரும் சடங்குகளையே மதகோட்பாட்டின் முக்கிய பொருளாக, மயங்கி அவைகளின் நிமித்தம், ஒருவரையொருவர் எதிர்த்து வீண் கூச்சலிட்டு ஓயாத சமயச்சச்சரவில் மூழ்குவதல்லாது, எவ்வழியேனும் உழைத்து, அருள்பெற்று உபசாந்தம் அடைந்த இந்நாட்டு அநுபூதிமான்கள் யாரும் தங்கள் அறிந்த எம் மதத்தையும் ஆதரவாகப் பாராட்டுவது வழக்கம். மத வாதங்களில் வழக்காடுபவரைக் குறித்து அவர்கள் பரிதபித்து நொந்து கூறும் சமாதான மொழிகள் கொஞ்சமல்ல அப்படியே வேறு நாடுகளிலும், பலநூற்றுண்டுளாக, அத் தேசத்தார்களுடைய பக்குவ விசேஷப்படி, அவர்களைச் சித்த சுத்தி பண்ணி உயர்த்திவந்திருக்கும் மதங்களையும், இந்நாட்டுள்ளோர் ஆதரவாகப் பரிசோத்தநில், அவைகளும் சங்கேதமொழி வேறுபாட்டால் மாறுபடுவனயேயன்றி, உண்மையாகப் பார்க்கில் ஞானயோக முடிவிற்குரிய ஒரு அங்கத்துள் அகப்படாதொழியா. மனக்கோட்டம் அற்றவர்க்கேயொழிய, மற்றவர்க்கு ஒன்றுக்கொன்று பகை போல் நடித்துத்திரியும் மதங்களின் உண்மையான நிலைமையும், அவற்றின் ஒற்றுமையும் விளங்குவதல்ல.; எடுத்துரைப்பினும் பயன்படுவதன்று.''

இதுகாணும் நூற்றெகை விளக்சத்தின் பொதுவான இயல்புகளையும்' சூத்திரங்களின் வாசகத்தின் மூலமும், அவற்றிற்கு ஆசிரியர் எழுதியிருக்கும் விளக்கங்கள் மூலமும் அதன் பொருளடக்கத்தையும் வரைந்திருக்கிறோம். நூலைப் பற்றிய ஒரு சுருக்கமான விமரிசனத்துடன இக்கட்டுரை முடிவுபெறும். இந்நூலைப் பற்றி முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்றுண்டு சுந்தரம்பிள்ளை ஒரு பெரிய விரிவான நூலை எழுதத்திட்டமிட்டு அதற்கு ஒரு அறிமுக முகவுரையாகவே இதை எழுதியிருக்கிறார் என்பது அவர் நூலின் முகவுரையில் கூறியதிலிருந்து தெரிகிறது எக்காரணத்தாலோ அவர் உத்தேசித்திருந்த பெரியநூல் உருவாகவில்லை. எனினும் இச் சிறு நூலே அவருடைய சிந்தனை வலிமையைக் காட்டுவதுடன், தனித்து நிற்கக்கூடிய பெருமையும் பெற்றிருக்கிறது.

இரண்டாவதாக ஆசிரியரை அவர் காலத்து மேனாட்டு தத்துவ, விஞ்ஞான மேதைகளின் நூல்களும் சிந்தனைகளும் கவர்ந்திருக்கின்றன. கடந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் இரண்டு கொள்கைகள் தத்துவ உலகில் தனியாட்சி புரிந்து வந்தன. சமயமும் விஞ்ஞானமும், முரண்பட்டு, என்றுமே சமரசத்துடன் இயங்கக்கூடாத இயல்புடைய வெவ்வேறு துறைகள் என்பது இவற்றில் ஒன்று சார்லஸ் டார்வினின் (Charles Darwin) பரிணாம வாதமும் (Law of Evolution) அதன் அடிப்படையில் எழுந்த பல்வேறு சமூக இயல் தத்துவங்களும். மற்றென்று இக்கொள்கைகளுக்குப் பல எதிர்ப்புகளும் இல்லாமல் இல்லை. சமயமும் விஞ்ஞானமும், ஒன்றுக்கொன்று விரோதமான, முரண்பட்ட அறிவு மண்டலங்கள் இல்லை என்று வாதித்தவர்களும் இருந்தார்கள். இவர்களில், டார்வினின் பரிணாமவாதத்தில் நம்பிக்கை வைத்த மேதை ஹக்ஸலி (T. H. Huxley) என்பவரும் ஒருவர். ஹெர்பர்ட்ஸ் பென்ஸர் (Herbert Spencer) என்றும் சமூக தத்துவமா மேதை, தாம் எழுதிய 'கல்வி' (Education) என்ற நூலில் ஹக்ஸ்லியின் கருத்தை மேற்கோளாகக் காட்டி அதற்கு ஆதரவும் ஒருவாறு தெரிவித்திருக்கிறார். சுந்தரம் பிள்ளையும் ஒரு சிறந்த தத்துவ ஞானி. நூற்

றுகை விளக்கத்தின் அமைப்பையும் பொருண்மையையும் ஊன்றிக் கவனித்தால், அவரும், சமயமும் விஞ்ஞானமும் முரண் பட்ட அறிவு மண்டலங்கள் அல்ல என்பதை யும், அவைகள் இணையக் கூடியவைதான் என்பதையும் காட்டுவதே நூலின் ஒரு நோக்க மாகக் கொண்டிருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம்.

நூற்றெகை விளக்கம், ஆங்கிலத்தில் 'ஒரிஜினல்வொர்க்' என்று கூறக்கூடிய முத நூல். அது சற்று கடினமான நூல்தான். இதற்கு ஆசிரியர் நூலுக்கு எடுத்துக்கொண்ட பொருள்தான் முக்கியமான காரணம். தமி ழில் விஞ்ஞானக் கருத்துக்களை எழுதவேண்டு மென்று ஆசிரியரின் திட்டம் மற்றொரு காரணம். இவ்வாறு தமிழில் எழுதுவதற்கு அவருக்குத் துணைபுரிய வேறு முன்மாதிரி நூல்கள் இல்லை. விஞ்ஞான சங்கேச் சொற் களுக்கும் சொற்றொடர்களுக்கும் தமிழ் வார்த்தைகளை அவரே சிருஷ்டிக்க வேண்டி யிருந்தது. இருந்த போதிலும், சூத்திரங்கள் செம்மையாயும் தெளிவாயும் ஆக்கப்பட்டிருப் பதுடன் அவற்றின் விளக்கங்களைச் சுமக்கும் தமிழ்உரை சக்தியுடன் அமைந்திருக்கிறது. அதில் காணப்பெறும் ஆசிரியரின் பல துறை களைச் சார்ந்த பரந்த அறிவும், தர்க்கவன்மை யும், நேர்மையான வாதப்பண்பும், ஊற் றெடுத்தாற் போலுள்ள சிந்தனைப் பெருக்கும் வியத்தற்குரியன. அவரே விஞ்ஞானத்துறை யில் தமிழ்ச் சொல்லாக்கத் தந்தையாகத் திகழ்கிறார் என்ற உண்மையைத் தமிழ் இலக் கிய உலகம் அறியவேண்டும். நூலின் பிற் சேர்க்கையாக, தாம் கையாண்ட தமிழ்ச் சொற்கள், சொற்றொடர்கள் ஆகியவற்றை சுமார் நூறு எண்ணம் வரையும், அவற்றிற் குரிய ஆங்கிலத் தொடர்களையும் ஒரு அட்ட வணையில் கொடுத்திருக்கிறார். வாசகர் களுக்குத் தமது நூலைப் புரிந்துகொள்ள உதவிசெய்ய. இவற்றில் பல இன்றும் ஏற்று க்கொள்ளத்தக்கவை.

நூற்றெகை விளக்கத்தின் தமிழ் வசன நடை பல நயங்களை உடையது. ஆசிரியர் உவமைகளைத் தாராளமாகக் கையாண்டு விளக்கும் இடங்கள் எல்லாவற்றிலும் கவி தைச் சுவையும் விளங்குகிறது. நூலின் நடை யிம் வட மொழிச் சொற்கள் சற்று அதிக மாகவே அமைந்திருக்கின்றன. பொருளின் தன்மையில விளைந்த அவசியம்தான் இதற்கு முதற்காரணம். அவர் காலத்தில், வட மொழிச் சொற்களை ஒதுக்கி விட்டுத் தான் தமிழ்ப் பற்றுடையவர்கள் தமிழ் எழுதவேண் டும் என்று இன்று பல தமிழ்ப்புலவர் கொண் டிருக்கும் கொள்கை பிறந்திராதது மற்றொரு காரணம். பிறந்திருந்தாலும் அவர் ஏற்றுக் கொண்டிருக்க மாட்டார். அவரைத் தமிழ் பற்றில்லாதவர் என்று சொல்ல எவரும் துணிய மாட்டார்கள். ஏனென்றல் 'மனேன் மணிய'த்தில் காணப்பெறும் சற்று அதீத மான தமிழ்ப் பற்றைக் காட்டும் 'தமிழ்த் தாய் வணக்கம்' என்பதைவிட வேறு என்ன சான்று வேண்டும்? இன்று வாழும் ஆயிரக் கணக்கான தமிழ் எழுத்தாளர்களின் நடை அவரவர்கள் பயிற்சி, மனோபாவம், எடுத்துக் கொண்ட பொருளின் தேவை முதலிய வற்றைப் பொறுத்திருப்பதால், அவர்களை நிர்பந்தப்படுத்தித் தனித் தமிழ் நடையையே அநுஷ்டிக்க வேண்டும் என்னும் கொள்கை வெற்றிபெறுது. ஆசிரியர் சுந்தரம்பிள்ளை மலையாள நாட்டில் வாழ்ந்ததால் அந்நாட்டுப் பேச்சு வழக்குகள் அவர் நூலில் காணப் பெறுகின்றன. 'விவரிக்கில்', 'சோதிக்கில்' 'ஆவசியகம்' போன்ற சொற்கள் இதற்கு உதாரணம். இது இயற்கையாதலால் குற்ற மாகக் கருதுவதற்கில்லை.

மேனாட்டுத் தத்துவ மேதைகளின் பல கருத்துக்கள் இவரைக் கவர்ந்திருந்த போதி லும் அவருடைய சமயப் பற்றும், பாரத நாட்டுத் தத்துவ அறிவின் மீதுள்ள ஈடுபாடும் கொஞ்சங்கூட அசைவு பெறவில்லை. 'மனேன் மணீய'த்திலிருந்தும் இது துலங்குகிறது. எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும், தமிழ்- விஞ்ஞான இலக்கியத்தின் முதல் நூலாயும், முன்னேடி நூலாயும் இருக்கும் நூற்றெகை விளக்கத்தின் ஏற்றம் விளங்கும். இதற்கு ஒரு நல்ல பதிப்பு அவசியம்; தக் கோரைக்கொண்டு வெளியிட வேண்டியது தமிழ்ப் ப ற்றுடையவர்களின் கடமையாகும்.

**REFERENCES**

1 His (Sundaram Pillai's) Nurrohavilakkam which is an admirable introduction to the study of Sciences is a model work in Tamil prose, which deserves to be better known and appreciated. (K.G Sesha Aiyar. 1909)

2 The following essay (Nurrohaivilakkam) aims at giving in Tamil the chief features of the modern sciences to-gether with a classification of the departments of knowledge, as conceived by me. It is published in the hope that it will be found useful as an attempt, however humble, in the way of expanding the capacity of the Tamil language as a vehicle of Scientific thought (Preface P. Sundaram Pillai 1888)


---

# சோழர் கல்வெட்டுகளில் யாண்டு இதனெதிராமாண்டு

நடன காசிநாதன், பதிவு அலுவலர், தொல்பொருள் ஆய்வுத்துறை தஞ்சாவூர்

[இந்தியக் கல்வெட்டுக்களில் ஆண்டுகளைப் பலவாருகக் குறிப்பிடுகிருர்கள் ஐரோப்பியக் கல்வெட்டுக்களில் கிறிஸ்து அப்தத்திற்குப் பிறகு எல்லா நாடுகளிலும், எல்லா மொழிகளிலும் கி.பி. என்றே குறிப்பிடுகிருர்கள். எனவே கல்வெட்டின் காலத்தை எளிதில் அறிந்து கொள்ள முடிகிறது. இந்தியாவில் பிரதேச வேறு பாட்டாலும், மொழி வேறு பாட்டலும் பலவகையான சகாப்தங்கள் வழக்கிலிருந்து வந்துள்ளன. சகாப்தங்கள் தவிர மன்னர்களே ஆட்சியாண்டுகளைக் குறிப்பிட்டு சாசனங்கள் பிறப்பித்துள்ளனர். ஒரே பரம்பரையில் பல மன்னர்கள் ஒரே பேருடையவர்களாக இருப்பதால், மன்னர்களுடைய பரம்பரை வரலாற்றிலும், அவர்கள் காலத்தில் வாழ்ந்த புலவர்கள் வரலாற்றிலும் குழப்பங்கள் விளைந்துள்ளன. எனவே சகாப்தங்கள் பற்றியும், ஆட்சியாண்டு பற்றியும் வரலாற்றில் கால முறைமையை அறிய விரும்புவர்கள் அறிந்து கொள்ளவேண்டும். இத்தகைய தெளிவை ஏற்படுத்தும் ஒரு முயற்சியாக ஆய்வாளர் நடன. காசிநாதன் அவர்களது கட்டுரை உள்ளது] (நா.வா.

### ஆண்டு குறிப்பிடும் பழக்கம்:

ஒரு நிகழ்ச்சி எப்பொழுது நிகழ்ந்தது என்பதைக் கணக்கிட்டு குறிப்பிடும் பழக்கம் இந்தியாவில் கி.மு. 6-ஆம் நூற்ருண்டிலிருந்து இருந்து வந்திருக்கிறது. அக்காலத்தில் குறிப்பிடத்தக்க வகையில் நிகழ்ந்த எதாவது ஒரு நிகழ்ச்சியை மையமாகக் கொண்டு அந்நிகழ்ச்சி நடந்து முடிந்த இத்தனுவது ஆண்டு என்று குறிப்பதை வழக்கமாக முதன் முதலில் பெற்றிருந்திருக்கிருர்கள் என்பதை மகாவீரர் நிர்வாணம் அடைந்து இத்தனுவது ஆண்டு என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்தும்[1] புத்தர் நிர்வாணம் அடைந்து இத்தனுவது ஆண்டு என்று தெரிவித்திருப்பதிலிருந்தும்[2] தெரிந்து கொள்ள முடிகிறது.

### ஆட்சி ஆண்டு புகுத்தப்பட்ட காலம்:

நாளடைவில், பெரும் பேரரசர்கள் எந்த ஆண்டிலிருந்து அரசாளத் தொடங்கினர்களோ அந்த ஆண்டிலிருந்து இத்தனுவது ஆண்டில் இந்த நிகழ்ச்சி நடைபெற்றது என்று குறிப்பிடுவது ஆரம்பமானது. இவ்வழக்கம் கி.மு. 3-ஆம் நூற்ருண்டிலிருந்து தொடங்கப் பெற்றிருக்கிறது. இவ்வழக்கம் இந்தியாவில் ஏற்பட்டதற்குக் காரணம் இந்தோ-கிரேக்க மன்னர்களால் ஏற்பட்ட தொடர்பாக இருக்கலாம். இப்பழக்கம் முதன் முதலில் மௌரியப் பேரரசன் அசோகனின் (கி.மு. 273-232) கல்வெட்டுகளில் காணப்படுகிறது.[3]

### பலவகை ஆண்டு முறை:

காலப் போக்கில் பலவகையான ஆண்டு முறை இந்தியாவில் நிலவியிருக்கிறது. உதாரணமாக விக்ரம ஆண்டு முறை[4], குப்த ஆண்டு முறை[5], களச்சூரி ஆண்டு முறை[6], கலி ஆண்டு முறை[7], சக ஆண்டு முறை[8], கொல்லம் ஆண்டு முறை[9], பிரபவ, விபவ ஆண்டு முறை[10], ஆகியவைகளைக் காட்டலாம். கொல்லம் ஆண்டைத் தமிழ் ஆண்டு என்று ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது.

### ஆட்சியாண்டு:

மேற் கூறப்பட்ட ஆண்டு முறைகளும் வழக்கத்தில் இருந்தாலும் அதிக அளவில் அரசன் ஆட்சிக் கட்டில் ஏறியதிலிருந்து கணக்கிடும் முறைதான் கல்வெட்டுகளில் கையாளப் பட்டிருக்கின்றன. இவ்வாண்டு முறையை வடமொழியில் ''ராஜ்யவர்ஷம்''[12] என்றும் தமிழில் ''செங்கோல் பற்றியாண்டு''[13] என்றும் ஒரு செப்பேடும், ஒரு கல்வெட்டும் முறையே புலப்படுத்துகின்றன. அரசனின் ஆட்சி

ஆண்டைக் குறிப்பிடுவதிலும் தமிழகத்தில் ஒரு புதுமையைக் கையாண்டிருக்கிறார்கள், ஆன்றோர்கள். அதாவது ஒரு ஆண்டைக் குறிப்பிட்டு அதற் கெதிராமாண்டு என்று வழங்கப்படுவதாகும். எதிராமாண்டு என்பது எதிர்வந்த ஆண்டு என்பதின் குறுகிய வடிவமாக இருக்கலாம். ஏனெனில் அவ்வாறு எதிராமாண்டு இன்னது என்று குறிக்கப்பட்டிருப்பதைக் கூட்டித்தான் கணக்கிடப்படவேண்டும் என்பதை வேறொரு கல்வெட்டால் அறியப்படுவதிலிருந்து ஆகும்.[14]

யாண்டு எதிராமாண்டின் தொடக்கம்:

இந்த ஒருமுறை பெரும் அளவில் பாண்டியர்களால் கையாளப்பட்டு வந்திருக்கிறது. தமிழ் நாட்டில் ஆட்சி புரிந்த பிற குல மன்னர்களான பல்லவர்[15], கேரள மன்னர்,[16] யாதவ மன்னர்[17], சோழர்[18] ஆகியோர் இம்முறையைச் சிறு அளவில தங்கள் கல்வெட்டுகளில் எடுத்தாண்டிருக்கின்றனர். பெரும் அளவில் பயன்படுத்திய பாண்டியர்கள் இம்முறையை எங்ஙனம் உருவாக்கினார்கள் என்று ஆராய்கையில் அவர்களுக்கு முன்னமேயே இம்முறை இந்தியாவின் சில பகுதிகளில் பயன்படுத்தப்பட்டிருந்தமை தெரிய வருகிறது.

சாதவாகன மன்னர் கௌதமபுத்ர ஸ்ரீசாதகர்னி (கி.பி. 80-104) நாசிக் குகைக் கல்வெட்டில் ஆட்சி ஆண்டு 10+8 என்று குறிக்கப்பட்டிருக்கிறது.[19]

ருத்ரதாமன் காலத்திய (கி.பி. இரண்டாம் நூற்றாண்டு) ஜுனகத் பாறைக் கல்வெட்டில் 70+2 என்று ஆட்சி ஆண்டைக் காணமுடிகிறது.

வாகடக மன்னன் ப்ரவரசேனன் காலத்திய (கி.பி. மூன்றாம் நூற்றாண்டு) கல்வெட்டு ஒன்றில் 10+8 என்று ஆட்சி ஆண்டு காணப்படுகிறது.[20]

முதன் முதலில் யாண்டு எதிராமாண்டைப் புகுத்தியவர்கள்

எனவே, முதன் முதல் இம்முறையை இந்தியாவில் புகுத்தியவன் சாதவாகன மன்னன் கௌதமி புத்ர ஸ்ரீசாதகர்ணி என்று அறியலாம். அவர்களைத் தொடர்ந்து சகவமிச மன்னன் ருத்திரதாமன், வாகடக மன்னன் ப்ரவரசேனன் ஆகியோரும் இம்முறையைப் பயன் படுத்தியிருக்கின்றனர். அதற்குப் பிறகு இம்முறை தமிழ் நாட்டில் பாண்டியர்களால் கையாளப்பட்டிருக்கிறது பாண்டியர்களின் தொடர்பினால் தமிழ் நாட்டில் ஆட்சி புரிந்த பிற குல மன்னர்களும் இம்முறையைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். குறிப்பாக சோழ மன்னர்கள் யார் யார் இம்முறையைப் பயன் படுத்தியிருக்கின்றனர், எந்தப் பகுதியில் இம் முறை அவர்களால் கையாளப்பட்டிருக்கிறது என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

முதலாம பராந்தகன்

சோழர்களில் முதன் முதலில் இம்முறையைக் கையாண்டிருப்பவன் முதலாம் பாரந்தகன் ஆவான். இவன் கி.பி. 907 முதல் 945 வரை ஆட்சி புரிந்தவன். தஞ்சை மாவட்டத்தி திருவையாற்றுக்குப் பக்கத்தில் உள்ள தில்லைஸ்தானத்து திருநெய்யாடியப்பர் கோயிலின் உண்ணாழியின் தெற்குச் சுவரில் காணப்படும் முதலாம் பராந்தகனின் கல்வெட்டு,[22]

ஸ்வதிஸ்ரீ மதிரை கொண்ட கோப்பரகேசரி பன்மற்கு யாண்டு நூயரு ஆவதுஎதிராமாண்டு............' என்று தொடர்ந்து செல்கிறது. இக்கல்வெட்டு முதலாம் பராந்தகனின் முப்பதாறும் ஆட்சி ஆண்டைக் குறிப்பதாக இருக்கிறது.

அரிஞ்சயன்

பராந்தகனின் மைந்தர்களில் ஒருவனை அரிஞ்சயனும் இம்முறையை எடுத்தாண்டிருக்கிறான். தஞ்சை மாவட்டம், நன்னிலம் வட்டத்தில் உள்ள திருவீழிமிழலை வீழிநாதசுவாமி கோயிலில் சுந்தரகுச்சாம்பாள் சந்நிதியின் தூண் ஒன்றில் காணப்படும் கல்வெட்டு[23]

'கோப்பரகேசரி பஞ்மர்க்கு யாண்டு உ ஆவதின் எதிராமாண்டு.........' என்று குறித்துச் செல்கிறது.

இக்கல்வெட்டு விஜயாலயனைச் சார்ந்தது என்று முன்பெல்லாம் கருதப்பட்டது.[24] ஆனால் இப்பொழுது இது அரிஞ்சயனைச் சார்ந்தது

என்று கருதப்படுகிறது. அன்னனின் மூன்றும் ஆட்சியாண்டில் இக்கல்வெட்டு எழுதப்பட்டதாகத் தெரிகிறது.

உத்தம சோழன்

சைவ சமயத்துக்கே தங்களை அர்ப்பணித்துக் கொண்ட சைவப் பழங்களான கண்டராதித்த சோழரைத் தந்தையாகவும் செம்பியன் மாதேவியாரைத் தாயாராகவும் கொண்ட உத்தம சோழரும் தம் கல்வெட்டில் இம்முறையைக் கையாண்டுள்ளார்

தஞ்சை மாவட்டத்தில் அய்யம்பேட்டைக்கு அருகில் உள்ள புள்ள மங்கைபிர்மபுரீஸ்வரர் ஆலயத்துக் கல்வெட்டு[25] ஒன்றில்

'கோப்பரகேசரிபன்மற்கி யாண்டு உ ஆவதின எதிராமாண்டு...........' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இக்கல்வெட்டின் நடுப்பகுதியில் காணப்படும் கோள் நிலைகளைக் கருத்தில் கொண்டு பார்க்கையில் இக்கல்வெட்டு உத்தம சோழரின் காலத்தியதாகத் தெரிகிறது. எனவே, உத்தம சோழரின் மூன்றும் ஆட்சி ஆண்டில் இது பொறிக்கப்பட்டதாகக் காணப்படுகிறது.

மூன்றும் இராஜராஜன்:

உத்தம சோழனுக்குப் பிறகு ஆண்ட சோழ மன்னர்களில் மூன்றும் இராஜராஜன் காலத்தில் தான் திரும்பவும் இம்முறையைக் காண முடிகிறது. தஞ்சை மாவட்டம் வேதாரண்யத்தில் உள்ள வேதபுரீஸ்வரர் கோயிலில் காணப்படும் இரு கல்வெட்டுகளில் இம்முறை பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்விரு கல்வெட்டுக்களும் மூன்றுன் இராஜராஜன் காலத்தியவை. ஒன்று,

'திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜராஜ தேவற்கு யாண்டு ஏழாவதின் எதிராமாண்டு.........'[26] என்றும்,
மற்றொன்று

'திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜராஜ தேவற்கு யாண்டு இருபத்தொன்பதாவதின் எதிராமாண்டு... ...[27]' என்றும் எழுதப்பட்டுள்ளன.

திருச்சி மாவட்டம் திருவானைக்காவில் உள்ள ஜம்புகேஸ்வரர் ஆலயத்து மூன்றும் திருச்சுற்று மதிலின் தெற்குச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ள மூன்றும் இராஜராஜனின் ஆறு கல்வெட்டுகள்

'ஸ்ரீதிரிபுவன சக்கரவர்த்திகள் ராஜராஜ தேவற்கு யாண்டு பதினறு எதிராமாண்டு... ... .'[28] என்று தெரிவிக்கின்றன.

மூன்றும் இராஜேந்திரன்:

மூன்றும் இராஜராஜனை அடுத்து அரசு கட்டிலேறிய மூன்றும் இராஜேந்திரனும் தம் ஆட்சிக் காலத்தில் இம்முறையைப் பயன்படுத்தியிருக்கிறுன். திருவரங்சத்திலுள்ள ஸ்ரீரங்கநாதர் ஆலயத்துக் கல்வெட்டொன்று[29]

மாமஸோமீஸ்வர ப்ரதிகுல கால தண்ட திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு ஏழாவதின் எதிராமாண்டு...... ..' என்று தொடர்ந்து செல்கிறது. இக்கல்வெட்டு மூன்றும் இராஜேந்திரன் காலத்தியக் கல்வெட்டொன்று உறுதி செய்யப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் அம்மன்னனின் 8-ஆம் ஆட்சி ஆண்டு தெரியப் படுத்தப்பட்டுள்ளது.

கல்வெட்டுகள் கிடைத்துள்ள பகுதி

மேற் கூறப்பெற்ற சோழர் கல்வெட்டுக்கள் அனைத்தும் தஞ்சை மாவட்டத்திலும் தஞ்சை வட்டத்தை ஒட்டியுள்ள திருச்சி மாவட்டத்திலுமே காணப்படுகின்றன.

அவ்வாறு காணப்படுவதற்குக் காரணம்:

இக்கல்வெட்டுகள் சோழர் ஆட்சியில் இரண்டுகுறிப்பிட்ட காலக்கட்டத்தில் காணப்படுகின்றன முதலில் பராந்தகன் காலத்திலிருந்து உத்தம சோழன் காலம் வரையிலும், பின்னர் மூன்றும் இராஜராஜன் காலம் முதல் மூன்றும் இராஜேந்திரன் காலம் வரையிலும் கிடைத்துள்ளன. சங்க காலப் பாண்டியர்களை அடுத்து ஆட்சி புரிந்த கடுங்கோன் முதலாக உள்ள பாண்டிய மன்னர்கள் கி பி. 10-ஆம் நூற்றுண்டு வரை ஆட்சி புரிந்திருக்கின்றனர். குறிப்பாகப் பராந்தகன் காலத்திலும்

அரிஞ்சயன், உத்தம சோழன் ஆகியோர் காலத்திலும், பாண்டியர்கள் சோழர்களுக்குப் பெரும் இடையூருக இருந்திருக்கின்றனர் [30] சிலசமயங்களில் பாண்டிய மன்னனுல் சோழன் வீழ்த்தவும் பட்டிருக்கிருன்.[31]. அந்தச் சமயத்தில் பாண்டியர்கள் பயன்படுத்திய ஆண்டு முறையை சோழர்களும் பயன்படுத்துவது இன்றியமையாததாக இருந்திருக்கலாம்.

பின்னர் முதலாம் இராஜராஜன் காலத்திலிருந்து மூன்ரும் இராஜராஜன் காலம் வரை சோழர்களின் ஆதிக்கம் தமிழகமெங்கும் நீக்கமற நிறைந்திருந்தது. பாண்டியர்கள் நிர்மூலமாகப்பட்டு விட்டனர். ஆனல் மூன்ரும் இராஜராஜனின் காலத்தில் திரும்பவும் பாண்டியர்கள் தலையெடுக்க ஆரம்பித்து விட்டனர். சோணுடு கொண்டருளிய முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் தம் காலத்தில் தஞ்சையையும் உறந்தையையும் செந்தழலுக்கு உள்ளாக்கினுன் என்று அவனது கல்வெட்டுச்கள் கூறும். அவனையடுத்து ஆட்சிக்கு வந்த 'எல்லாந்தலையாளுன்' என்ற பட்டம் பூண்டிருந்த சடாவர்மன் சுந்தரபாண்டியனும் பெரும் பேரரசனுக விளங்கியிருக்கிருன். இவர்கள் இருவரின் காலத்திலும் சோழ நாட்டில் ஆட்சி செய்தவர்கள் மூன்ரும் இராஜராஜனும் மூன்ரும் இராஜேந்திரனும் ஆவர். எனவே, அவர்கள் தங்கள் கல்வெட்டுக்களில் பாண்டியர்கள் பயன்படுத்திய ஆண்டு முறையைக் கையாள வேண்டியது இன்றியமையாததாக இருந்திருக்கலாம்.

குறிப்புகள்

1 இம்முறையை வீர நிர்வாண சம்வத் என்று சமண சமய நூல்களான விசாரஸ்ரேணியும் மஹாவீரசரியமும் தெரிவிக்கின்றன.

2. The Chinese Pilgrim Fahien who came to India in 399 A.D. mentions 1497 years as having passed after the Buddha's death.

3. The Girnar version of Rock Edict III; The Rampurva version of the Fifth Pillar Edict.

4 கி.மு. 57-ல் ஆரம்பமாகியது.

5 கி.பி. 319-ல் ஆரம்பமாகியது.

6 கி.பி. 248-49ல் ஆரம்பமாகியது.

7 கி.மு. 3101-ல் ஆரம்பமாகியது.

8 கி.பி. 78-ல் ஆரம்பமாகியது.

9 கி.பி. 824-25-ல் ஆரம்பமாகியது.

10 கி.பி 14-15-ஆம் நூற்ருண்டில் ஆரம்பமாகியது.

11. T.A.S. Vol. VI, No. 38

12 சின்ன மனூர் பெரிய செப்பேடு, வரி 146

13. S. I. I. Vol. XIX, No. 136

14. Ibid. Vol. III, part IV, No. 206

15. Epi. Indi. Vol. XX, No. 3. P. 16

16. Cochin plates, No. II of Epi. Indi. Vol. III.

17. S. I. I. Vol. IV. No. 287

18. A. R. E. No. 32 of 1937 - 38

19. Bulletin of the Institute of Traditional culture, Madras, Part I, Section II, P. 64.

20. Bulletin of the Institute of Traditional culture, Madras, part , Section II, p. 65

21. Ibid p. 67

22. S. I. I. Vol. V. No. 600

23. S. I. I. Vol. XIX, No 46.

24. M E. R. for 1909, part II, Para 35

25. S. I. I. Vol XIX, No. 63

26. Ibid. Vol. IV, No. 542

27. S. I. I. Vol. IV, No. 542

28. A. R. E. Nos. 32—37 of 1937—38

29. S. I. I. Vol. IV, No. 512

30 பராந்தகனுக்குப் பெரும் இடையூருக இருந்த பாண்டிய மன்னன் வரகுணன் மீது போர் தொடுத்து அவனை வெற்றி கொண்டபோது வரகுணன் இலங்கைக்குத் தனது முடியையும் சின்னங்களையும் எடுத்துச் கொண்டு ஓடிவிட்டதைக் குறிப்பிடலாம்.

31 சோழன் தலைகொண்ட வீரபாண்டியனுல் ஆதித்த கரிகாலன் தோற்கடிக்கப்பட்டதை எடுத்துக் காட்டலாம்.

# பெரிய புராணத்தில் கற்பு, பக்தி மதிப்பு மாற்றம்

உ. மீனுட்சி சுந்தரம்

காலத்துக்குக்காலம் சமுதாயத்தில் சிறந்ததெனக்கருதப்படுகின்ற மதிப்புக்கள் மாற்றம்பெறுகின்றன. அதற்குக் காரணம் சமுதாய வாழ்க்கையில் தோன்றுகிற அடிப் படை மாற்றங்களுக்கு ஏற்பமனதில் தோன்றுகின்ற மதிப்புகளும் மாறுகின்றன. பெரிய புராண காலத்திற்குப் பின் பெண்மையின் சிறந்த மதிப்பாகக் கருதப்பட்டது கற்பு என்பது பெண்ணை வருணிக்கும் அடை மொழிகளில் கற்பைச் சேர்த்து வழங்குவதி லிருந்து அறிகிறோம். உதாரணமாக''நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்'' கற்பும் காமமும் நற்பாலொழுக்கமும்,'' 'கற்பினின் வழாஅ ''கற்புக் கடம்பூண்ட' என்ற தொடர் கள் மேற் கூறிய கருத்திற்குச் சான்றுகள், சிலப்பதிகாரத்தில் புகார் நகரத்து கற்புடைப் பெண்டிர் எழுவர் கதைகள் கூறப்படுகின்றன. திருவள்ளுவரும்'' தெய்வம் தொழாள் கொழுநற்றொழு தெழுவாள்'' என்று கூறினர். பெரிய புராண காலம் பக்தி வெள்ளத்தில் தமிழக மக்கள் மூழ்கிய காலம். அதாவது இக்காலத்தில் மாபெரும் மதிப்பு மாற்றங்கள் ஏற்பட்டன. எல்லாவற்றிற்கும் சிறந்ததாக பக்தி உயர்த்தப்படுகிற பொழுது பெண் ணின் சிறந்த பண்பாகப் போற்றப் பட்ட கற்பும் கூட தனது முதலிடத்தை இழந்து பக் திக்கு வழி விடுகிறது. சிவனை சிவனடியார் மூலம் வழிபடுதல் சிறப்பானது என்ற கருத்து பிரச்சாரம் செய்யப்பட்ட காலத்தில் கணவனை விட உயர்ந்த தெய்வமாக சிவனடியார் களைப்போற்ற வேண்டும் என்றபுதிய மதிப்பு தோன்றியது. இந்தமதிப்பு மாற்றம் தோன் றிய விதத்தினைப் பெரிய புராணக் கதைப் பெண்டிரது கதைச் செய்திகளை ஆராய்ந்து ஆய்வாளர் உ. மீனுட்சி சுந்தரம் பெண்டிர்க்கு, கணவனை தெய்வமாகத் தொழும் கற்பை விட அடியார் விருப்பத்தை நிறைவு செய்து அவர்களைத் தொழும் பான்மையே சிறந்த தென்று கருத்துலகின் மதிப்பு நிலை கீழ் மாற்றம் பெறுவதை இக் கட்டுரையில் விளக்கியுள்ள பெரிய புராணக் கதைப் பெண்டிர் அக்காலத்திற்கு முந்திய இலக்கியப் பெண்டிரினின்றும், பிரதானமான பண்பில் வேறுபடுகிருர்கள்

(நா. வா.)

தொல் காப்பியர் அகத்திணையியலைக்கள வியல் கற்பியல் என்று இரண்டாகப் பிரித் துள்ளார். களவு வாழ்க்கைக்குப் பின் கற்பு வாழ்க்கைத் தொடங்கும் என்பார். கற்பிய லின் தொடக்கத்தினைக்

''கற்பெனப் படுவது கரணமொடு புணராக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள்
வதுவே'' என்று தொடங்குகின்றார் அதாவது இல் வாழ்க்கையின் தொடக்கத்தினையே கற்பு வாழ்க்கையின் தொடக்கம் என்று கூறி யுள்ளார். திருமணச்சடங்கின் போது,

''மூது செம் பெண்டிர் ............
புதல்வர்ப் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோர் பெட்கும் பிணையை யாகென''[2]
வாழ்த்துவர்.

புதல்வர்களைப் பெற்றநான்கு முதியபெண்கள் மணமகளிடம், கற்பினில் வழுவாமல் வாழ்க! பெற்றோர் விரும்பும் குணங்களோடு வாழ்க! என்று வாழ்த்துவது வழக்கம். இதுவே கற்பு வாழ்க்கையின் தொடக்கமாகும்,

ஒருபெண்ணிற்கு இருக்கவேண்டிய குணங்கள் இவையென்று கூறவந்த தொல்காப்பியர்,

''கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்''[3]
என்று கூறியுள்ளார்.

இல்லற வாழ்க்கையில் புகுந்த பெண்டிர்க் குரிய பண்புகளே இவையென இப்படிக்கூறி யுள்ளார்.

''நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்''[4]
''நாணலது இல்லாக் கற்பின் வாணுதல்''[5]
''பெண்மை சான்று பெருமடம் நிலைஇக்
கற்பிறை கொண்ட கமழுஞ் சுடர் நுதல்''[6]

என்று இவைபோன்று வரும் சங்கப் பாடல் அடிகளிலிருந்து பெண்மைப் பண்பு

களாகிய நாணம் மடம் கலந்த இல்லறத்தி திலீடு பட்ட பெண்பால் ஒழுக்கமே கற்பு என்பதாகச் சங்கப் புலவர்கள் கருதியதாகக் கொள்ளுவது ஏற் புடைய தேயாகும். இப் பண்புகளேயே பிற் காலத்து நிகண்டு நூல் களும் பெண்பால் ஒழுக்கங்களாக அறிவுறுத் தின,

''நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்றின்ன மாணிழையவர்க்கு வருங் குணம் நரல்கே'' என்று பிங்கலந்தை நிகண்டு பேசுகின்றது.

நிலங்களைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று நான்காகப் பகுத்து அவற்றிற்குரிய ஒழுக்கம் இன்ன தென வரை யறுக்கும் பொழுது முல்லைக்கு இல்லிருத்தல் வகுக்கப் பட்டுள்ளது. கற்பு ஒழுக்கத்துடன் கணவன் போருக்காகவோ பொருளுக்கா வோகபிரிந்த காலத்தில் இல்லத்தில் கணவன் வருகைக்காக்காத்து இருப்பது முல்லை நிலத்து ஒழுக்கம் என்று கருதப் பட்டது. அதனுல் கற்பினை முல்லை சான்ற கற்பு என்றனர்.
''முல்லை சான்ற கற்பின்[7]
மெல்லியற் குறு மகள் உறைவின்னூரே''
''முல்லை சான்ற கற்பின் மெல்லியல்''[8]
என்று சங்க இலக்கியங்கள் கற்புடையப் பெண்டிர்க்கும முல்லை நில ஒழுக்கத்திற்கும் இடையே விளங்கிய தொடர்பைப் புலப்படுத்தி யுள்ளன. ''என்னுடைய இளமையைப் பற் றியும் எண்ணுமல் செல்வம் சேர்ப்பதையே நறிக்கோளாகக் கொண்டு என்னை விட்டுப் பிரிந்து சென்ற என் தலைவர் இன்னும் இங்கு வரவில்லை என்பதறிந்து கார் என்ற பெண் தன் முல்லை மலர் என்ற பற்களைக் காட்டி என்னைப் பார்த்துச் சிரிக்கின்ருள் பார்''[9] என்று வருவன போன்ற பாடல்கள் முல்லை மலர்கள் தலைவனுக்கும் தலைவிக்கும் கற் பொழுக்கத்தை நினைவூட்டியதை விளக்கு வனவாகும்.

கணவனை இழந்த மகளிர் முல்லைப்பூச் சூடுதலைத் தவிர்த்தார்கள். ஆபரணங்கள் ஆட்சிக்கு (புழக்கத்துக்கு) வருவதற்கு முன் கற்புடைய பெண் என்று காட்டு வதற்காகப் பயன் பட்ட புறச்சின்னமே முல்லைப்பூச் சூடு தலாகும்,

ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ் சாத் தன் இறந்த பிறகு அவனை நினைந்து குட வாயிற் கீரத்தனுர் பாடிய புற நானூற்றுப் பாடல்,[01] தம்மை ஆதரித்த வள்ளல் இறந் ததால் அவனுல் ஆதரிக்கப்பட்ட மகளிர் முல்லைப்பூச் சூடுதலைத் தவிர்ந்ததைப் போலவே பாணனும் பாடினியுங் கூடமுல்லைப் பூச்சூடவில்லை என்று கூறுகின்றது.

கற்புடைய மகளிர் சங்க இலக்கியங்களில் கூட வடதிசையில் விளங்கும் விண்மீனுன அருந்ததிக்கு ஒப்பிடப்பட்டனர்.

''அருந்ததி யனைய கற்பின்
குரும்பை மணிப்பூண் புதல்வன் தாயே''[11]
''பெருநல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையுங் கற்பின் நறுநுதல்''[12]
'' .... வயங்குசுடர் நோககத்து மீனெடு
புரையுங் கற்பின்''[13]

இவ்வாறே சங்க காலத்தை அடுத்துவரும் காவிய காலத்திலும் அருந்ததியின் கற்பு புகழப்படுகினறது.
''சாலி ஒரு மீனின் தகையாளை''[14]
''தீதிலா வட மீனின் திறம் இவள்திறம்''[15]
என்றும் அருந்ததியை கண்ணகிக்கு உவமை யாக்குகிருர் இளங்கோவடிகள்.

காவிய காலத்துக் கற்புடைப் பெண்டிர் பத்தினி எனப் பெயர் பெற்றனர். கண்ணகி இத்தகைய பெண்டிர் எழுவரைப் பற்றிக் கூறுகின்ருள். அவர்கள் வரலாறுச் சற்றுச் சுருக்கமாகப் பார்ப்போம்.

1. வன்னி மரத்தையும் மடைப் பள்ளி யையும் சான்ருகக் காட்டிய பெண்.(இவளைப் பற்றிப் பிற்காலத்துத் திருவிளையாடற் புரா ணம் கூறும் கதை பொருந்தாது என்பதனை சிலப்திகாரம் ந-மு- வேங்கடசாமி நாட்டார் உரையில் பக்-446ல் காணலாம்) 2- காவிரிக் கரையில் விளையாட அமைத்த மணல் உருவை ஒருத்தி 'உன் கணவனே இவன்' என்று சொன்ன அளவிலே அவனையே (அம் மணல் உருவையே) கணவனுக ஏற்றுக் கொண்டு மற்றப் பெண்கள் வீடு திரும்பவும் அங்கேயே நின்று அவ்வுருவைக் கடலலை கொள்ளாமல் காத்த பெண். 3. தன் கணவன் ஆட்டன் அத்தியைக் காவிரி வெள்ளம் கவர்ந்து

செல்ல அதன் கரை வழியாகக் கடலுக்குச் சென்று அவன் பெயரைக் கூவியாற்றக் கடல் தன் கணவனைத் தன் முன் கொண்டு நிறுத்தச் செய்த பெண். 4. கலத்தில் பொருள் தேடப் பிரிந்த தன் கணவன் வரும் வரையில் கல்லாக மாறி நின்று அவன் வந்ததும் கல்லுருவம் நீத்தபெண். 5. தன் மாற்றாள் குழவி கிணற்றில் விழுந்ததால் தன் குழந்தையையும் கிணற்றில் தள்ளி அவ்விரு குழந்தையையும் எடுத்த பெண் 6 அயலான் ஒருவன் தன்னைக் கூர்ந்து நோக்கியது பொருதவளாய்த் தன் அழகிய முகத்தைக் குரங்கு முகமாக்கிப் பின் தன் கணவன் வந்ததும் பழைய முகத்தைப் பெற்றப் பெண். 7. தோழியர் இருவர் இளமையிலேயே மகனும் மகளும் பெற்றால் அவர்களை மணம் செய்விக்க வேண்டும் என்று பேசிப் பின்னர் ஏற்றத்தாழ்வு வந்துற்ற நிலையில் அத்திருமணம் நடை பெறுததால் தன் கணவனாகப் பேசப் பட்டவனைப் போன்ற பொற்பாவையையே கணவனாகக் கொண்டு தலையில் சுமந்து திரிந்த பெண் ஆகிய இவ்வெழுவரின் வரலாறு சிலம்பில் பேசப்படுகின்றது[16]

இக்கதைகள் இளங்கோவடிகள் காலத்திலேயே காவிரிப்பூம் பட்டினத்தில் மரபு வழிக் கதைகளாகப் பேசப்பட்டிருத்தல் வேண்டும். அதனால் தான் அவரியற்றிய காவியத்தில் இடம் பெற்றுள்ளன. இக்கதைத் தலைவியராக வரும் கற்புடைப் பெண்டிர் எழுவரும் கணவரையே யாதினும் மேலாகப் போற்றியது புலப்படுகின்றது

கற்புடைய பெண்டிர் கணவனையே தெய்வமாகத் தொழும் இயல்பு படைத்தவர்கள் என்று நீதி நூல்களில் தலையாயதாகக் கருதப்படும் திருக்குறளும் கூறுகின்றது.

".தெய்வம் தொழா அள் கொழுநற்றொழு
தெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை"

கணவனைத் தொழுபவர்கள் கற்புடைய பெண்கள் என்று மட்டும் கூறிச் சென்றிருப்பாராஞல் அதில் சிக்கல் இல்லை. கணவனையே தெய்வமாகக் கொண்டு விளங்கும் பெண்களின் ஏவல் வழி இயற்கையும் இயங்கும் என்பதுவே சிந்திக்கத்தக்கதாக உளளது. இப்பொருளின் தாக்கம் பல இலக்கியங்களில் ஏற்பட்டுள்ளன. தமிழ்க் காவியங்களுள் தலைசிறந்ததான சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் இக்கருத்தின் தாக்கம் இடம் பெற்றுள்ளது.

"தெய்வம் தொழா அள் கொழுநற்றொழு
வாளைத் தெய்வம் தொழுந்தகைமை திண்ணிதால்
—தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணக மாதர்க்கு விருந்து"[17]

என்று காவியத்தின் இடையிலே மட்டுமல்லாமல் தொடக்கத்திலேயே,[18]

'உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தலும்' என்று போற்றப்படுகின்றாள் கண்ணகி.

கற்புடைய பெண்ணின் ஏவல் வழி வானம் மழை பெய்யும் என்பது இங்கே கண்ணகியின் ஏவலால் 'மதுரை தீப் பற்றி எரிதலாக' மாறுபடினும் அவர்களின் சொற்படி இயற்கை இயங்கும் என்ற கருத்தில் மாறு படவில்லை. அதனால் தான் வள்ளுவனையே கண்ணகியின் வடிவில் கண்டசாத்தனார்,

"தெய்வம் தொழா அள் கொழுநற்றொழு
தெழுவாள் பெய்யெனப் பெய்யும் பெருமழை
என்ற அப் பொய்யில் புலவன் பொருளுரை
தேராய்"[19]

என்று மருதியை நோக்கி நீதித் தெய்வத்தின் கூற்றாகக் கூறியுள்ளார்.

மருதி என்பவள் நல்ல பதிவிரதை; ஆயினும் திருவிழாக் காலங்களில் ஆலயங்களுக்குப் போவது, கதைகளைக் கேட்பது முதலிய பக்தி முறைகள் அவளிடம் படிந்திருந்தன; நல்ல அழகி ஆதலால் இவ்வாறு வெளியே போய் வருங்கால் ஒரு நாள் அரசகுமாரன் அவளைக் கண்டு காதல் கொண்டு காம மொழிகள் ஆடினான். அவள் உள்ளம் பதைத்து உயிர் துடித்து ஓடிவந்து நீதித் தெய்வத்தின் முன்னின்று அழுது முறையிட்டாள். அப்பொழுது அத் தெய்வம் அவளுக்குப் போதித்த போதனையின் தொடக்கமே மேலே பார்ந்த மூன்று அடிகள்.

"ஏபெண்ணே! நீ பொய்யில் புலவன் புகன்றதை மறந்து விழாப் பார்க்கவும், ஆலயங்களுக்கும் சென்றனை; அதன் பலனே இது.
"கடவுட் பேணல் கடவியை ஆகலின்
மடவரல் ஏவ மழையும் பெய்யாது

... ... ... ... ... ... ... ... ...

ஆங்கவை ஒழிகுவை யாயின் ஆயிழை
ஒங்கிரு வானத்து மனழயும் நின் மொழியது''[20]
என்றும்,

''மண்திணி ஞாலத்து மழைவளம் தரூஉம் பெண்டிர்''[21]

என்றும் சாத்தனுர் பழைய கற்புக் கொள்கையை வலியுறுத்திக் கூறியுள்ளார்.

இவ்வாறு வளையாபதியும்,

''நாடும் ஊரும் நனிபுகழ்ந்து ஏத்தலும் பீடு
றும் மழை பெய்கெனப் பெய்தலும் கூடலாற்
றவர் நல்லது கூறலும்
பாடுசால் மிகு பத்தினிக்கு ஆவதே''[22]

என்று பேசுகின்றது. இவ்வாறே காவியங்களில் மட்டுமல்லாமல் பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள் போன்ற நீதி நூல் இலக்கியங்களிலும் கம்பராமாயணத்திலும் கூட வள்ளுவரின் ''தெய்வம் தொழா அள் ''என்ற குறட் கருத்துக் கூறப்பட்டுள்ளது.

''கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி; கொண்டான்
செய்வகை செய்வான் தவசி; கொடிது ஒரீஇ
நல்லவை செய்வான் அரசன்; இவர் மூவர்
பெய்யெனம் பெய்யும் மழை''[23]

என்றும்

''துய்ய புகழ்க் கற்பால் தொழப்படுவாள் மெய்ஞ்ஞானம்
எய்தும் அருந்தவத்தோர் தேவர்எவரானும்
தெய்வம் தொழாஅள் கொழுநற்றெழுது எழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை''[24]

என்றும் நீதி நூல்கள் இக்கருத்தைக் கூறுகின்றன.

''மாதரார் கற்பில்நின்றன காலமாரியே''
என்றும்,

''தங்கள் நாயகரின் தெய்வம் தவம்
பிறிது இல என்று எண்ணும்
மங்கைமார்சிந்தை போலத் தூயது''[25]

என்றும்,

''பெய்யுமே மழை புவி பிளப்ப தன்றியே
செய்யுமே பொறை அறம் நெறியிற்செல் லுமே
உய்யுமே உலகு இவள் உணர்வு சீறினுல
வையுமேல் மலர்மிசை அயனும் மாயுமே''[26]

என்றும் கம்பர் கூறியுள்ளார்.

கற்புடைய பெண் கூறினுல் மழை பெய்யும்; நிலம் பிளக்கும்; பொறையும் நெறியும் அவ்வவற்றிற்குரிய நெறியில் செல்லும்; உலகமே தப்பிப் பிழைக்கும்; மலரில் வீற்றிருக்கும் பிரமனும் மாய்ந்திடுவான் என்றிவ்வாறுகக் கற்பும் கற்புடைய பெண்டிரும் பெற்ற மதிப்புப் பன்னிரண்டாம் நூற்றுண்டில் வாழ்ந்து சைவ இலக்கியம் செய்த சேக்கிழாரால் எவ்வாறு மாற்றப் பெற்றுள்ளது என்பதனைப் பார்ப்போம்.

பெரிய புராணத்தில் பேசப் படுகின்ற பெண்கள் இருபத்து நான்கு பேர்தான். இவர்களுள்ளும் தனி அடியவராக வைத்தெண்ணப் படுபவர்கள் மூவர் மட்டுமேயாவர். அவர்கள்: 1 இசை ஞானியார்; 2 மங்கையர்க்கரசியார்; 3 பேயார் என்ற காரைக் காலம்மையார் ஆகியவரே. இவரையன்றி இன்னும் இருபது பெண்டிர் வருகின்றனர் இவ்விருபது பெண்களுள் பெயரளவில் மட்டுமே பேசப்படுபவர்கள் ஒன்பது பேர் அவர்கள்: 1 இசை ஞானியார், 2 சிங்கடி, 3 வனப்பகை, 4 அப்பூதியடிகளின் மனைவி, 5 இளையான் குடி மாறரின் மனைவி, 6 மெய்ப்பொருளாரின் மனைவி, 7 அமர் நீதியாரின் மனைவி, 8 கழற் சிங்கரின் மனைவி, 9 கோச் செங்கட் சோழனின தாய், என்பவர்கள்

சிறிதளவு பேசப்படுபவராகவும் ஆனுல் பெயர் கூட அறிவிக்கப்படாதவராகவும் வருபவர்கள் எண்மர். அவர்கள் 1 திருஞான சம்பந்தரால் பாம்புவிடம் தீர்க்கப்பட்டவணிகனின் மனைவி, 2 இளையான் குடி மாறரின் மனைவி, 3 சிறுத் தொண்டரின் மனைவி, 4 திரு நீல கண்டரின் மனைவி, 5 திரு நீல நக்கரின் மனைவி, 6 அரிவாட்டாயரின் மனைவி 7 திரு மூலரின் மனைவி. 8 குங்கலியக்கலயரின் மனைவி என்பவராவர். திரு ஞான சம்பந்தரால் எலும்பாக மாறி உயிர் பெற்ற பூம்பாவையும் திருநாவுக்கரசரின் தமக்கையாரான திலகவதியாரும் பெயர் குறிப்பிடப் பட்டாலும் அடியார்க்குரிய சிறப்பிடம் பெறவில்லை. திலகவதியார் அடியவராக விளங்கத் தக்க அளவு செயல் திறனும் சிவ பக்தியும் உடையவராக விளங்கியும் அறுபத்துமூன்று

அடியவர்களுள் ஒருவராக இசை ஞானியார் போல பெரிய புராணத்தில் இடம் பெறவில்லே.

இல்வாருகப் பத்தொன்பது பெண்டிர் பார்க்கப்பட்டவுடன் எஞ்சிநிற்பவர்கள் ஐவர். இவர்களைப் பற்றிச் சற்று விரிவாகப் பார்ப் போம். ஐவருள் ஒருவர் மங்கையர்க்கரசியார். இவர் தனியடியாருள் மூவருள்ளும் ஒருவர் என்பது ஏற்கனவே கூறப்பட்டது. இவர் பாண்டியன் நெடுமாறனின் மனைவி. இவர் நீதி நூல் இலக்கியங்களில் கற்புடைப் பெண் டிர் எழுவருள் ஒருவராகக் கொள்ளப்பட்ட போதிலும் தன் கணவனை விடவும் மேலாகச் சிவபெருமானை வணங்கிக் கணவன் சமண சமயத்தில் நிற்க தான் சைவ சமயத்தில் வாழ்ந்தவர். மட்டுமல்ல. கணவனைத் திரு ஞான சம்பந்தர் மூலமாகச் சைவ நெறிக்கு மாற்ற எண்ணி அவரைச் சோழ நாட்டிலி ருந்து மதுரைக்கு வரவழைத்தவர். மங்கை யர்க்கரசியார் பணி செய்யும் ஆலவாய் இது வோ என்று வியந்து பாடிக் கேட்டுக் கொண் டே வந்தார்.

> "தென்னவன் பெருந்தேவியார் சிவக் கன்றின் செய்ய
> பொன்னடிக் கமலங்களிற் பொருந்துமுன் விழுந்தார்
> மன்னு சண்பையர் வள்ளலார் மகிழ்சிறந் தளிக்கும்
> இன்னருட் பெருஞ் சிறப்போடுந் திருக் கையால் எடுத்தார்."[27]

இவ்வம்மையாரின் மங்கல நாணைப் பாதுகாத் துக் கொள்ளும் அதே வேளையில் பாண்டி யனுக்கும் பாடம் கற்பிக்க வேண்டும் என் றெண்ணிய சம்பந்தர் சமணர் தம் மடத்திற்கு வைத்த தீயை அவன் மீதே ஏவி வெப்பு நோயாக மாற்றினர். தன் கணவனுக்கு வந்த வெப்பு நோயின் காரணத்தை அறிந்து கொண்ட மங்கையர்க்கரசியார்,

> ".... வேணியர் பால் ஞானம் பெற்றவர் விரும்பி நோக்கில்
> தீய இப்பிணியே அன்றிப் பிறவியும் தீரும்"[28]

என்றார். இவ்விடத்தில் சிவனடியார் மீது கொள்கின்ற மங்கையர்க்கரசியாரின் சிவ பக்தி—தம் கணவர் மீது கொண்டிருந்த பதி பக்தியை விட ஒரு படி மேலாக விளங்குவது கூர்ந்து அறியத் தக்கதொன்று.

இயற்பகையார், சிவனின் அடியார்கள் வந்து எது கேட்டாலும் ஈயும் இயல்பினர். வேதியர் வேடத்தில் வந்த சிவன் அடியவரின் மனைவியையே தானமாக வேண்டினர்.

> ...—இயற்பகையார், யாதும் ஒன்றும் என் பக்கல் உண்டாகில்
> அன்ன தெம்பிரான் அடியவர் உடைமை;
> ஐயம் இல்லை நீர் அருள் செய்யும் என்ன
> மன்னு காதல் உன் மனைவியை வேண்டி வந்ததிங்கென .....[29]
> இது எனக்கு முன்புள்ளதே வேண்டி எம்பிரான்
> செய்த பேறெனக் கென்னுக,
> கதுமெனச் சென்று தம்மனை வாழ்க்கைக் கற்பின் மேம்படு காதலியாரை
> விதி மணக்குல மடந்தை இன்றுனை இம் மெய்த்தவர்க்கு நான் கொடுத் தனன்"[29]

என்ன மதுமலர்க்குழல் மனைவியார்.

கலங்கி மனந்தெளிந்த பின் .... "......நீர் உரைத்த தொன்றை நான் செய்யும் அத் தனைய அல்லால் உரிமை வேறுளதோ எனக்கு"[30] என்ருள்.

இவ்வாறு வருகின்ற பகுதியில் இயற்பகை யாரின் மனைவியைப் பற்றிச் "செய்தவர் வேண்டியது..... நின் காதலியைத் தருகென் றலும்" நம்பியாண்டார் நம்பி என்றிவ்வாறு திருத் தொண்டத் திருவந்தாதியில் பாடிய அதே வழியில்சேக்கிழார் "கற்பின் மேம்படு காதலியார்" என்று மிக எச்சரிக்கையுடன் குறிப்பிடப்படு து எண்ணத் தக்கது. சிவனடி யாரின் மனைவி கற்புடையவரேயாயினும் அடி யாரின் இச்சை வழி அவரை வேருேர் அடியார் வேண்டக் கொடுத்தாலும் அப்பெண் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறவே இவ்வர லாறு கூறப்பட்டுள்ளது.

இயற்பகையாரின் வரலாற்றில் அவரது மனைவியின் மனத்தடுமாற்றம் தெற்றெனப் புலப்படுகின்றது இயற்பகையார் 'யானுன்னை இம்மெய்த்தவர்க்குக் கொடுத்தேன்' என்ன, மனைவியார் மனம் கலங்கிப்பின் தெளிகின்ருள்.

அடுத்துவரும் ''பாடலில் திகைத்து நின்றனள் திருவினும் பெரியாள்.'' கதை நிகழ்ச்சியைத் தன் கேள்வி ஞானத்தால் பாடும் அதே வேளை யில் அவரது கற்பு நெறிக்கு இழுக்கு வந்து விட்டது என்று பிறர் சொல்ல இடம் வைக் காத வண்ணம் மிக எச்சரிக்கையுணர்வுடன் பாடியுள்ளார் சேக்கிழார். இயற்பகையாரின் மனைவியின் கற்பு அடியவர் கடப்பாடாக கொள்ளுமளவிற்கு வற்புறுத்தி மாற்றப்பட் டிருப்பது இவ்விடத்தில் மனங்கொள்ள வேண் டிய ஒன்றாகும்.

முதலில் சிவனடியாருடன் தனியே செல்ல விரும்பாத இயற்பகையாரின் மனைவியார் தன் கணவரின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து செல்கின் றார். கணவரின் ஆணையாக எதனையும் ஒரு பெண் ஏற்றுக் கொள்வாள். ஆனால் கணவ ரின் ஆணைஎன்பதற்காக இன்னொரு ஆடவனை அவனுப் போல மதிக்க மறுத்திடுவாள் இதுவே தமிழிலக்கிய மரபு காட்டும் கற்பு நெறி.ஒருவர் தன் மனைவியிடம் தன்னிலும் மேலாகஒரு சிவனடியாரைக் கொள்ளுக என் றாலும் கூட அதற்கும் அப்பெண் உடன்பட வேண்டும் கணவனை விட மேல், சிவனடியார் என்றகருத்தை கற்புடைய பெண்ணும் கூட ஏற்றுக் கொள்ள வேண்டும். என்பதை விளக் கவே இவ்வரலாறு சேக்கிழாரால் சித்திரிக்கப் பட்டுள்ளது ''இல்லையே என்னாத இயற் பகை''[31] என்று மட்டுமே சுந்தரர் கூற மனைவி யைக் கேட்டாலும் சிவனடியரர்க்காகத் தியாகம் செய்ய வேண்டும். என்று சேக்கிழார் காட்டுகின்றார்.

திருத்தொண்டர் புராணத்திற்குத் திருத் தொண்டத் தொகை என்ற மூலநூல் பாடிக் கொடுத்த சுந்தரரின் வாழ்க்கையில் நான்கு பெண்கள் குறுக்கிடுகின்றனர். கோட் புலி யாரின் மக்களான சிங்கடி வனப்பகை என் னும் இருவரையும் திருமணம் செய்து கொள்ளுமாறு கோட்புலியார் வேண்டினார். ஆனால் சுந்தரர் மறுத்துத் தம் மக்களாக ஏற்றுக் கொண்டு சிங்கடியப்பன் என்ற பெயரையும் பெறுகின்றார்.

சுந்தரர்க்குத் தந்தையால் செய்யப் பட இருந்த திருமணம் சிவபெருமானால் தடுக்கப் படுகின்றது. திருமணம் நடக்காமலேயே திரு மணம் நடக்கவிருந்த ஊர்மட்டும் மணம்வந்த புத்தூர் என்ற பெயரைப் பெற்று விடுகின் றது. இவ்வாறு ஒரு மணம் தடைப்பட்ட போதிலும் வேறு இரு மணங்களைப் பின் னர் செய்து கொள்கின்றார் சுந்தரர். திருவா ரூரில் பதியிலார் குலமாகிய உருத்திர கணி கையார் குலத்தில் பிறந்த பரவையாரையும் நாலாங் குலமான வேளாண் குலத்தில் ஞாயிறுகிழார்க்கு மகளாகபிறந்த சங்கிலி யாரையும், சுந்தரர் காதல் மணம் செய்து கொள்கின்றார். இவ்விருவரையும் திருவாரூர் திருவொற்றியூர் கோயில்களிலே தான் கண்டு காதல் கொள்கிறார். இவ்வாறு காதல் கொண் டதற்கு முற்பிறவியில் அவர் கயிலாயத்தில் சிவனுக்குப் பணிவிடை செய்து வந்த போது அனிந்திதை, கமலினி என்ற உமா தேவியின் சேடியர் இருவர்பால் மனம் சென்றதே கார ணம் என்று அமைதி கூறவே சேக்கிழாரால் திருமணச் சிறப்புப் பாடப்பட்டுள்ளது.

பரவையாரை சுந்தரர்க்குச் சிவனடியார் களே மணம் செய்து வைக்கின்றனர். பின்பு திருவொற்றியூரில் சங்கிலியாரைக் கண்ட வுடன் திருமணம் செய்ய நினைத்தார். ஆனால் தன்னைப்பிரியாமல் இருக்கச் சத்தியம் செய்து கொடுத்தால் தான் மணப்பேன் என்றார். சங்கிலியார். ஏனெனில் ஏற்கனவே மணமான வர் என்பதால். ''நான் சத்தியம் செய்யும் பொழுது, நீ கோயிலுள் இல்லாமல் பிரகாரத் திலுள்ள மகிழ மரத்திற்குச் சென்றுவிடு.'' என்று சுந்தரர் சிவனை வேண்டினார். சிவன் அவரிடம்சரி என்று கூறி, இச் செய்தியைச் சங்கிலியாரிடமும் கூறி விடுகின்றார். சங்கிலி யார், ''இறைவன் முன் சத்தியம் செய்ய வேண்டாம்; மகிழ மரத்தடியில் செய்து தருக'' என்று சொல்லி மெய்ச் சத்தியமாக்கி விடுகின்றார்.

சங்கிலியார் சந்தேகப் பட்டது போலவே சில நாளில் பரவையார் வாழும் திருவாரு ருக்குப் புறப்பட்டுவரும் வழியில் கண்களை இழந்தார்; மீண்டும் பெற்றார். திருவாரூரில் பரவையார் அடியாரை ஏற்றுக் கொள்ளா மல், 'சங்கிலிபால் தொடக்குண்டார்க்கு இங் கென்ன வேலை' என்று கதவைச் சாத்தி விடு கின்றார். இறைவனே பரவையாரிடம் இரு முறை அந்தணராகக் தூது சென்று சமா தானம் செய்கின்றார்.

இவ் வரலாற்றில் இவ்விரு பெண்டிருமே தம் கணவரை விடவும் மேலாகச் சிவபெருமானையே நம்பிக்கைக்குரியவராகக் கொண்டமை நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளது. இங்கு நாம் முன்பு பார்த்த கற்பு நெறி பக்தி நெறியால் பாதிக்கப் படுவது பளிச்சென்று தெரிகின்றது. அதாவது இறைவனையே நேசிக்கும் பக்தி நெறி சேக்கிழாரால் உயர் மதிப்புப் பெறுகிறது.

இம்மதிப்பு மாற்றத்துக்கு வழிதுறையாக மூவர் தேவாரங்களிலும், மணிவாசகரின் வாசகத்திலும் ஏராளமான பாடல்கள் அவ்வடியார்களே காதல் கொண்ட தலைவியராக மாறிச் சிவனையே தலைவனாகக் கொண்டு பாடியதாக உள்ளன.

''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அயலிடத்து ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே''[32]

என்ற திருநாவுக்கரசின் திருத்தாண்டகமும்

அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண் பொருளும் நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும் நீ[32]

என்று வரும் அப்பரின் பொதுத் திருத்தாண்டகமும்.

''நன்னலம் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரையல் அவர்நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ தோழி''[33]

என்ற குறுந் தொகைப் பாடற்கருத்தோடு, நேர்முரணாக உள்ளமை ஊன்றி உணரத்தக்க ஒன்றாகும்.

குல மகளுக்குக் கற்புப் போல அடியவர்க்குப் பக்தி என்ற இலக்கணத்தை ஆண்பால் அடியவர்களுக்குப் பொருத்திப் பார்க்கும் பொழுதோ அன்றித் தன்னைத் தலைவியாக வைத்துப்பாடிய அடியவர்களுக்குப் பொருத்திப் பார்க்கும் பொழுதோ பிரச்சனை எழவில்லை. மணமான பெண்பால் அடியவர்கள் என்றுவரும் பொழுதுதான் மதிப்பு முரண்பட தோன்றுகின்றது. பெண்பால் சிவனடியார்கள் கணவனைச் தொழுவதா, (சிவனை) கடவுளைத் தொழுவதா என்ற முரண்பாடு முளைக்கும் பொழுது பெண் சிவனடியார்களுடைய மனதில் கணவரைவிட சிவனடியார்கள் ஒருபடி உயர்ந்தவராகவே சேக்கிழாரால் சித்திரிக்கப் பட்டுள்ளனர் என்பது சிந்திக்கத்தக்கது.

இக் கருத்தினை இன்னும் மிகத் தெளிவாக விளக்குகின்றது 'பேயார்' என்ற காரைக் காலம் மையாரின் கதை. இவர் புனிதவதி என்ற பெயருடன், காரைக்காலில் வணிக குலத்தில் பிறந்து வளர்ந்தவர். இளமையிலேயே சிவன் மீது பேரன்பு கொண்டு விளங்கினார். வயது வளர வளரச் சிவனன்பும் சேர்ந்தே வளர்ந்தது.

''பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாம் காதல் சிறந்து நின் சேவடியே சேர்ந்தேன்'' என்றும் ''ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே துணிந்திருந்தேன் ஒன்றே என் உள்ளத்தின் உள்ளடைந்தேன்-ஒன்றே காண் கங்கையான் திங்கட் கதிர் முடியான் பொங்கொளிசேர் அங்கையாற்கு ஆளாம் அது''[34] என்று இவர் பாடிய அற்புதத்திருவந்தாதியில் வரும் பாடலடிகள் இக்கருத்தை அரண் செய்கிறது. சேக்கிழாரும் ''விடையவர் பால் அல்கிய அன்புடன் அழகின் கொழுந்தெழுவதென வளர்வார்[35] என்று கூறியுள்ளார்.

இவ்வாறு வளர்ந்தவள் உரிய மணப்பருவம் அடைந்ததும் நிதிபதியின் மகனான பரமதத்தனுக்கு மணம் செய்து கொடுக்கப்பட்டாள். இருவரும் இனிதே இல்லறம் நடத்தி வரும் பொழுது ஒரு நாள் பரமதத்தனிடம் வாணிபதிற்காக வந்த சிலர் இரு மாங்கனிகளைக் கொடுத்தனர். அதனை அவன் தன் இல்லத்திற்கு அனுப்பினான், அவன் உணவு உண்ண வருவதற்கு முன் அடியவர் ஒருவர் பசியோடு அவனில்லம் வந்தார். வந்தவரை புனிதவதியார் வரவேற்று உணவு கொடுத்து உபசரிக்கும் பொழுது, கடையிலிருந்து அன்று தன் கணவர் கொடுத்தனுப்பிய மாங்கனியில் ஒன்றையும் அளித்தார். அவரும் உண்டு சென்றார்.

பரமதத்தனுக்கு பின்னர் உணவு பரிமாறும் பொழுது எஞ்சியிருந்த கனியை அளிக்க அதை உண்ட அவன் மீதியுள்ள கனியையும் படைக்கப் பணித்தான். அறைக்குள் சென்ற அம்மையார் செய்வதறியாது கை பிசைந்து நிற்க அற்புதத்தால் அவர் கையில் மாங்கனி ஒன்று வந்தது. அதனைக் கொண்டு போய்ப் படைத்தார், இக்கனி தானுண்ட முதற் கனியை விடச் சுவையோடு விளங்கக் கண்ட வணிகன் உண்மையை வினவினன். புனிதவதியார் இறைவனருளால் கிடைத்த உண்மையைக் கூறினர்.

பரமதத்தன் நம்பவில்லை; அவ்வாறு ஞல் "உன் இறைவன் அருளால் இன்னொரு கனியை வரவழைத்துக் காட்டுக" என்றான்,

முன் நிகழ்ந்தது அற்புதம் என்று காட்ட வேண்டிய சிக்கல் வந்தது; அம்மையார் வேண்ட மற்று மொரு கனியும் வந்தது. தன் கையில் பெற்றவுடன் அக்கனி மறைந்ததைக் கண்ட பரமதத்தன் பயம் கொண்டான். தன் மனைவியை அணங்கு (தெய்வம்) என்று நினைத்துவிட்டான். அவளுடன் இல்லறவாழ்க்கை வாழப் பயந்து, அயல் நாட்டுக்குக் கலத்தில் வாணிபம் செய்வான் போலப் போக்குக் காட்டி அயல் நாட்டில் ஒரு பட்டினத்தில் தங்கிவிட்டான். அங்கே வேறோர் மணம் செய்து, பிறந்த குழந்தைக்குத் தன் முதல் மனைவியின் பெயரான புனிதவதி என்று பெயர் வைத்து வாழ்ந்து வந்தான்,

இச் செய்தியைச் சிறிது நாள் சென்ற பின் கேள்விப்பட்ட புனிதவதியார் தம் சுற்றத்தாருடன் கணவனிருக்கும் ஊரை அணுகினர். தாம் வந்த செய்தியைச் சொல்லிவிட்டார். பரமதத்தன் தன் இரண்டாவது மனைவியுடன் ஓடோடி வந்து புனிதவதியின் கால்களில் விழுந்து வணங்கியதோடு மனைவியையும் குழந்தையையும் வணங்கச் செய்தான். இதனைச் சேக்கிழார் வாக்கிலேயே பார்ப்போம்.

'தானும் அம்மனைவியோடும் தளர் நடைமக
விளுேடும்
மானிளம் பிணைபோல் நின்றமனைவியார்
அடியில் தாழ்ந்தே
யான் உமதருளால் வாழ்வேன்; இவ்விளங்
குழவிதானும்
யான்மையால் உமது நாமம்'' என்று முன்
பணிந்து வீழ்ந்தான்[36]

கணவன் காலில் மனைவி விழுந்து வணங்குவதுவே மரபாக இருக்க இங்கே மனைவி காலில் கணவன் விழுந்து வணங்கும் மாற்றத்தைப் பார்க்கின்றோம். இது அதிசயமாகப் பட்டது அவனுடைய மனைவி புனிதவதிக்கு. அவள் அச்சத்தோடு ஒதுங்கி நின்றாள், அவனது உறவினரும் வெட்கிப்போய்,

''..... ....உன் திரு மனைவிதன்னை மணமலி தாரினய் நீ வணங்குவ தெவன் கொல்?'' என்றனர். அதற்குப் பரமதத்தன்[37]

''இவர் தாம் மானுடரல்லர்; நற்பெருந் தெய்வம் ஆதல் நானறிந்தகன்றேன்[38] என்றான்;

இவ்வரலாற்றில் ஒரு புதுமையைப் பார்க்கின்றோம். சிவனடியாராக ஒரு பெண் விளங்கினல் — அதுவும் அற்புதங்களை நிகழ்த்திக் காட்டவல்ல பெண் அடியவராக விளங்கினல் அவளைக் கட்டிய கணவன் கூட அவள் தாள் பணிந்து வணங்க வேண்டும் என்பதுவே அது,

சங்க காலத்தில் கற்பு நெறி என்பது இல் வாழ்க்கை நெறியாக விளங்கக் கண்டோம் அதுநீதி நூல்களிலும் காப்பியங்களிலும் கணவனையன்றிப் பிறதெய்வங்களைத் தொழாத ஒழுக்கத்தை உணர்த்தியுள்ளது என்று பார்த்தோம். இதுவே கணவனிலும் சிவன் மேலானவன் என்ற கருத்தாக மாற்றம் பெற்றுள்ளது என்பதனைப் பக்தி நெறிக் காலத்தில் பார்க்கின்றோம். இவ்வாறு கற்பு, மதிப்பு மாற்றம் பெற்றதற்கான காரணத்தைச் சற்று ஆராய்வோம்.

சமுதாய வளர்ச்சி போக்கில் பொதுவாக மூன்று கட்டங்கள் விளங்கியதாக மானுடவியல் அறிஞர்கள் ஆராய்ந்து முடிவுகட்டியுள்ளனர். இவற்றுள் முதற்கட்டம் பெண்ணுக்கும் ஆணுக்கும் சமுதாயத்தில் சம உரிமை விளங்கிய கட்டமாகும், இச்சமுதாய மக்கள் உணவு தேடும் நிலையினர். (Food gatherers)எனப்பட்டவர்.காய்கனிபோன்றவற்றைத் தேடித் தொகுத்து உண்ணும் கால கட்டமாகும் இது. இக்கட்டத்தில் பெண்

ணுக்கும் ஆணுக்கும் மதிப்பில் ஏற்ற இறக்கம் இல்லை. பின்னர் பெண்ணுதிக்க சமுதாயம் தோன்றியது.

ஆணுக்கும் பெண்ணுக்கும் சமுதாயத்தில் வேலைப்பிரிவு வகுக்கப்பட்டது. ஆண்கள் 12 மாதங்களும் வேட்டையாடுதல் போன்ற வேலைகளில் ஈடுபட்டு விளங்க பெண்கள் மகப் பேறு வாய்க்கும் சமயங்களில் அதாவது ஒரு மூன்று மாதங்களில் வேட்டை போன்ற கடுமையான வேலைகளில் ஈடுபட முடியாமல் இருப்பிடத்தைச் சுற்றி உழவுத் தொழிலில் ஈடுபடுகிறுள். ஆடுமாடுகளை வீட்டுவிலங்குளாக்கிவளர்க்கத்தொடங்கினுள் இருப்பிடத்தைச்சுற்றி காய்கறி பயிர் கொடிகளைப்பயிரிடத் தொடங்கினுள். வேட்டையாடுதல் ஆண்களுக்கு ஆபத்து நிறைந்ததாகவும் நிலையற்றதாகவும் விளங்கப் பெண்கள் இல்லத்திலேயே இருந்து செய்த பயிர்த் தொழில் ஏற்றம் பெற்றது. பெண் செழிப்புத் தெய்வமாகக் கொள்ளப்பட்டாள். பெண்ணுதிக்க சமுதாயம் என்பதுவே இக் கட்டம்.

இதனை அடுத்து அமைந்ததே ஆணுதிக்க சமுதாயம். ஆண்கள் வேட்டையாடுவது போன்று ஒரு கூட்டத்திலுள்ள ஆநிரைகளைக் கவர்தல், அக்கூட்டத்திரையே அடிமையாகக் கொள்ளுதல், ஆகிய போர்க்கலைகளில் தேர்ச்சி பெற்று உற்பத்திமுறை மாறியபொழுது ஆடவர் ஏற்றம் பெற்றனர். ஒரு கூட்டத்தை வென்று அதிலுள்ள ஆடவரை அடிமையாகவும் பெண்டிரை இன்பப் பொருளாகவும் கொள்ளத் தலைப்பட்ட கால கட்டத்தில் நிறைய அடிமைகளைக் கொள்ள வல்ல ஆணுதிக்க சமுதாயம் தோன்றுவது இயல்பன்றோ?

ஆணுதிக்க சமுதாயத்தில் நிலங்கள் மாடுகளைப் போலப் பெண்டிரும் கூட ஆண்களின் உடைமைப் பொருளாகக் கருதப்பட்டனர். இந்நிலவுடைமையைப் பாதுகாக்கச் சட்ட திட்டங்கள் வகுக்கப்படும்பொழுதுதான் ஆட்சியமைப்பு, அரசியல் முறை, சமயம் ஆகியன சமுதாயத்தில் படைக்கப்பட்டு நிலைநிறுத்தப் பட்டன. இக்கால கட்டத்தில் தான் தெய்வங்கள் படைக்கப்பட்டு பல வரலாறுகள் எழுதப்பட்டன.

நிலவுடைமைச் சமுதாயத்தின் வளர்ச்சியடைந்த காலகட்டந்தான் சோழப் பேரரசு விளங்கிய காலம். அக்காலத்தில் வாழ்ந்தசேக்கிழார் தொன்மையான மரபிலிருந்தும் மாற்றி கற்பு நெறியில் வாழும் பெண் கணவனிலும் மேலாக சிவனைக் கொள்ள வேண்டும் என்ற கருத்துக்கிசைந்த கதைகளையமைப்பதும் இக்கருத்துப் பட நிகழச்சிகளையமைப்பதும் சோழப் பேரரசினைக் காத்து நிற்கப்பயன்படும் நெறிகளாகவே படுகின்றன எக்குலத்தவரும் சிவன் ஒருவனையே கடவுளாகக் கொள்ள வேண்டும் என்ற, சமயப் பண்பாட்டு ஒருமைப் பாட்டை ஏற்படுத்த விழைந்த சேக்கிழார் தமிழிலக்கியத்தில் கற்பு நெறிக்கிருந்த செல்வாக்கினைச் சிதைப்பது தெரியாமல் சிதைத்துச் சிவனின் செல்வாக்கினை நிலைநிறுத்துதற்கு ஒல்லும் வகையால் ஓவாது உழைத்தே பெரிய புராணத்தை உருவாக்கியுள்ளார். ஒருதெய்வ மேம்பாடு பக்தி வாழ்வில் மலர மலர ஒரரசு-அது சோழப் பேரரசுதான் உண்டு என்ற கொள்கை அரசியல் வாழ்வில் மலர்ந்து மணம் வீச வேண்டும் என்பதுவே சேக்கிழாரின் உள்ளக்கிடக்கையாகும் என்று கொள்ளுவது ஏற்புடையதே யாகும்.

---

## மேற்கோள்களும் சான்றுதரங்களும்


1 தொல் காப்பியம்-பொருளதிகாரம் 140
2 அக நானூறு 86,
3 தொல்காப்பியம் -
4 அக நானூறு 9;
5 புற நானூறு 196,
6 பதிற்றுப் பத்து 70,
7 நற்றிணை 142 அகநானூறு 274;
8 சிறு பாணாற்றுப் படை 30;
9 குறுந்தொகை 126.
10 புற நானூறு 242.
11 ஐங்குறு நூறு 442.
12 பெரும் பாணாற்றுப் படை 302-303,
13 பதிற்றுப்பத்து 65ல் 9-10,
14 சிலப்பதிகாரம் - மங்கல வாழ்த்துப் பாடல் — வரி 51
15 ,, ,, — வரி 27

16 ,, வஞ்சின மாலை — வரி 5-34
17 ,, கட்டுரை காதை - வரி 201-204
18 ,, பதிகம் - வரி 56.
19 மணிமேகலை. - 22
20 மணிமேகலை
21 மணிமேகலை.
22 வளையாபதி.
23 திரிகடுகம்.
34 இன்னிலை.
25 கம்பராமாயணம் - வேள்விப்படலம் - 16
26 ,, ,,
27 பெரிய புராணம் - திருஞானசம்பந்தா - 671.
28 ,, ,, - 720
29 ,, - இயற்பகை நாயனார் - 7-8
30 ,, ,, - 9
31 உருத்தொண்டத் தொகை - பாடல் 1
32 திரு நாவுக்கரசர் - திருத்தாண்டகம்.
33 குறுந்தொகை - 93.
34 அற்புதத் திருவந்தாதி - பதினோராம் திருமுறை பக் 14-15 திருப்பனந்தாள் மடத்து வெளியீடு.
85 பெரிய புராணம் - காரைக் காலம்மை யார், பாடல் 4
36 ,, - ,, ,, 45
37 ,, - ,, ,, 46
38 ,, - ,, ,, 47
39 கலாநிதி க. கைலாசபதி - நாடு நாயன் மாரும் பேரரசும் பெருந்தத்துவமும் கட்டுரைகளில் விளக்கம் காணலாம்.

# கடிதம்

அக்டோபர் ஆராய்ச்சியில் வெளியான மே து. ராசுகுமாரின் "சோழர் காலத்தில் வரி எதிர்ப்பு இயக்கம்" என்னும் கட்டுரையில் காணப்படும் ஒரு மேற்கோள் பற்றியும் அதனடிப்படையில் வந்த முடிவு பற்றியும் எனது நண்பர் புதுவை சேதுராமன் செட்டியார் அவர்கள் புதுவை வரலாற்றுச் சங்க உறுப்பினர் திரு. குப்புசாமி அவர்கள் எழுதிய விமர்சனக் கருத்தை எனக்கு அனுப்பியுள்ளார்கள். ஆராய்ச்சி வளர்ச்சிக்கு இத்தகைய நுணுக்கமான ஆதாரத்துடன் கூடிய ஆக்கபூர்வமான விமர்சனங்கள் தேவை என்று நான் கருதுவதால் திரு. குப்புசாமி அவர்களின் கடிதத்தை இங்கே வெளியிடுகிறேன்.

(நா. வா.)

மதிப்பிற்குரிய ஆசிரியப் பெருந்தகை அவர்களுக்கு.

வணக்கம்,

தாங்கள் சிறப்புடன் நடத்திவரும் ஆராய்ச்சி இதழில், திரு. மே து. ராசுகுமார் அவர்களின் 'சோழர் காலத்தில் வரி எதிர்ப்பு இயக்கம்' என்னும் தலைப்புடைய ஆராய்ச்சிக் கட்டுரையொன்று வெளிவந்துள்ளது. [ஆராய்ச்சி, அக்டோபர், 1973.]

அக்கட்டுரையில் கண்டுள்ள செய்திகள், கட்டுரை ஆசிரியரின் நோக்கம் ஆகியவை பற்றி நானும் புதுவை திருமுடி திரு. ந. சேதுராமன் அவர்களும் விவாதித்தோம். இதன் விளைவாகக் கட்டுரை ஆசிரியர் காட்டியுள்ள கல்வெட்டுச் சான்று ஒன்றின் மூலத்தைக் காணவேண்டிய கட்டாயம் எனக்கு ஏற்பட்டது.

"பாகூர் நாட்டைச் சார்ந்தவர்கள் திருமணத்தின்போது கோயிலுக்கு ஒரு ஆடு வழங்க வேண்டும் என்று ஆணையிடப்பட்டது. இப்படி ஆடு வழங்கத் தவறியவர்களிடமிருந்து வலுவில் இரண்டு ஆடுகளை எடுத்துக் கொள்ள கணப்பெருமக்களுக்கும் தேவரடியார்களுக்கும் உரிமைதரப்பட்டது."

இச்செய்தியைக் கூறிய கட்டுரை ஆசிரியர் இதற்கு ஆதாரமான கல்வெட்டு எண்ணையும் குறித்துள்ளார். அக்கல்வெட்டு வாசகத்தைக் கீழே தத்துள்ளேன்.

South Indian Inscriptions, Vol. VII, No. 804 [A.R.E. 1902, No. 177]

1 ஸ்வஸ்திஸ்ரீ கன்னர (தேவர்க்கு யாண்)
2 டு22 வேசாலிப்பாடி வடகரை வாகூ(ர்) நா
3 ட்டு மன்றுடிகளே வாகூர் ஸ்ரீ மூலட்(டா) னத்து
4 ப் பெருமானுக்கு நாங்கள் வைய்த்த தன்ம
5 ங் கட்டிலேறப் போம் போது ஒரு ஆடு கு
6 டுத்துக் கட்டிலேறுவோ மாகவு(ம்) (புற) நா
7 ட்டி நின்று வந்து இஞ்ஞாட்டிற் கட்டி
8 லேறு மன்றுடி வசமொரு ஆடு குடுப்ப
9 தாகவும் குடாது திறம்பி (னே) மைக் க
10 ணப்பெரு மக்களுந் தேவரடியாரு மிர
11 ண்டாடு பிடித்துச் கொள்ளப் பெறு
12 வதாகவும் ஒட்டிக் குடுத்தோ மிஞ்ஞா(ட்)
13 (டு) மன்றுடிக(ள்) ளோம் இத்தன்மம் ச
14 ந்திராதித்தவத் நிற்பதாக நிறுத்திக் குடு
15 ப்போமானே(மி)ஞ்ஞா(டு) மதகு செய் கின்
16 ற மதகரோம் ஸ்ரீ ... ..

பாகூரிலுள்ள இக்கல்வெட்டு வாசகத்தைப் படிக்கும்போது எனக்குக் கீழ்க்கண்ட ஐயங்கள் எழுந்துள்ளன.

1 'சோழர் காலத்தில் வரி எதிர்ப்பு இயக்கம்' என்ற தலைப்புக்கு இணங்க, ஆசிரியர் இக்கல் வெட்டையும் சோழர் காலத்ததாகவே கருதிச் சான்றாகவும் காட்டியுள்ளார்.

ஆனால், இக்கல்வெட்டு இராஷ்டிரகூட மன்னனான கன்னர தேவனின் [கிருஷ்ணன் III] 22ஆவது ஆட்சி ஆண்டைச் சார்ந்தது [ஏறத்தாழ கி.பி. 962] என்ற செய்தி இதன் தொடக்கத்திலேயே மிகத் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது.

2 கல் வெட்டில் வரும் 'வாகூர் நாட்டு மன்றுடிகள்' என்னும் வாசகத்திற்கு, ஆசிரியர் 'பாகூர் நாட்டைச் சார்ந்தவர்களி' என்று பொதுவாகப் பொருள் கொண்டு, அந் நாட்டுப் பொது மக்கள் அனைவருக்கும் ஆணையிடப்பட்டதாக குறிக்கின்றார்.

ஆனால், ஆசிரியர் கருதுவதுபோல் மன்றுடி என்பது, பொது மக்கள் அனைவரையும் ஒட்டுமொத்தமாகக் குறிக்கும் சொல்லாகாது. அறவோர்கள் கோயிலுக்கு வழங்கிய ஆடு மாடுகளைத் தம் பொறுப்பில் ஏற்றுக் கொண்டு, அவ்வறவோர்கள் விதித்தவாறு நாள்தோறும் பால் தயிர் நெய் முதலான வற்றைக் கோயிலுக்கு வழங்கி வந்தவர்களைக் (இடையர்கள்) குறிக்கும் சொல்லாகும். இதுகாறும் வெளிவந்துள்ள கல்வெட்டுகளில் இச் சொல் இத்தகையோரைக் குறிப்பதாகவே காணப்படுகிறது.

3 'ஆடு வழங்க வேண்டும் என்று ஆணையிடப்பட்டது.' இக்கருத்தை ஆசிரியர் புலப் படுத்துகிறார்.

ஆனால், கல்வெட்டு வாசகத்தை நோக்க, ஆணையிடப்பட்டதாகக் கருதுவதற்கு இடமில்லை. கல்வெட்டில் 'ஒட்டிக் குடுத்தோம்' என்பது 'உறுதிசெய்து கொடுத்தோம்' என்ற பொருளிலும், 'நிறுத்திக் குடுத்தோம்' என்பது 'அவ்வறம் என்றும் நின்று நிலவுமாறு நிலைநிறுத்திக் கொடுத்தோம்' என்ற பொருளிலும் வருகின்ற வாசகங்களி ஆகும். இங்கு ஒட்டிக் கொடுத்தவர்கள், வாகூர் நாட்டு மன்றுடிகள். அது என்றும் நின்று நிலவ பொறுப்பேற்றுக் கொண்டவர்கள் மதகுவாரியத்தினர். இவ்விரு தொடர்களும் இதேப் பொருளில் வருவதை, பரகூரில் உள்ள வேறு கல்வெட்டு ஒன்றாலும் அறியலாம். அதுவும் கன்னர தேவனின் 22ஆவது ஆண்டைச் சார்ந்ததென்பது கருதத் தக்கது. [S. I. I. Vol. VII, No. 802] ஆதலின், ஆணை எதுவும் இல்லாமலே, மன்றுடிகளே விரும்பி இததன் மத்தைச் செய்தனர் என்பதை, இக்கல் வெட்டு உறுதி செய்கிறது.

எனவே, தாங்களோ அல்லது கட்டுரை ஆசிரியரோ இவற்றுக்கான விளக்கங்களைத் தந்து, எனக்கெழுந்த ஐயங்களைப் போக்கு வீர்கள் என்று எதிர்பார்க்கின்றேன்.

அன்பன்,

[சு. குப்புசாமி]

புதுவை வரலாற்றுச் சங்க உறுப்பினர்.

---

# செய்தி

தருமபுரி மாவட்டம் மகனூர்ப் பட்டியில் ஏராளமான பெருங்கற் புதைவுகள் உள்ளன. அவை தொல் பொருள் ஆய்வுத்துறையாளரால் இதுவரை தோண்டியெடுத்து ஆராயப்படவில்லை. சமீபத்தில் விவசாயியொருவன் நிலத்தைச் சீர்திருத்துவதற்காக அப்பெருங் கற்புதைவுகளுள் ஒன்றைப் பெயர்த்தெடுத்துள்ளார். அதில் பெருங் கற்புதைவு கால மண் ஜாடிகள், பானை ஓடுகள், எலும்புகள், இரும்பு ஆயுதங்கள் ஆகியவை கிடைத்துள்ளன. நாங்கள் பார்த்த ஒரு மண் மேட்டிற்கு அடியில் சுமார் 8 அடி ஆழத்தில் நீண்ட சதுரமாகக் கற்களை நிறுத்தி அதற்குள் இம் மண் ஜாடிகளையும், எலும்புகளையும், இரும்பு ஆயுதங்களையும் வைத்து புதைத்துள்ளனர். அவற்றின் மேலே மூடப்பட்ட கல் சுமார் 1½ அடி கனம் உடையது அவற்றை உளியால் உடைத்து எடுத்திருக்கின்றனர் உள்ளே மேலே கூறிய பொருள்கள் இருந்திருக்கின்றன. அவற்றில் பலவற்றை தோண்டியவர்கள் உடைத்து விட்டனர். அவற்றில் ஒரு ஜாடி உடையாமலிருந்ததை அதன் பழம்பொருள் ஆய்வு முக்கியத்துவத்தை அறிந்த ஒருவர் வாங்கி பத்திரமாக வைத்துள்ளார். அதன் உயரம் சுமார் 1 அடி வாய்ப் பகுதியின் விட்டம் சுமார் 4அங் ஜாடியின் அடிப்பகுதியில் மூன்று குமிழ்கள் உள்ளன இதன் மூடி மட்டும் உடைந்து விட்டது அதனுள் இரும்புத் துண்டுகள், எலும்புத் துண்டுகள் கிடைத்துள்ளன. ஜாடி புதைக்கப்பட்ட இடத்திலுள்ள கல் புதையலின் நீளம் சுமார் 8 அடி. ஆழம் சுமார் 2½ அடி. அகலம் சுமார் 5 அடி

மகனூர்ப்பட்டியின் நாகரிகம் பரமகிரியைப் போன்று மூன்று கட்ட அமைப்புள்ளது.

ச. வரதராஜுலு

## 30 லட்சம் ஆண்டிற்கு முன் வாழ்ந்த மனிதனின் எலும்புக்கூடு எத்தியோபியாவில் அகப்பட்டது.

ஓர் அனைத்துலக ஆய்வாளர் குழு, வடகிழக்கு இத்தியோபியாவில் ஒரு அரை குறை மனித எலும்புக் கூட்டைக் கண்டு பிடித்துள்ளது. அதன் காலம் 30 லட்சம் ஆண்டுகள். மனிதன் என்பதற்கு homo sapiens என்பது விஞ்ஞான அருஞ்நூல், இவ்வெலும்புக் கூட்டை Homonid எலும்புக் கூடென்று அழைக்கிறார்கள். ஆப்பிரிக்காவில்தான் மிகப்பழைமையான மனித எலும்புக் கூடுகள் கிடைத்திருக்கின்றன. அவற்றுள் எல்லாவற்றிலும் பழைமையானது இதுதான் என்று அக்குழு கூறியது.

இக்குழுத் தலைவர்களான தெய்டு ஜொஹான்ஸன் என்னும் அமெரிக்க மானிடவியல் ஆய்வாளரும், மாரிஸ்தயீப் என்ற பிரெஞ்சு ஆய்வாளரும், இந்த அபூர்வமான கண்டு பிடிப்பை ஒரு ஆய்வாளர் கூட்டத்தில் அறிமுகம் செய்து வைத்தார்கள். இவ்வெலும்புக் கூட்டின் உயரம் மூன்றடிக்குச் சற்று அதிகமாக உள்ளது. இது கல்லிடையில் எலும்பாகக் காணப்படுகிறது. இதனை இவ்விரு ஆய்வாளர்களும் குள்ளமான ஒரு பெண்ணின் எலும்புக் கூடு எனக் கருதுகின்றனர்.

ஆப்பிரிக்க எலும்புக் கூடுகள் பலவற்றை அகழ்ந்தெடுத்து ஆராய்ந்த ஆங்கில மானிடவியல் ஆய்வாளர் லூயி. எஸ். பி. லீக்கி என்பவரின் மகனான ஆய்வாளர் ரிச்சர்டு லீகி, இவ்வெலும்புக்கூடு ஹோமோ (புராதன மனித) எலும்புக் கூடன்று என்று ஐயம் தெரிவித்துள்ளார். அதற்குக் காரணம், இவ்வெலும்புக்கூட்டின் மண்டையோடு கிடைக்கவில்லை. மண்டையோடு இல்லாதபோது எலும்புக் கூட்டை ஹோமோ எலும்புக்கூடு என்று முடிவு செய்வது விஞ்ஞான ரீதியான முடிவாகாது, என்று கூறினர். அதன் பின் 17 உறுப்பினர் கொண்ட இவ்வாராய்ச்சிக்குழு இவ்வெலும்புக்கூடு homo வினுடையது என்று சொல்லத் தயங்குகிறார்கள். ஆயினும் அவர்கள் இது ஒரு குள்ளமான மனித இனப் பெண் என்றே, ஆஸ்ட்ரோ பிதிகஸ் என்ற மனித இனத்தோடு உறவுடைய ஒரு குரங்கு-மனிதனுடைய எலும்புக் கூடென்றே கருதுகிறார்கள். இந்த ஆரட்ரே பிதிகஸ் ஹோமோவோடு சமகாலத்தது. ஜொஹான்ஸன், லீக்கியும், நாங்களும் சேர்ந்து 'ஹோமோ' என்ற

சொல்லுக்கு ஒரு வரையறையை உருவாக்கப் போகிறேம். இப்பொழுது ஆய்வாளர்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட வரையறை இல்லே யென்று கூறினர். லக்கியும் அவரும் இந்த எலும்புக்கூட்டை ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வருவார்கள். இத்தியோபியாவிலுள்ள அபார் [Afar] என்ற இப் பள்ளதாக்கு உலகில் மனிதன் பலலட்ச வருஷங்களுக்கு முன்பிருந்து எப்படி பரிணம மாற்றம் அடைந்து வந்திருக்கிமுன் என்பதை விளக்கும் சான்றுகளைத் தருகிறது இங்கிருந்து பல மனித எலும்புக் கூடுகள் அகழ்ந் தெடுக்கப் பட்டுள்ளன. இப்பகுதியே உலகில் மிகப்பண்டைக் காலமுதல் மனித இனம் வாழ்ந்து வந்த தலமாகும்.

இவ்வாய்வு குழுவில் சிலர், இதற்கு 'லூயி' என்று பெயர் வைத்துள்ளார்கள். ''லூயி உலகிலேயே பழமையான ஹாமினிட் எலும்புக்கூடு மானிடவியல் உலகையே இவள் தலைக்கீழாக புரட்டுவாள்'' என்று சொல்லுகிறார்கள். ஜொஹான்ஸனும் அவரது மாணவரும் இந்த எலும்புக் கூட்டின் துண்டு எலும்புகளை 20 ச. கஜ பரப்பில் கண்டுபிடித்தார்கள். கிடைத்த எலும்புகளின் விவரம்:

1 வலது கையின் ஒரு பகுதி
2 கால்கள் பெரும்பாலும்.
3 கடைவாய் எலும்பு, சில பற்களுடன்.
4 சில மண்டையோட்டு சிதறல்கள்.
5 சில விலாவெலும்புகள்.
6 இடுப்பெலும்பில் பாதி.
7 முன்னெலும்பில் முழுவதும்.

மொத்தத்தில் 40 சதவிகிதம்.

எலும்புக்கூட்டு எலும்புகள் கிடைத்துள்ளன. இடுப்பு எலும்பும், முன் எலும்பும்தான் இது பெண்ணின் எலும்புக்கூடென முடிவு செய்யத் தூண்டின.

எலும்புகள் கிடைத்த இடம், தலம் 288 என்று அழைக்கப் படுகிறது. இது ஸாண்ட்ஸ்டோன் பாறைகள் நிறைந்த இடம். கல்லிடை எலும்புகள் மிகப்பல இவ்விடத்தில் கிடைத்துள்ளன. எலி, அணில், முதலே, பன்றி, யானை, மான், நண்டு முதலிய விலங்குகளின் கல்லிடைச் சின்னங்கள் (Fossils) கிடைத்துள்ளன. தரை அகழ்வாய்வாளர்கள், இந்த பாறைகளின் தோற்றக் காலத்தை 30 லட்சத்திலிருந்து 32.5 லட்சம் வருஷங்களாக சோதனைகள் மூலம் கணக்கிட்டுள்ளன. இங்கே ஒரு ஏரி இருந்திருக்கிறது. அது 30 லட்சம் வருஷங்களுக்கு முன் இருந்தது.

இந்த ஆய்வுக்குழு 1974 ல் மட்டும் 10 க்கு மேற்பட்ட ஹாமினிட் எலும்புக் கூட்டுப் பகுதிகளைக் கண்டுப் பிடித்துள்ளது. தரீப் என்னும் பிரெஞ்சு ஆய்வாளர், இவை 5 வேறுபட்ட கால கட்டங்களைச் சேர்ந்தவை என்று கூறுகிறார். சென்ற ஆண்டில் 30 அல்லது 40 லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சில எலும்புகள் கிடைத்தன.

கென்யாவில் நூற்றுக் கணக்கான பண்டைய எலும்புக் கூடுகளை அகழ்ந்தெடுத்த தந்தையும் மகனுமான லீக்கிகள், கண்டு பிடித்த அபூர்வமான மனித எலும்புக்கூடுகள் இது வரை உலக விஞ்ஞானிகளால் அபூர்வமானதாகக் கருதப்பட்டன. ஆனல், இந்த புதிய கண்டுபிடிப்புகள் அந்த அதிசய உணர்வை பங்கு போட்டுக் கொண்டன. ஆயினும் இங்கு முழுமையான மண்டையோடு கிடைக்கவில்லை. பகுதிகளை வைத்து, மண்டையோட்டை நிர்மாணிக்க வேண்டும்.

லீக்கிகள், நூற்றுக் கணக்கான மண்டையோடுகளை கென்யாவிலுள்ள ருடால்ஃப் ஏரியிலிந்து கண்டுபிடித்துள்ளனர். அவற்றுள் காலத்தால் முந்தியது 28 லட்சம் ஆண்டுகளுக்கு முந்தியதாகும். ஆனல் லூயியைப் போல 40 சதவிகிதம் எலும்புக் கூட்டை அவர்கள் கண்டுபிடித்ததில்லை.

N.P. இந்த ஆய்வுப் பயணக்குழு மூன்று ஆண்டுகளாக அபார் பகுதியைத் தோண்டிப் பார்த்தது. 1975 அக்டோபரில் எண்ணிக்கையில் அதிகமான ஆய்வாளர் கொண்ட குழுவொன்று இங்கே திரும்பிவரும். இன்னும் இந்தப் பகுதிகளிலேயே பல தலங்களை அகழ்ந்து ஆராயும்.

வாஷிங்க்டன்போஸ்டு
செய்தி:- நா. வானமாமலே.

## மணலூர் நாடு

சீ. இலட்சுமணன்.

பண்டைத்தமிழகம் மண்டலங்களாகவும் நாடுகளாகவும், வளநாடுகளாகவும், கூற்றங்களாகவும் பிரிக்கப் பட்டிருந்தது. அத்தகைய




நாடுகளில் மணலூர் நாடு என்பது மிகவும் சிறிய பரப்பினை உடையது. இது இராமநாதபுர மாவட்டம்-திருப்பத்தூர் வட்டம் பிரான்மலைக்கு வடபுறம் உளது. பிரான்மலைக்கு வடப்புறப்பகுதி பண்டைக் காலத்தில் புறமலை நாடு என வழங்கப் பட்டது. இப்புறமலை நாட்டில் சில இடங்களில் சில ஊர்கள் இருந்ததற்கான சுவடுகள் காணப்படுகின்றன. முது மக்கள் தாழிகள் சில இடங்களில் உள்ளன. வெளியங்குடிப்பட்டி, நெடுவயல், முதலிய ஊர்களில் குலோத்துங்கன் ராசாதிராஜன் காலத்து கல்வெட்டுகள் உள வண்ணூர் இரும்பு என்ற ஊருக்குப் பக்கத்தில் கோவில் ஒன்று அழிந்து காணப்படுகிறது. சிவலிங்கமும் சிலகற்களும் அங்குள்ளன. அங்குள்ள கல்வெட்டு ஒன்று கீழ்க் கண்டவாறுளது.

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள்-
(சுவஸ்திஸ்ரீ)
செரி சொணாடு வழங்கியருளிய
சுந்தரபாண்டிய தெவற்கு யா
ஆண்டு ஒுடு 13 ஆவது மணலூர் நாடு
பூண்டியான சிபுண்டரிகநல்லூர்
மற மாணிக்க ஈசுவர
நாயனாருக்கு [3] பூண்டி ஊரொமும்
[4] முசுகுன்றத்தூரோமும் [5] கி நலாணம் ஊரொமும் [6] பாலைக்குறிச்சி
ரொமும் இன் நால்லூரொமும் நாங்க
நாயனார் மறமாணிக்க ஈ —வ—
— யாறக்கு ... ... ... ... ... ... ... ... ...
... ... .... ... ... ... .... ... ... ...ஆட்டை.

1 இக் கல்வெட்டின் காலம் - சோழ நாடு வழங்கியருளிய சுந்தர பாண்டியனின் 13 வது ஆட்சியாண்டு (A.D. 1229).

2 மணலூர் நாடு:- தற்போது கட்டுக்குடிபட்டியின் அருகே மிகச்சிறிய கிராமமாக மணலூர் உளது.

3 பூண்டி:- பூண்டியான புண்டரிக நல்லூர் கல்வெட்டுடைய கோவில் இருந்த ஊர்-நல்லூர் என வழங்கப் படுகிறது.

4 முசுகுன்றத்தூர்:- குன்றத்தூர் என வழங்கப்படும் சிறிய கிராமம்.

5 இடத்தைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

6 பாலைக்குறிச்சி:- 2. பாலகுறிச்சி—திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்தது.

இவையனைத்தும் மணலூரைச் சுற்றி சுமார் 5-மைல் சுற்றளவிற்குள் உள்ளன.

## மனிதனும் விலங்குகளும்.

(சோவியத் அறிவியல் கழகத்தின் உறுப்பினர் விளாதிமிர் ஸோகலாவ் அவர்களுடன் பேட்டி.)

எத்தனையோ துறைகளில் அனைத்துலக மாநாடுகள் நடைபெறுகின்றன. உலக விஞ்ஞானிகள் தங்கள் ஆய்வுகளின் முடிவுகளை விவாதித்து கொள்கைகளை உருவாக்குகிறார்கள். ஆனால் மனித - விலங்கு உறவு பற்றிய ஓர் அறிவியல் மாநாடு முதன் முதலாக மாஸ்கோவில் இவ்வாண்டு கூடியது. அதற்கு தீரியலாஜிகல் மாநாடு என்று பெயரிட்டார்கள். தீரியன் என்றால் கிரேக்க மொழியில் விலங்கு என்பது பொருள். 54 நாடுகளிலிருந்து வந்த 1000 விஞ்ஞானிகள் இம்மாநாட்டில் பங்கு கொண்டனர். 6 பிரிவுகளில் 17 ஆய்வரங்குகள் நடை பெற்றன. பாலூட்டிகளின் தோற்றுவாய், அவற்றின் உடலுறுப்பு அமைப்பு, அவற்றிக் சூழ்நிலை இயையு, ஆகிய பல தலைப்புகளில் ஆய்வுக்கட்டுரைகள் படிக்கப்பட்டு, விவாதிக்கப்பட்டன. இப்பேட்டியில் கருத்துக்கூறுகிற விளாதிமிர் ஸோகலாத் இப் புதிய அனைத்துலகமாநாட்டிற்குத் தலைவராயிருந்தார்.

வினா — பாலூட்டிகளைப்பற்றி பெரிதும்அக்கறை கொண்டு விஞ்ஞானிகள் ஆராய்வதற்குக்காரணம் என்ன?

விடை — விலங்குகள் தற்காலத்தில் அன்டார்ட்டிகா தவிர எல்லாக் கண்டங்களிலும் பரவியுள்ளன, அவை, தரையின்மேல் தரைக்குக்கீழ், நீரினுள், காற்றில், ஆகிய எல்லா சூழல்களிலும் வாழ்வதற்கேற்ற முறையில் தம்மை மாற்றிக் கொண்டுள்ளன. நமக்கு ஊன், உரோமம், பால், தோல் முதலிய நுகர்பொருள்களை அளிக்கும் வீட்டு விலங்குகளை நாம் அறிவோம்' சிலபாலூட்டிகள் பயிர்களை அழிப்பவை, நமது வாழ்க்கையில் விலங்குகள் முக்கியமான பொருளாதார, விளைவுகளை ஏற்படுத்துகின்றன. அவைதாமே உணவாவதால், உலகமுழுதும் அவற்றின் மீது அக்கரை கொண்டுள்ளது.

வினா — பாலூட்டிகள் பற்றிய ஆராய்ச்சியில் சோவியத் விஞ்ஞானிகளின் பங்கு என்ன?

விடை — மனித - விலங்கு உறவு ஆய்வாளர்களின் முதல் மாநாடு சோவியத் நாட்டில

நடைபெறுவது தற்செயலான ஒன்றல்ல. இந்தத்துறையில் சோவியத் ஆய்வாளர்கள் அடைந்துள்ள வெற்றிகள் உலக மறிந்தவை. முழுமையாக அழியக் கூடிய நிலையிலிருந்த எத்தனையோ அபூர்வமான உயிரினங்கள், சோவியத் நாட்டில் அழிவினின்றும் பாதுகாக்கப்பட்டுள்ளன. உதாரணமாக 20-ம் நூற்றுண்டின் தொடக்கத்தில் (Saigo antelope) எனும் மரியியல் மானினம் முழுவதும் அழியக் கூடிய நிலை தோன்றியது. இதனைப் பாதுகாக்கும் முயற்சியில் நாம் முழு வெற்றியடைந் துள்ளோம். தற்பொழுது அந்த இனம் நம் நாட்டில் 20லட்சத்திற்கும் மேற்பட்ட எண்ணிக்கையாக வளர்ந்து நாட்டின் தேசிய வருமானத்தை உயர்த்துவதற்கு பெருமளவு உதவுகிறது. சோவியத் மண்ணே அவற்றின் இயற்கையான உறைவிடமாக அமைந்துள்ளது. எனவே இந்த மாநாட்டின் தலைச்சின்னமாக (emblem) Saigo, (ஸைகோ) எனும் அந்த விலங்கின் தலையே அமைக்கப்பட்டுள்ளது. இது தவிர, கரிய நிறமுடைய மானினம் (Sable), Deaver எனும் நீர்நாயினம் - இவையும் பாதுகாக்கப்பட்டுள்ளன்.

மனித - விலங்குறவு மருத்துவத்துறையிலும் சோவியத் நாடு நன் முறையில் வளர்ச்சியடைந்துள்ளது நாட்டின் பல பாகங்களில் பல விரிவான அறிவியல் ஆய்வுக்கழங்கள் நிறுவப் பட்டு, இயற்கையின் செம்மை பேணப்படுகிறது. விலங்குகளைப் பாதுகாப்பதிலும் நாம் விசேஷமான அக்கறை காட்டி வருகிறோம். அபூர்வமான விலங்கினங்களைப் பேணி வளர்ப்பதற்காக பல இயற்கைப்பாதுகாப்பிடங்கள் அமைத்துள்ளோம். சில இடங்களில் விலங்குகளை வேட்டையாடுவதையும் தடை செய்துள்ளோம்.

வினு — இது தொடர்பாக அறிவியல் ஆய்வாளர்கள் செய்ய வேண்டிய பணிகள் யாவை?

விடை! பொருளாதார நடவடிக்கைகளில் மனிதன் பெருமளவு விலங்குகளைச் சார்ந்துள்ளான். இதனால், பல்வேறு இனங்கள் அழிந்துபட்டிருக்கின்றன. அல்லது நலிவடைந்துள்ளன. இந் நிகழ்ச்சிகள், பெருமளவு மனிதனைப் பாதிக்கின்றன. உதாரணமாக, ஒல்கா நதிப் படுகையிலும், வேறு சில பகுதிகளிலும் சோஃபர் எனும் நிலத்தினைத் தோண்டும் ஆமையினம் பயிர்களுக்கு பெருத்த சேதத்தை விளைத்திருக்கிறது. வெளிப்பார்வைக்கு மிகச் சாதுவாக தோன்றும் நீர் எலி - உலகமெங்கும் பயிர்களில் 30 சதவித அளவினை அழித்திருக்கிறது. மார்மாட் எனும் அணில் இனம் பிளேக்நோயினை பரப்புகிறது. பெரும் நாசத்தை விளைவிக்கும் இவ்வகை விலங்குகளை ரசாயன முறைகளினுலேயே கட்டு படுத்த முடிகிறது. ஆனாலும் இம்முறைகள் மனித இனத்திற்கும் ஆபத்து விளைக்கின்றன. எனவே உயிரின வாழ்வு அமைப்புகளை ஆராய வேண்டியது இன்றைய ஆய்வாளர்களின் முக்கிய பணியாகும்.

இது தவிர, மனித இனத்திற்கு தேவையான பொருள்களை இயற்கையினின்றும் மனிதனது சுற்றுப்புற உறவு அமைப்புகளின்றும், அவை நசிந்து விடாமல், பெற வேண்டியது அவசியமாகிறது.

எடுத்துக் காட்டாக - சில ஆண்டுகளுக்கு முன்னர் வெள்ளை (குழி) முயல்கள், ஆஸ்திரேலியாவிற்கு இறக்குமதி செய்யப்பட்டு, வளர்க்கப்பட்டன. ஆனால் அவற்றின் வளர்ச்சி அந்நாட்டின் கால் நடைகளுக்கு புல் உணவு கிடைக்க முடியாத அளவிற்கு மேய்ச்சல் நிலங்களில் அழிவை உண்டாக்கின. ஆஸ்திரேலியா நாடு மிகக் கடுமையான பாதிப்பினை அதனால் உணர்ந்தது. சில விலங்குகளின் இத்தகைய வளர்ச்சி ஆபத்தினை விளைப்பனவாக அமைந்து விடுவதால் அவை விஞ்ஞான பூர்வமாக ஆழ்ந்து ஆராயப்பட வேண்டியிருக்கிறது.

என்னுடைய கருத்தினைச் சொல்வதானுல் இயற்கையிலுள்ள விலங்கினங்களின் வாழ்க்கை அமைப்பினை ஆராய வேண்டியது மிக முக்கியமான விஞ்ஞானப் பணியாகும். விலங்குகளை மனிதன் தனது கட்டுப் பாட்டிற்குள் கொடர இவ்வகை ஆய்வு நிச்சயமாக உதவும். இதனுல் மனிதனுக்கு, மனித இனத்திற்கு தேவையான பொருட்களை அவைகளினின்றும் பெற முடிவதோடு, அந்த இனங்களை பாதுகாக்கவும் முடியும்.

சர்வதேச அறிவியல் ஆய்வாளர்களின் பரஸ்பர ஒத்துழைப்பு இத்துறையில் மிக முக்கியமானதாகும் அதன்முதல் நடவடிக்கையே இந்த மாநாடு. நமது பூமிக்கோளின் மீது மனிதன்கொள்ள வேண்டிய அக்கறையினையே இதுமீண்டும் நமக்கு நினைவுறுத்துகிறது.

தமிழாக்கம்-முத்துமோகன்.

(With acknowledgments to Gleanings from the Soviet Press—supplied by Information Dept, USSR. consulate general in Madras)